E-mail : omsakthieditorial@gmail.com
https://archive.org/search.php?query=omsakthi

# ஓம் சக்தி

ஜுலை 2018
விலை ரூ.15

நிறுவனர் :
நா. மகாலிங்கம்



அருள்மிகு லட்சுமி நாராயணன்



டாக்டர் நா. மகாலிங்கம்

*2005-இல் தமிழ்நாட்டில் உடைக்கட்டுப்பாட்டு விதிகள் பரவலாகக் கல்லூரிகளில் உருவாக்கப்பட்டன. அதற்கான காரணம், சுடிதார், சல்வார் கம்மீஸ், லெகிங்ஸ், ஜீன்ஸ் பேண்ட், பனியன் என்பவற்றை அணிந்து கொள்கிற பழக்கம் இளம் பருவத்து மாணவிகள் மத்தியில் பரவி வந்தது. அதன் விளைவுகள் வக்கிர மானவையாக உணரப்பட்டன. இதனால் சில அத்துமீறல் சம்பவங்கள் பற்றிய செய்திகள் வெளியாயின. இதன் காரணமாகத்தான் உடைக் கட்டுப்பாட்டைக் கல்லூரிகள் வலியுறுத்தின. கண்ணியமான உடை அணிவதை யாரும் கடுமையான கட்டுப்பாடு என்று கூற மாட்டார்கள்.*

*இதனைப் பற்றி 13 ஆண்டுகளுக்கு முன் சிந்தித்த அருட்செல்வர், தனது கருத்துக் களை எழுதினார். இப்போதும் அது கவனத்திற்குரியதாக இருப்பதை, 'துக்ளக்' ஆசிரியரும், சிந்தனையாளருமான திரு. எஸ். குருமூர்த்தி அவர்கள் 'துக்ளக்' 30.5.2018 இதழில் எழுதியுள்ளதோடு இணைத்து இதனைப் படிக்கலாம்.*

*– இ.ஆர்*

# மாணவ - மாணவிகளுக்கு உடைக் கட்டுப்பாடு!

மருத்துவத்துறையில் வெள்ளை கோட் அணி கிறார்கள். காவல் துறையில் காக்கி உடை அணி கிறார்கள். வழக்குரைஞர்கள் கருப்பு அங்கி அணி கிறார்கள். இதேபோல ஆசிரியர்களுக்கென்று, தனித்துவமான உடை அணிவதுதான் தக்கதாக அமையும்.

மாணவர்களுக்குப் பள்ளிச் சீருடை பெருந் தலைவர் காமராஜர் ஆட்சியில்தான் அமலாக்கப் பட்டது. அதற்குக் காரணம், பள்ளிகளில் வசதி யான மாணவர்கள் விலை உயர்ந்த உடைகளை அணிவதும், வசதியில்லாதவர் பழைய உடைகளை அணிவதுமான நிலைமை இருந்தது. இது பொரு ளாதார ஏற்றத்தாழ்வைப் பளிச்சென்று காட்டியது. ஏற்றத்தாழ்வு உணர்வு பள்ளிக் குழந்தைகள் மன தில் பதியாமல் இருக்க முதலமைச்சர் காமராஜர் பள்ளிகளில் சீருடையை அறிமுகப்படுத்தினார்.

இப்போது பொறியியல், மருத்துவம், விவ சாயக் கல்லூரிகளில் படிக்கும் மாணவர்கள் குறிப் பாக மாணவிகள் அணிகிற ஆடைகள், பார்ப்பவர் களின் மனதில் ஒருவித வக்கிர உணர்ச்சியை ஏற்படுத்துவதாகக் கருதப்படுகிறது. அதற்கான காரணம், இன்றைய நவீன சினிமாக்களின் கதாநாயகர்களும், கதாநாயகிகளும் அணியும் விதவிதமான உடைகள்தான்.

ஆடைக் கட்டுப்பாட்டில் மிகவும் கண்டிப்பாக இஸ்லாம் சமயம் இன்றும் இருந்து வருகிறது. "பர்தா" அணிகிற பழக்கம் முஸ்லீம் பெண்கள் மத்தியில் இருந்து வருகிறது. பெண்களைப் பார்க் கும் ஆண்களுடைய மனதில் வக்கிர உணர்ச்சி எதுவும் வந்துவிடக்கூடாது என்பதற்காகவே, நபிகள் பெருமான் இதை நடைமுறைப்படுத்தினார் என்கிறது சரித்திரம்.

பர்தா உடை பெண்களுக்குச் சிரமத்தைத் தரக்கூடியதாகவும், அதே நேரத்தில் அடக்கத் தோடு ஆடை அணிவதில் கவனம் செலுத்தப்பட் டுள்ளது என்பது கவனத்தில் கொள்ள வேண்டும். இன்றைய கல்லூரி மாணவிகளுடைய இறுக்க மான உடைகள், சகஜமானதாக இல்லை என்பதை யாரும் மறுக்க முடியாது.

மாணவிகள் மட்டுமல்ல, மாணவர்களும்கூட இறுக்கமான உடைகளை அணிகிறார்கள். இறுக் கமான உடைகளை மாணவர்கள் உடுத்துகிற



# பெண்களும், கண்ணியமான உடையும்...

– 'துக்ளக்' ஆசிரியர் எஸ். குருமூர்த்தி கருத்து...

'பெண்களும், கண்ணியமான உடையும்' என்ற தலைப்பில் 30.5.2018 நாளிட்ட 'துக்ளக்' இதழில் அதன் ஆசிரியர் திரு. எஸ். குருமூர்த்தி கூறியுள்ளதாவது...

"ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் கண்ணிய மற்ற உடையை அணியக்கூடாது. ஒவ்வொரு இடத்துக்கும் இந்த இந்த உடை என்பது இந்த நவீன காலத்திலேயே ஏற்கப்படுகிறது. ஒரு விருந்துக்குப் போக இன்ன உடை, டான்ஸ் ஆட இந்த உடை, நாடாளுமன்றம் போக இன்ன உடை என்று சில முறைகள் இருக்கின்றன. அதனால் தெருவில், பொது இடங்களில், அதுவும் பெண்கள் எந்த உடை வேண்டுமானாலும் அணிந்து கொண்டு போகலாம் என்கிற பேச்சைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

ஓரிரு ஆண்களின் முன், ஒரு பெண்மணி உள்ளாடை அணியாமல் ஸ்கர்ட் போட்டுக்கொண்டு ஸ்டைலாக வந்த படத்தை, 'டைம்ஸ் ஆஃப் இந்தியா' பத்திரிகை அவருடைய மானத்தை மறைத்து வெளியிட்டது. அந்த அளவுக்கு உடை அணியும் உரிமை வக்கிரப்பட்டுப் போயிருக்கிறது. நம்முடைய கலாசாரத்தில் கண்ணியத்தையும் பெண்களையும் பிரித்துப் பார்ப்பது கடினம். கண்ணியமான உடை – ஒரு பெண்ணுக்கு மரியாதையையும், பாதுகாப்பையும் கொடுக்கும் என்பதில் சந்தேகமே இல்லை. தவிர, அணியும் உடைக்கும் கூச்சத்துக்கும் நிறைய சம்பந்தம் இருக்கிறது. உடல் கூச்சம் குறையக் குறைய, உடல் தெரியுமாறு குறைவாக உடைகளை அணிவது பொழுது, அதனால் மனதில் பல விபரீதங்கள் விளைகின்றன. குற்ற நடவடிக்கைக்கு அவை தான் அடிப்படை. இந்தப் போக்கு, மாணவ – மாணவிகளின் மத்தியில் தொடர்ந்து நீடிக்குமா னால், கல்வியில் அவர்கள் கவனம் செலுத்துவது குறைந்து விடலாம்.

கல்லூரி மாணவிகள் அணியும் இறுக்கமான ஜீன்ஸ் பேன்ட், டி–சர்ட் மற்றும் கையில்லாத சர்ட், குட்டைப் பாவாடை மற்றும் செல்போன் ஆகிய அனைத்தையும் தடை செய்வதாக அண்ணா பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் டி. விஸ்வநாதன், பதவியேற்ற ஒரு சில நாட்களிலேயே உத்தரவு பிறப்பித் தார்.



கு. காமராஜர்

உடை விதிமுறை என்பது நாகரிகத்தை நோக்கி நடப்பதற்கு எடுத்து வைக்கப்படுகிற முதல் அடி யாகும்.



டி. விஸ்வநாதன்

கல்வியினுடைய முதல் நோக் கமே, அறிவு பெறுவதற்குச் சமமாகக் கட்டுப்பாட்டையும் பெறுவதுதான். மாணவப் பருவத்தில் கட்டுப்பாடற்ற ஒரு மனப்போக்கு வளர்வதற்கு அனு மதிக்கக்கூடாது.

அத்தகைய கட்டுப்பாட்டில் வருவதுதான் உடைகளும். நீண்ட நெடுங்காலப் பாரம்பரியத்தில் உருவான இவ்வுடைகள் தேசத்தின் கலாச்சாரத் தைப் பிரதிபலிப்பவை.

சல்வார் கமீஸ் மற்றும் சுடிதார் உடைகளை அணிகிற பொழுது, பெண்கள் மங்களகர மாக இருக்கிறார்கள். ஆனால், இன் றைக்குக் கல்லூரிப் பெண்கள் அணிகிற நவீன இறுக்கமான ஆடைகள்தான் பிரச் சனைக்கு உரியவையாக உள்ளன. அவற்றை மட்டும் தவிர்க்குமாறு அவர் களிடம் கூறப்படுகிறது.

அண்ணா பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் டி. விஸ்வ நாதன் உடை ஒழுங்குமுறைக்கான விதியை வெளியிட்டு இரண்டு மாதங் களாகிவிட்டன. அரசியல் தலைவர் களும் சமயத் தலைவர்களும் வெளிப் படையாகவே இதனை வரவேற்ற தாகத் தெரியவில்லை.

உண்மையில் இந்த உடை ஒழுங்கு முறை மாணவ – மாணவியருக்கு மிகுந்த பயன் தரக்கூடியது. அவர்

அதிகமாகும். அதேபோல உடை அளவு குறையக் குறைய, உடல் கூச்சம் குறையவே செய்யும்.

பெண்ணுரிமை என்று பாரதி கூறியது, இப்போது படிப்பது, வேலைக்குப் போவது என்கிற விஷயங்களை விட, எவ்வளவு குறைவாக உடை அணியலாம் என்பதை ஒட்டியே பேசப்படுகிறது. பெண் விடுதலையே கண்ணிய மான உடையிலிருந்து விடுதலை என்கிற அளவுக்கு வக்கிரமாகச் சித்தரிக்கப்படுகிறது. இந்தப் போக்குக்கு அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு போன்ற பெண்களின் நற்குணங்களைக் கற்கால விஷயங்கள் என்று ஒதுக்கும் சினிமா, காட்சி ஊடகங்கள், பத்திரிகைகள், தாராளவாதிகள், பெண்ணுரிமைவாதிகள்தான் முக்கியக் காரணம். அவர்கள் கூச்சமில்லாத, ஏன் வெட்கமில்லாத ஒரு சமுதாயத்தை உருவாக்கி வருகிறார்கள்.

ஆனால், இன்றைக்கும் கூச்சம் இருப்பவர்கள் கண்ணியமான உடை அணியத்தான் செய்கிறார்கள். கூச்சம் குறைவாக இருப்பவர்கள் கவர்ச்சியான உடை அணிகிறார்கள். அவர்களுக்கு அந்த உரிமை இருக்கிறது என்பதை மறுக்க முடியாது. ஆனால், எல்லா நேரங்களிலும், எல்லா இடங்களிலும் அப்படி இருக்கலாமா என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பெண்கள் குடும்பத்துடனோ, மற்ற பெண்களுடனோ போகும்போது எந்த உடை அணிந்தாலும் அவர்களுக்குப் பாதுகாப்பு இருக்கும். அப்படி உடை அணியும் பெண்கள் பாதுகாப்புடன் இருக்க வேண்டும்.

'என் உடலை வெளிக்காட்டும் கண்ணியமற்ற உடைகளை அணிந்து கொள்வேன். யாருடனும், எந்த நேரத்திலும் தனியாகப் போவேன். அதற்கு எனக்கு உரிமை இருக்கிறது. ஆனால், நான் எங்கு போனாலும் என்னை அரசாங்கம் பாதுகாக்க வேண்டும்' என்பது எந்த விதத்திலும் நியாயம் இல்லை. நடை, உடை, பாவனை என்கிற மூன்று அம்சங்கள் கண்ணியமானவர்கள் எல்லோருக்கும் பொருந்தும். பெண்களுக்கு நிச்சயம் பொருந் தும். அதில் இடம், பொருள், ஏவல், எந்த இடத்தில் எது செய்யலாம், எது செய்யக்கூடாது என்பதும் அடங்கும்."

களை நம்பிப் பணத்தைச் செலவழித்துப் படிக்க வைக்கும் அவர்களுடைய பெற்றோர்கள் இதனை வரவேற்கிறார்கள்.

பெற்றோர்களாலேயே பிள்ளைகளிடம் வலி யுறுத்திச் சொல்ல முடியாத இந்த உடைக் கட்டுப் பாடுகளை, துணைவேந்தர் துணிச்சலாகச் செய் துள்ளதை மனதளவில் பெற்றோர்கள் பாராட்டு கிறார்கள்.

ஆனால், இதிலுள்ள வேதனை கலந்த வேடிக்கை என்னவென்றால், அனைத்திந்திய ஜன நாயக மாதர் சங்கம் இந்த ஆடை விதிமுறை தேவையற்றது என்று விமர்சனம் செய்துள்ளது. அரசாங்கத்தையே தேர்ந்தெடுக்கும் உரிமையுள்ள வர்களுக்கு ஆடையைத் தேர்ந்தெடுக்கும் உரிமை யும் உண்டு என்று இந்த ஆபாச உடைகளை அணிவதற்கு ஆதரவாகப் பேசுகிறது.

இதேபோல, இந்திய மாணவர் சங்கமும் உடையை வைத்து ஒருவருடைய கல்வியை மதிப்பிட முடியாது என்று அறிக்கை விட்டுள்ளது. உடை விதிமுறைகளுக்கு ஆதரவு தெரிவிக்காமல் இப்படி விமர்சனம் செய்வது வேதனையாக உள்ளது.

ஆகவே, பெற்றோர்கள் தங்கள் வீடுகளில் இதுகுறித்துத் தங்கள் பிள்ளைகளோடு விவாதிக்கலாம். தெரு மன்றங்களில் கூட்டம் கூடி இதுகுறித்து விவாதிக்கலாம். இதேபோல, சேவை நிறுவனங்களான அரிமா சங்கம், ரோட்டரி சங்கம் முதலிய சங்கங்களிலுள்ள பெற்றோர் – உறுப்பினர் களும் இதுகுறித்து விவாதிக்கலாம்.

செல்போன் என்பது ஒரு நவீன விஞ்ஞானக் கருவி. புயல் வீசுகிறபோது, தீப்பிடிக்கிறபோது அவசர உதவிக்கு அதைப் பயன்படுத்துவதில் தவறில்லை. மருத்துவர்கள், வழக்குரைஞர்கள், பொறியாளர்கள், காரோட்டிகள் கைகளிலுள்ள செல்போன்கள் சரியான முறையிலேயே பயன் படுத்தப்படுகின்றன.

உடைக் கட்டுப்பாட்டை எதிர்ப்பவர்கள், இதைத் தனி மனித சுதந்திரம் சம்பந்தப்பட்டதா கவும், அதற்குள் பல்கலைக்கழகம் தலையிடுவதா கவும் தவறாகக் கருதிக் கொண்டு இந்த விதி முறைகளை அவசரப்பட்டு விமர்சிக்கிறார்கள்.

சுதந்திரம் என்பது சுயக்கட்டுப்பாடுதான். பிறர் நம்மைக் கட்டுப்படுத்தினால், அது சர்வாதி காரமாக இருக்கலாம். ஆனால், நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொண்டால், அதுதான் சுதந் திரம். இதற்கான பயிற்சியை மாணவப் பருவத்தில் தர வேண்டும்.

●




புற்றுநோய் எனப்படும் கேன்சர் என்பது, ஆட்கொல்லி நோயாகும். இந்நோய் தொற்றுநோய் அல்ல. பரம்பரை நோயுமல்ல. எவருக்கு வேண்டுமானாலும் இந்நோய் ஏற்படலாம். எந்த வயதிலும் இந்நோய் வரலாம்.

இந்த நோய் ஒருவருக்கு இல்லை என்பதை அந்த நாள் வரை இல்லை எனக் கூறலாமே தவிர, அடுத்த நாளே அந்த நோய் அவருக்கு வந்தாலும் ஆச்சரியமில்லை. அதனால், இந்தப் புற்றுநோய் ஒரு புதிர் நோயுமாகும். எதனால் இந்த நோய் ஏற்படுகிறது என்று உறுதிபடக் கூற முடியவில்லை. புகையிலை உபயோகிப்பவர்களுக்கு இந்நோய் சம்பவிக்கலாம் என்பது ஒரு யூகம்தான்.

# பொள்ளாச்சியில் கேன்சர் நோய்க்கு புதிய சிகிச்சை



பொள்ளாச்சி டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரியில் திறந்து வைக்கப்பட்டுள்ள வெல்னஸ் மருத்துவமனை. டாக்டர் ரான் ஹன்னிங்கே, டாக்டர் ம. மாணிக்கம், டாக்டர் அருள்.

சித்த மருத்துவம்தான் இதன் வளர்ச்சியைக் காட்டுமாறு இதனைப் புற்றுநோய் எனக் கூறியுள்ளது சிந்திக்கத்தக்கது. புற்று என்பது கரையானால் அதன் எச்சில் நீரிலிருந்து கட்டப்படுகிற மண் திட்டு. இதனை இலகுவாக உடைக்க முடியாது. தினசரி இது நாலாபக்கத்திலும் வளரும். இதனுடைய வளர்ச்சியைக் கட்டுப்படுத்த முடியாது. 'புற்று' என்ற தமிழ்ச்சொல் இவை அனைத்தையும் புலப்படுத்துகிறது. ஆங்கிலத்தில் இதனைக் 'கேன்சர்' (Cancer) என்கிறோம்.

உடம்புக்குள் தன்னிச்சையாக வளரும் தசை வளர்ச்சிதான் இது. வளர்ச்சிக்கு ஒரு வரையறை உண்டு. வரையறை இல்லாமல் வளருமானால், அதனைத்தான் கேன்சர் என்கிறோம். உடம்புக்குள் குடல், தொண்டை, நுரையீரல், ஆசனவாய், தொடை எலும்புகள் என எந்த உறுப்புகளுக்குள்ளும் இந்த வளர்ச்சி

தொடங்கிவிட்டால், அதனால் உடல் பாதிப்பு ஏற் படும். ஒருமுறை அறுவைச் சிகிச்சை செய்து தப்பிக்கலாம். மீண்டும் வருமானால் மரணம்தான்.

இத்தகைய ஆட்கொல்லி நோய்க்கு நவீன மருத்துவத்தில் கீமோ சிகிச்சை, ரேடியாலஜி சிகிச்சை மற்றும் அறுவைச் சிகிச்சை ஆகிய மூன்று சிகிச்சை முறைகள்தான் உள்ளன. நோயா ளிக்கு இந்த மூன்று சிகிச்சைகளும் கடுமை யானவை. கேன்சர் பாதித்த பகுதிகளைச் சுட்டு எரித்துக் கருக்கி விடுகிற கடுமையான முறை இவை.

இப்போது ஒரு புதிய சிகிச்சை முறை கேன்சர் நோய்க்கு வந்துள்ளது. சக்தி சுகர்ஸ் சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள், தான் சார்ந்த தொழிற்துறையில் தற்செயலாக வைட்டமின் ‘சி’ ஆசிரியர் திருமதி சரஸ்வதி வேல்முருகன் ஒரு கேன்சர் நோயாளி எனக் கண்டறியப்பட்டார். அநேகமாக நம்பிக்கை இழந்து, நடமாட முடியாத நிலையில் திரு. மாணிக்கம் அவர்களைச் சந்தித் தார். அவர் தந்த வைட்டமின் ‘சி’ பானம் ஆச் சரியப்படத்தக்க மாற்றத்தை அவருக்குள் ஏற் படுத்தி, அவரை நோய் எதிர்ப்புச் சக்தி மிக்கவ ராக்கியது.

இந்த அனுபவப் பின்னணியில் சிந்தித்து வந்த டாக்டர் மாணிக்கம் அவர்கள், அமெரிக்கா வில் டாக்டர் ரான் ஹன்னிங்கே என்பவரைப் பற்றிக் கேள்விப்பட்டுள்ளார். அவரும் இதேபோல ஒருவிதச் சிகிச்சை முறையை அவருடைய அமெரிக்க மருத்துவமனையில் அளித்து வருவ தாக அறிந்து, அவரை நேரில் சந்தித்து அங்குள்ள



டாக்டர் ரான் ஹன்னிங்கே அவர்கள் சிகிச்சை முறை பற்றி விளக்கிக் கூறுகிறார்.

பற்றி அறிந்து கொள்ள நேர்ந்தது. சக்தி சோயா ஆலையில் சோயா மொச்சையில் ஒரு வேதிப் பொருள் இருப்பதையும், அதனுடன் வைட்டமின் ‘சி’ என்பது ரசாயன வினை புரிவதன் மூலம் ஒருவித எதிர்ப்புச் சக்தியை நமக்கு ஏற்படுத்தித் தருவதையும் 2003–இல் கண்டறிந்தார்.

சோதனை அடிப்படையில் வைட்டமின் ‘சி’ பானம் தயாரித்து சில கேன்சர் நோயாளி களுக்குக் கொடுத்து, அதன் பலன் என்ன என்ப தைத் தொடர்ந்து கண்காணித்து வந்தார்.

கோவை பெர்க்ஸ் பள்ளித் தலைமை மருத்துவமனையில் உள்ள சிகிச்சை முறையை அறிந்தார். டாக்டர் ரான் ஹன்னிங்கே வைட்டமின் ‘சி’ சிகிச்சையை இதுவரை சுமார் 2 லட்சம் முறை நோயாளிகளுக்கு அளித்துள்ளார். டாக்டர் ரான் ஹன்னிங்கே சீனா, ஜப்பான் முதலிய பல நாடு களின் அழைப்பின்பேரில் அங்கெல்லாம் சென்று இச்சிகிச்சை முறையை டாக்டர்களுக்கு விளக்கி வருகிறார். காரணம் இது புதுவிதமான சிகிச்சை முறை.

அவ்வகையில், இந்தியாவுக்கும் முதல் முறை யாகச் சென்ற ஜூன் மாதம் வந்துள்ளார்.




கருத்தரங்கில் உரைகள் நிகழ்த்தும் காட்சி

பொள்ளாச்சியில் உள்ள டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி மாநாட்டு அரங்கில் நடந்த கூட்டத்தில் இதனைப்பற்றி விரிவான விளக்கங்களை அளித்தார். மருத் துவர்களின் வினாக்களுக்கும் சரியான பதில் களைக் கூறினார்.

இந்தக் கருத்தரங்க மாநாட்டின் ஒருங் கிணைப்பாளராக, கோவை அபிநந் மருத்துவ மனை டாக்டர் அருள் பொறுப்பேற்றுச் சிறப்பாகச் செய்திருந்தார்.

டாக்டர் ரான் அவர்கள் வைட்டமின் 'சி'யை நரம்பு மூலம் உடலில் செலுத்தி எதிர்ப்புச் சக்தியை நமக்கு விரைந்து கிடைக்கச் செய்து வருகிறார். இந்த முறை புதியது.

கீமோ, ரேடியாலஜி, அறுவைச் சிகிச்சை முதலிய வழக்கமான முறைகளிலிருந்து இது வித்தியாசமானது, எளிதானது.

இத்துடன் 'மிராக்கிள்' (Mirakle) என்ற வைட்டமின் சி பானத்தை ஏ.பி.டி. நிறுவனம் தயாரித்து ஜூன் 9–ஆம் தேதி விற்பனைக்கு வெளியிட்டுள்ளது. இந்த பானம் (சிரப்) டெட்ரா பாக்கெட்டில் அடைக்கப்பட்டுக் கெடாதவாறு விற்கப்படுகிறது. முன்பு 'ஃப்ரூட்டி' பானங்களைக் குடித்தது போல, இதனையும் குடிக்கலாம்.

கேன்சர் நோய் இல்லாதவர்களும் இந்த பானத்தை அருந்துவதன் மூலம் நோய் எதிர்ப்புச் சக்தியைப் பெருக்கிக் கொள்ளலாம்.

# மிராக்கிள் வெல்னஸ் கிளினிக் - IV வைட்டமின் C நெறிமுறைகள் கருத்தரங்கு

பொள்ளாச்சி நாச்சிமுத்து பாலிடெக்னிக் கல்லூரி – டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி வளாகத்தில் 'மிராக்கிள் வெல்னஸ் கிளினிக்' என்ற நவீன முறை மருத்துவமனை 8.6.2018 வெள்ளிக்கிழமையன்று நிறுவப்பட்டது. இதில், சர்க்கரை வியாதி, கேன்சர் மற்றும் மாரடைப்பு முதலிய நோய்களை எளிதில் குணப்படுத்தும் 'ஓசோன் தெரபி' முறையும் மக்கள் பயன்பாட்டிற்கு வர உள்ளது.




அமெரிக்காவில் 'ரியார்டன் கிளினிக்' என்ற மருத்துவமனை 1975 முதல் கடந்த 40 ஆண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது. அமெரிக்காவைச் சேர்ந்த ரியோடன் கிளினிக்கின் முதன்மை மருத்துவ அலுவலர் டாக்டர் ரான் ஹன்னிங்கே தலைமையில் ஓசோன் தெரபி பற்றிய கருத்தரங்கு, பொள்ளாச்சி மகாலிங்கம் பொறியியல் கல்லூரியில் நடைபெற்றது. இந்தக் கருத்தரங்கின் முக்கியக் குறிக்கோள்கள்,

1. IV வைட்டமின் C யை முறையாகவும், பாதுகாப்பாகவும் பராமரித்தல்.

2. நீடித்த நோய்களைக் குணப்படுத்தத் தனித்துவமான புதிய கோட்பாடுகளை உருவாக்குதல்.

3. IV வைட்டமின் C மைட்டோ கான்ட்ரியல் ஆற்றலை எவ்வாறு மேம்படுத்துகிறது என்பதை

வெளிக்கொணர்தல்.

4. IV வைட்டமின் C மூலம் கேன்சரைக் குணப்படுத்த ரியோடன் கிளினிக்கில் பயன்படுத்தும் நெறிமுறைகளைக் கற்றல்.




வெல்னஸ் மருத்துவமனையில் டாக்டர் ரான் ஹன்னிங்கே அவர்கள் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களுக்கு மருத்துவப் பரிசோதனை செய்கிற காட்சி.

சக்தி குழும நிறுவனங்கள் மற்றும் என்.ஐ.ஏ., கல்வி நிறுவனங்களின் சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம் பேசியபோது, ‘மிராக்கிள்’ எனும் புதிய வகைச் சத்து பானம் ஏ.பி.டி. நிறுவனம் மூலம் தயாரிக்கப்பட்டிருப்பதைக் கூறினார். கடந்த 8 ஆண்டுக்காலமாக இதற்கான ஆராய்ச்சி மற்றும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு முக்கியமான வைட்டமின்கள் அனைத்தும் நிறைந்திருக்கும் வகையில் இப்பானம் தயாரிக்கப்பட்டுள்ளது.

இச்சத்து பானத்தில் 1 கிராம் லிப்போசமல் வைட்டமின் C, 0.5 கிராம் லைசினிக், 0.1 கிராம் புரோட்டீன், 3 கிராம் பாஸ்போலிபிட்ஸ் முதலிய மனித ஆரோக்கியத்திற்குத் தேவையான முக்கியச் சத்துக்கள் அடங்கியுள்ளன. கேன்சர், இருதயக் கோளாறுகள், அஞ்சினா காய்ச்சல், எச்.ஐ.வி. முதலிய நோய்களைக் குணப்படுத்தும் அனைத்துச் சத்துக்களும் இந்த பானத்தில் அடங்கியுள்ளன. இந்தியாவில் தயாரிக்கப்படும் இச்சத்து பானங்களில் லிப்போசமல் வைட்டமின் C அதிகம் நிறைந்துள்ள முதல் பானம் ‘மிராக்கிள்’ பானம் ஆகும்.

வெல்னஸ் மருத்துவமனையில் தானியங்கி எந்திரத்தின் மூலம் நோயாளிக்கு இரத்தப் பரிசோதனை செய்கிற காட்சி. Dr. ரான் ஹன்னிங்கே, டாக்டர் ம. மாணிக்கம், டாக்டர் அருள்.



தீராத நோய்கள் எனக் கருதப்பட்டு வரும் கேன்சர், எச்.ஐ.வி., இருதயக் கோளாறுகள் முதலிய நோய்களுக்குத் தீர்வு காணும் விதமாக IV வைட்டமின் C நமக்கு உதவுகிறது. கடந்த 15 வருடங்களாக அமெரிக்காவில் ரியார்டன் கிளினிக்கில் இதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வெற்றியடைந்துள்ளன.

கருத்தரங்கு 9.6.2018 மற்றும் 10.6.2018 ஆகிய இரு நாட்கள் நடைபெற்றது. இக்கருத்தரங்கில் இந்தியாவில் உள்ள பிரபல மருத்துவமனைகளைச் சார்ந்த 35 மருத்துவர்கள் உட்பட 80 பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். இக்கருத்தரங்கில் ‘மிராக்கிள் வெல்னஸ் கிளினிக்’கின் முதன்மை மருத்துவ அதிகாரி டாக்டர் அருள், என்.ஐ.ஏ. கல்வி நிறுவனங்களின் தாளாளர் திரு. மா. ஹரிஹரசுதன், டாக்டர் மகாலிங்கம் பொறியியல் தொழில்நுட்பக் கல்லூரி முதல்வர் முனைவர் ஏ. இரத்தினவேலு, துறைத் தலைவர்கள் மற்றும் சக்தி நிறுவனங்களின் உயர் அதிகாரிகள் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.



# பிரபல டாக்டர் அருள் அவர்களுடன் ஒரு பேட்டி

**கேள்வி : IV வைட்டமின் C என்ன செய்கிறது?**

**பதில் :** IV வைட்டமின் 'சி' நரம்பு வழியாக (Intravenous) உடலுக்குள் செலுத்தப்படுகிறது. இது புற்று நோய்க்கான மருந்து. இந்தச் சிகிச்சை முறை 1990–களில் அமெரிக்காவில் வந்து விட்டது. புற்றுநோய் செல்களைக் கொல்லக்கூடிய திறன் வைட்டமின் 'சி'க்கு உள்ளது. புற்றுநோய்க்கான வைட்டமின் 'சி' மாத்திரைகள் தற்போது ஊசி மருந்தாக வந்துவிட்டன. ஊசி மூலம் தற்போது அந்த மருந்துகளை உடலில் செலுத்துகிறோம்.

இதனை அமெரிக்காவில் டாக்டர் ரியோடன் என்பவர் அதிக அளவில் கொடுத்துப் பார்த்துப் பலருக்குப் புற்று நோயை ஆரம்ப நிலையில் குணப்படுத்தியுள்ளார். அங்கு உள்ளது வைட்டமின் 'சி' சிகிச்சை முறைதான் (High doss Vitamin C therapy). மற்ற எதுவும் அங்கு இல்லை.

**கேள்வி : டாக்டர் ரான் ஹன்னிங்கே அந்த மருத்துவமனையிலிருந்துதான் வந்தாரா?**

**பதில் :** டாக்டர் ரான் அங்கு 30 ஆண்டுக் காலமாக மருத்துவராக இருந்து வருகிறார்.

'வைட்டமின் சி' புற்று நோய்க்கான மருந்து என்பதை, டாக்டர் லைனஸ் பாலிங் என்பவர்தான் கண்டுபிடித்தார். இதற்காக அவருக்கு நோபல் பரிசு வழங்கப்பட்டது. அவரது மறைவிற்குப் பின்னர் டாக்டர் ரியோடன் அப்பணியைத் தொடர்ந்தார்.

பின்னர் அம்மருத்துவமனையில் பணியில் சேர்ந்த டாக்டர் ரான் ஹன்னிங்கே இந்தச் சிகிச்சை முறையைத் தொடர்ந்து செய்து வருகிறார். அவர் இதுவரை சுமார் 10 ஆயிரம் நோயாளிகளுக்கு இச் சிகிச்சையைச் செய்திருக்கிறார். அவர்களுக்குச் சிகிச்சையில் சுமார் 1 லட்சம் முறையாவது வைட்டமின் சி மருந்தை ஊசி மூலம் செலுத்தியிருப்பார்.

**கேள்வி : இந்தச் சிகிச்சை முறை அமெரிக்காவில் மட்டும்தான் பிரபலமாக உள்ளதா?**

**பதில் :** உலகம் முழுவதும் எல்லா நாடுகளுக்கும் வந்துவிட்டது. குறிப்பாக ஐரோப்பிய, ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் இது பரவி வருகிறது.

**கேள்வி : அப்படியானால், புற்று நோயைப் பற்றிப் பயப்படத் தேவையில்லை அல்லவா?**

**பதில் :** தொடக்க நிலைப் புற்றுநோய் என்றால் பயப்படத் தேவையில்லை. எளிதில் குணமாக்கி விடலாம். முற்றிய நிலை என்றால், அதைக் கட்டுப்படுத்தி நோயாளிக்கு நிம்மதியான வாழ்க்கையைக் கொடுக்கலாம். புற்று நோயாளிகளின் உடல் நிலையைக் கவனத்தில் கொண்டு, அவர்களின் புற்று நோயையும் குணப்படுத்தி விடலாம். அது முடியாத பட்சத்தில், அந்நோயைக் கட்டுப்படுத்தி

அந்த நோயாளிகளுக்கு வலியில்லாத, நிம்மதி யான வாழ்க்கையைக் கொடுக்கலாம்.

முற்றிய நிலையில் உள்ள நோயாளிகளுக்குப் பசி இருக்காது, உடல் இளைத்து விடும், வலி அதிகம் இருக்கும், தூக்கம் இருக்காது. இவற்றை வைட்டமின் 'சி' சரி செய்து விடும். அவர்கள் வாழும் நாள் வரையில் நன்றாக இருக்கலாம்.

**கேள்வி : இப்பணியில் சக்தி குழுமங்களின் தலைவர் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களுக்கும் உங்களுக்கும் உள்ள தொடர்பு பற்றி?**

**பதில்** : டாக்டர் மாணிக்கம் அவர்கள் 2003 முதல் 15 ஆண்டுகளாகப் பல்வேறு தொழில் பணிகளுக்கிடையேயும் இதற்கென நேரம் ஒதுக்கி இது பற்றிய ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறார். இது பற்றி நிறையப் படித்து, ஆய்வு செய்து கடந்த ஏழெட்டு ஆண்டுகளாக, இந்நோயால் பாதிக்கப் பட்ட பலருக்கு, வைட்டமின் 'சி'யைக் கொடுத்து வருகிறார். இதில் நல்ல பலன் கிடைத் துள்ளது. அதன் அடிப்படையில்தான் 'மிராக்கிள்' (Mirakle) என்ற வைட்டமின் 'சி' பானத்தை உருவாக்கி யிருக்கிறார்.

சென்னை, டில்லி, மும்பை முதலிய இடங் களிலிருந்தும் அவரிடம் இந்த வைட்டமின் 'சி'–யை மருத்துவர்கள் வாங்கிப் பயன்படுத்து கின்றனர். நோயாளிகளும் வாங்குகின்றனர்.

அந்த பானத்தில் லைசின், புரோலின், பாஸ் போடிலைகோலின் (Phosphatioylcholine) ஆகியவற்றுடன் வைட்டமின் சி சேர்த்துத் தரப்படு கிறது.

அடிப்படையில் நம் உடல் செல்களால் கட்ட மைக்கப்பட்டது. செல்கள் நன்றாக இருந்தால் திசுக்கள் நன்றாக இருக்கும். திசுக்கள் நன்றாக இருந்தால் உடல் உறுப்புகள் நன்றாக இருக்கும். உடல் உறுப்புகள் நன்றாக இருந்தால் நாம் நன்றாக இருப்போம். இத்தனைக்கும் மூலம் செல்கள்.

இந்தச் செல்கள் சில கழிவுப் பொருள்களை யும் வெறியேற்றுகின்றன. நாம் சாப்பிடுகிற உண வில் உள்ள நல்லவற்றையும் உள்வாங்கிக் கொள் கின்றன. செல்களுக்கும் உணவு, ஆக்சிஜன் ஆகியவை வேண்டும்.

ஒவ்வொரு செல்லிலும் ஒரு ஐவ்வு (மெம்ப ரைன்) இருக்கும். அது கசிவுத் தன்மை உள்ளதாக இருக்கும். நல்லவற்றை அது உள்வாங்கும். வைட் டமின் 'சி'யில் இருக்கக்கூடிய லைசின், புரோலின், லெசிதின் ஆகியன வெல்லாம் இக் கசிவு மூலமாகக் கழிவுகளை செல் களிலிருந்து வெளி யேற்றுகின்றன.




அதற்கு லைசின், புரோ லின், லெசிதின் ஆகியன பயன் படுகின்றன என்பதை டாக்டர் மாணிக்கம் ஆய்வு செய்து அவற்றை இந்த பானத்தில் சேர்த் திருக்கிறார்.

ஒரு தொழிலதிபர் தனது பல்வேறு பணி களுக்கிடையே இச்செயலைச் செய்திருப்பது என்னை ஆச்சரியப்படுத்தியுள்ளது.

**கேள்வி : வைட்டமின் சி அதிகமானால் தோலை பாதிக்குமா?**

**பதில்** : பாதிக்காது. வைட்டமின் 'சி'க்கும் தோல் பாதிப்பிற்கும் சம்பந்தமில்லை.

**கேள்வி : வைட்டமின் 'சி'யினால் எதிர் விளைவு அல்லது பக்க விளைவு ஏதேனும் உண்டா?**

**பதில்** : அப்படி எதுவும் இல்லை.

**கேள்வி : அப்படியானால், எவ்வளவு வேண்டுமா னாலும் எடுத்துக் கொள்ளலாமா?**

**பதில்** : அப்படியில்லை. அதற்கும் ஓர் அளவு உண்டு. புற்று நோயால் பாதிக்கப்பட்டவர்களுக்கு 75 கிராம், 100 கிராம் என்ற அளவில் கொடுப் போம். இதைச் சிறிது சிறிதாக அதிகப்படுத்தி 125 கிராம் வரை கொடுக்கலாம். அப்படிக் கொடுப் பதற்கு முன்பு நோயாளிகளுக்கு உரிய பரி சோதனை செய்து பார்க்க வேண்டும். அதனைச் சிறப்புப் பயற்சி பெற்ற மருத்துவர்கள்தான் செய்ய முடியும்.

**கேள்வி : நோய் இல்லாதவர்கள் இந்த பானத்தைக் குடிக்கலாமா?**

**பதில்** : தாராளமாகக் குடிக்கலாம். அது நோய் வராமல், வரும்முன் தடுக்கும் நடவடிக்கை யாக (Preventive) இருக்கும். இதை 8 பாக்கெட் குடித்தால் உணவே வேண்டியதில்லை.



திருமதி. சரஸ்வதி வேல்முருகன்

# நோயிலிருந்து குணமடைந்த பெண்மணியின் உண்மை அனுபவம்!

**நா**ன் கோயம் புத்தூர்வாசி. சென்ற 8 ஆண்டுகளுக்கு முன்பு (ஜூன் 2010) எதார்த்தமாக மருத்துவப் பரிசோதனைக்குச் சென்றபோது, எனக்கு மார்பகப் புற்றுநோய் இருப்பதாகத் தெரிய வந்தது.

அதில் Level - 2 ER & PGR - Positive, HER - Negative எனவும் உறுதி செய்யப் பட்டது.

பிறகு Mastectomy அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டது. அதன்பின் கீமோதெராபி நான்கு முறை கொடுக்கப்பட்டது. அதனால் முடி உதிர்தல், தோல் வறட்சி, பசியின்மை, தூக்கமின்மை முதலிய பல பக்கவிளைவுகளைத் தாங்கிக் கொள்ள வேண்டியிருந்தது.

அதன் தொடர்ச்சியாக ஹார்மோன் மாத்திரைகள் ஐந்து வருடங்களுக்குத் தொடர்ச்சியாக எடுத்துக் கொண்டால், எதிர்காலத்தில் கேன்சர் திரும்ப வராது என டாக்டர் கூறினார். ஒரு நாளைக்கு 1 mg என 7 நாட்கள் எடுத்தேன். அதனால் தினமும் ஏற்பட்ட பக்கவிளைவுகளைத் தாங்கிக்கொள்ள முடியாமல் அவதியுற்றேன்.

அதற்குரிய மாற்று மருத்துவம் ஏதாவது உண்டா என ஆழ்ந்து சிந்தித்தபோது, Vitamin C இருப்பதைத் தெரிந்தேன். சக்தி குழும சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம் அவர்கள் இதனைத் தந்து வருவதாகவும் அறிந்தேன். எனது கணவர் சக்தி சுகர்ஸில் மேனேஜராகப் பணிபுரிந்து வந்ததால், உடனடியாக சேர்மன் டாக்டர் ம. மாணிக்கம் அவர்களைச் சந்தித்தேன். Vitamin C எடுத்துக் கொள்ளும் அளவு முறைகளை அன்புடன் அவர் எடுத்துரைத்தார்.

அதனைத் தலைமேலேற்று தொடர்ச்சியாக 7 நாட்கள் சாப்பிட்ட உடனே எனக்கிருந்த வறட்சியான தோல் பளபளப்பாயிற்று. நகங்களிலும், விரல்களிலும் இருந்த கருப்புப் புகை மறைந்துவிட்டது. பசியெடுக்கவும் ஆரம்பித்தது. நன்றாகச் சாப்பிடவும் முடிந்தது. அதனால் நன்கு தூக்கம் வந்தது. கால் வலி, மார்பக வலி எல்லாமே குறைந்து போய்விட்டது. இப்போது வெளி வந்துள்ள Mirakle Syrup ஓர் அதிசயம் தான்.

தொடர்ந்து அன்றாட வேலைகளைச் செய்ய ஆரம்பித்தேன். Vitamin C எடுத்துக் கொண்ட நாளிலிருந்து எண்ணி வைத்தாற் போல் நான்காவது மாதத்திலேயே நெடுந்தூரம் அயல்நாட்டுப் பயணத்தை

மேற்கொண்டேன். ஆஸ்திரேலிய நாட்டின் கடுங்குளிரிலும் எனது உடல் நன்றாக இருந்தது. இந்த 8 வருடக் காலத்தில் மொத்தம் 6 முறை விமானத்தில் பயணித்தேன்.

வெளிநாட்டில் இதுவரை இரண்டரை ஆண்டுகள் தங்கியிருந்த சமயங்களில், முதலாம் ஆண்டு மட்டும் அமெரிக்காவில் பயன்பாட்டிலுள்ள Lypospheric Vitamin C எடுத்துக் கொண்டேன். மீதமுள்ள ஐந்தரை ஆண்டுகளும் தொடர்ந்து டாக்டர் ம. மாணிக்கம் அவர்களால் தயாரிக்கப்பட்ட Vitamin C Syrup–ஐத்தான் உட்கொண்டு வருகிறேன்.

இது எவ்வாறு சாத்தியமானது. இதன் ரகசியம் என்ன? என்பதைப் பார்க்கும்போது, நான் எடுத்துக் கொண்ட Vitamin C Mirakle எனது உடலில் உள்ள WBC எனும் இரத்த வெள்ளை அணுக்களைப் பலப்படுத்தி எதிர்ப்புச் சக்தியை உருவாக்கி உள்ளது. அவை நமது உடலின் படைவீரர்கள். இதனால் கேன்சர் மட்டுமின்றி, எல்லா வகையானத் தொற்றுகளான Bacterial மற் றும் Viral Infections அனைத்தையுமே கட்டுப்படுத்திக் குணமாக்குகிறது. அதனால் அதிசயம் மிகுந்த, பக்கவிளைவற்ற மலிவான விலையிலான 'Vitamin C Mirakle' பானம் நமக்குக் கிடைத் திருப்பது ஒரு வரப்பிரசாதமாகும்.

*2018, ஜூன் 9-இல் பொள்ளாச்சி*




**"வைட்டமின் சி மிராக்கிள்" அருந்து வலிமை பெற அதுதான் மருந்து"**

டாக்டர் மகாலிங்கம் இன்ஜினியரிங் கல்லூரி வளாகத்தில் Mirakle Wellness Clinic தொடங்கப்பட்டது. அங்கு Intravenous Vitamin C (IVC) நோயாளிகளுக்குக் கொடுக்கப்பட்டு வருகிறது. அதை நானும் மருத்துவ ஆலோசனைப்படி அன்றைய தினம் எடுத்துக் கொண்டேன்.

இதற்கு முன்பு மூன்று நாட்களாக எனக்கு மூக்கடைப்பு ஏற்பட்டதினால், மருத்துவரின் ஆலோசனையின் பேரில் Nasal Drops எடுத்துக் கொண்டேன். IVC எடுத்துக் கொண்ட அன்றைய இரவு Nasal Drops விடவில்லை. ஆயினும் சிரமமின்றித் தூங்கி எழுந்தேன். மறுநாள் காலையில் பாதியளவு மூக்கடைப்பு சரியாக இருந்தது.

இந்த அரிய வாய்ப்பு மனித இனத்திற்குக் கிடைத்திருக்கும் அருளாகும் என்பதில் ஐயமில்லை என்பதே என் கருத்து. ●

**ச**க்தி குழுமம் வெளியிட்டுள்ள 'மிராக்கிள்' (Mirakle) பானம், நோய் எதிர்ப்பு சக்தியை ஏற்படுத்துகிற ஆரோக்கிய பானமாகும். இதனைப் பற்றிய விழிப்புணர்வு மக்கள் மத்தியில் இனிமேல்தான் ஏற்பட வேண்டும். இதனைக் குடித்துச் சுவைப்பவர்கள் மற்றவர்களுக்கும் இதனுடைய சிறப்புகளை எடுத்துச் சொல்லி உதவுவதை ஒரு தர்மநெறியாகக் கொள்ள வேண்டும்.

தொடர்புகொள்ள : 9894242452, 7708331281.

கட்டுரை

# பாரதிதாசன் கவிதைப் பெருவெளி

24



பாரதிதாசன்

## அகமும் முகமும் – 2

“உறுதி உறுதி உறுதி

ஒன்றே சமூகம் என்றெண்ணார்க்கே

இறுதி”

1938–இல் பாரதிதாசன் கவிதைகள் முதல் தொகுதி வெளி வந்தபோது உணர்ச்சிப் பெருக்கோடு பாரதிதாசன் எழுதிய வரிகள் இவை. ஏறத்தாழ பாரதியாரை அறிமுகம் செய்து கொண்ட காலம் முதலாகவே சமூகச் சிந்தனைகளில் அவர் உள்ளம் கால் கொண்டதெனக் கூறலாம்.

தமிழுக்கு அடுத்த நிலையில் பாரதிதாசனை ஆட்கொண்டவை சமூகம் பற்றிய கவலைகளும் அவற்றை மாற்றும் உத்வேகங்களும்தான் எனில் மிகையாகாது.

வறுமை, அதற்கான காரணங்கள், அதனை அழித்தொழிக்கும் வழிகள் எனக் கவிஞரின் எண்ணங்கள் வழிந்தோடின.

“காண்ப தெல்லாம் தொழிலாளி செய்தான் – அவன்

காணத் தகுந்தது வறுமையாம் – அவன்

பூணத் தகுந்ததும் பொறுமையாம்”

என்ற வரிகளில் கொந்தளிப்பும் கோபமும் தெறித்தெழுகின்றன.

உழைப்பாளி இயக்கங்கள் விழிப்பெய்திய ஒரு காலகட்டத்தில், ‘வியர்வையின் ஒவ்வொரு துளியிலும் கண்டேன் இவ்வுலகு உழைப்பவர்க்குரியது என்பதையே’ என்று நம்பியவர் பாரதிதாசன். உடல் உழைப்பின் மகத்துவத்தை இயந்திரங்கள் தட்டிப் பறித்தபோது கவிஞர் இயந்திரங்களை நோக்கிச் சொன்னார்:

“ஆர்த்திடும் இயந்திரக் கூட்டங்களே – உங்கள்

ஆதி அந்தம் சொல்லவோ – நீங்கள்

ஊர்த் தொழிலாளர் உழைத்த உழைப்பில்

உதித்தது மெய்யல்லவோ?”

பசியும் பஞ்சமும் பட்டினியுமாக இருந்த சமுதாயத்தில் அதன் காரணங்களை மக்கள் உணரவில்லையே என்ற அவலம் பாரதியாரைக் கொதித்தெழ வைத்தது.

“கஞ்சி குடிப்பதற்

கிலார் – அதன்



சிற்பி பாலசுப்பிரமணியம்

காரணங்கள் இவையெனும்

அறிவும் இலார்”

என்பது அவர் மனத்துயர். பாரதிதாசன் காலத்தில் ஆதிக்க சக்திகளை அடையாளம் காண முடிந்தது. இரக்கமற்ற முதலாளித்துவத்தைக் குறித்துப் பேசுகிற அதே மூச்சில் சமூகம் விழிப் பெய்த முடியாமைக்கான காரணங்களில் மதம், மூட நம்பிக்கை, கடவுள் என்ற பெரியாரியக் கருத்துக்களையும் அவர் இனம் கண்டார். இன்னும் சொல்லப்போனால் சாதி, சமயம் என்ற பெரும் தடைக்கற்கள் எளிய மக்களின் வாழ்க்கை மீது இமயமெனக் கிடப்பதாக அவர் உணர்ந்தார்.

பகுத்தறிவு இயக்கமாகிய சுயமரியாதை இயக்கம் கவிஞரை ஈர்த்துக் கொண்ட சூழலில் நமது சமூகத்தின் மூடநம்பிக்கைகளைக் கடுமையாகச் சாடும் கவிதைகளை எழுதலானார். தொடக்க கால நெடும்பாடலான சஞ்சீவி பருவதத்தின் சாரலில், ‘ராமாயண மென்ற நலிவு தரும் கதை’ விமர்சிக்கப்படுகிறது. குழந்தைக்கு எழுதிய தாலாட்டுப் பாடலிலும்கூட, ‘தெய்வீகத்தை நம்பும் திருந்தாத பெண்குலம்’ என்றும், ‘புண்ணில் சரம் விடுக்கும் பொய்ம் மதத்தின் கூட்டம்’ என்றும் தாக்குதல் தொடுப்பார்.

“மதக் கேடர்கள் காலினில் வீழ்கின்றீர் – ஒண்ட

வீடும் இல்லாமல் தாழ்கின்றீர்”

என்று கவிஞர் வெஞ்சினம் கொள்கிற போது, சமூக முன்னேற்றத்திற்குச் சமயமும் கடவுளும் தடைகளெனக் கருதும் போக்கை அவதானிக்கலாம்.

சமூகத்தின் அகம் செல்லரித்துக் கிடப்பதற்கு மற்றொரு காரணமாகப் பாரதிதாசன் கருதுவது சாதி என்கிற மடமை எனப் பல கவிதைகளின் மூலம் அறிகிறோம்.

“பிறவியில் உயர்வும்

தாழ்வும் சொல்லல் மடமை – இந்தப்

பிழை நீங்குவதே

உயிருள்ளாரின் கடமை”

என்பது கவிஞரின் தீவிரமான கருத்து.

“பஞ்சமர் பார்ப்பனர்

என்ப தெல்லாம் என்ன தோழி – இவை

பாரத நாட்டுப்

பழிச் சின்னத்தின் பெயர் தோழா”

எனச் சாதியின்மீது மோது போர் நிகழ்த்தியவர் பாரதிதாசன்.

பாரதிதாசனின் ‘சம தர்மம்’ பொருளாதார சமத்துவம் மட்டு மன்று. மூட நம்பிக்கை ஒழிந்த மேல் – கீழ் தகர்ந்த சமுதாயமே அவர்தம் ‘சமதர்மம்.’

“ஆழ்வுறும் ஆத்திகம் வைதிகம் சுகமா?

அகிலமேல் சமதர்மம் அமைப்பது சுகமா?”

என்றும்,

“சாந்தியால் உலகம் தழைப்பது நன்றா?

சாதி பேதம் வளர்த்தே தளர்வது நன்றா?”

என்றும் வினாக்களால் சரம் தொடுத்தவர் பாரதிதாசன்.

‘புரட்சிக் கவி’ என்ற குறுங் காவியத்தில் மன்னன் மகளும், புலமைக் கவியும் காதலிப்பதற்குச் சாதி ஒரு தடையாகப் பேசப்படுவதைக் காணலாம்.

“நால் வருணங்கள்

விரித்தார் நாட்டார்கள் – அன்னவற்றில்

மேல் வருணம் கோல் கொண்டு

மேதினியை ஆள் வருணம்”

என்ற கருத்து முன்வைக்கப்படு கின்றது.

சாதியும், மதமும் வறுமைச் சமுதாயத்தின் இழிவுகளெனத் திரும்பத் திரும்ப வலியுறுத்துகின்றன பாரதிதாசன் பாடல்கள்.

“முப்பத்து முக்கோடி மக்களினாற்

பெற்ற பேறு – இங்கு

மூச்சு விடக் கூட மார்க்க மில்லா

மதச் சேறு"

என்று பாடுவது ஓர் எல்லை யென்றால்,

"குவிந்திடு நால் வருணமும் – கீழ்க்

குப்புறக் கவிழ்ந்ததென்று செப்பிடத்தகும் – இன்று

என்ன தொழில் எவன் செய்யினும் –

அதை

ஏனென்பவன் இங்கொருவ

னேனு மில்லையே"

என்று சாதியமைப்பைத் தூள் தூளாக் குவது மறு எல்லையாகப் பாரதி தாசன் கவிதை துலக்கிக் காட்டுகிறது.

சமூகத்தில் பெண்களைச் சமமாக உயர்த்துவது பாரதியாரின் நோக்க மாக இருந்தது.

"ஆண்களோடு பெண்களும்

சரிநிகர் சமானமாக வாழ்வம்

இந்த நாட்டிலே"

என்பார் பாரதியார். ஆனால் பாரதி தாசனோ,

"அச்சமும் மடமையும்

இல்லாத பெண்கள்

அழகிய தமிழ் நாட்டின் கண்கள்"

என்று சொல்லுவதோடு நில்லாது ஆண்களை விடப் பெண்களை உயர்த்திப் பேசும் வண்ணம் தன் பாத் திரங்களைப் படைக்கிறார்.

முன்னரே எடுத்துக் காட்டி யுள்ளது போல, சஞ்சீவி பருவதத்தின் சாரலில் வரும் வஞ்சி, பகுத்தறிவின் ஒளி நிலவாகிறாள். புரட்சிக் கவியின் நாயகி அமுதவல்லி தாட்டிகம் மிக்க தலைவியாகிறாள்! 'நீரன்றோ அன்னையார்? நீரன்றோ வீரியார்?" என்று மன்னர்கள் பாராட்டும் மகத் தான பெருமையை வீரத்தாயின்




பாத்திரம் விஜயராணி பெறுகிறாள். இவ்வகையில், சமூகத்தில் பெண்களின் ஏற்றமும், விடுதலையும் பாரதிதாசனின் கவிதைச் சாரமாகத் திகழ்கின்றன.

"சமைப்பதும் வீட்டு வேலை

சலிப்பின்றிச் செயலும் பெண்கள்

தமக்கே ஆம் என்று கூறல்

சரியில்லை ஆடவர்கள்

நமக்கும் அப்பணிகள் ஏற்கும்

என்றெண்ணும் நன்னாள் காண்போம்"

என்று அன்று பாரதிதாசன் கண்ட எண்ணங்கள் மிகக் குறுகிய காலத் திலேயே நடைமுறைக்கு வந்து விட்டதை நம்மால் காண முடிகிறது.

சமூகம் உழைப்பாளியைப் போற்ற வேண்டுமென்றும், ஆதிக்க சக்திகளை இனம் கண்டு போராட வேண்டு மென்றும், மதம் களைந்த மார்க்கத் தில் பயணிக்க வேண்டும் என்றும், சாதி ஒழிந்திட்ட ஏரி நல்ல தண்டமிழ் நீரினை ஏற்கும் என்றும், பெண் விடுதலையே சமூக விடுதலையின் அடிக்கல் என்றும் அழுத்தம் திருத்த மாகத் தம் கவிதைகளில் நிலை நாட் டினார் பாரதிதாசன்.

முழு விடுதலையைச் சமூகம் அடைய வேண்டுமானால், அதற்கான அரசியல் மார்க்கமாக அவர் கண்டது பொதுவுடைமைக் கொள்கை என்பது தெளிவு.

"பொதுவுடைமைக் கொள்கை

திசையெட்டும் சேர்ப்போம்

புனித மோடு அதை எங்கள்

உயிரென்று காப்போம்"

என்ற கருத்தை அவர் குறுங்காப்பியங் களும் தனிக் கவிதைகளும் திரும்பத் திரும்பப் பேசுகின்றன.

இந்திய நாட்டிலும் தமிழகத்திலும் பொதுவுடைமை இயக்கம் வளர்

முகத்தில் இருந்த நாட்களில் பாரதி தாசன் சிந்தனைகளும் அந்த வட்டத்தில் சுழன்றன.

"எல்லார்க்கும் எல்லாம் என்
நிருப்பதான
இடம் நோக்கி நடக்கின்ற
திந்த வையம்"

என்ற கவிஞரின் வரிகள் இந்த நம்பிக்கையையே முன்வைத்தன.

சமூகம் பற்றியும், மக்கட் சமுதாயம் குறித்தும் கவலையோடு சிந்தித்து, துயரங்களிலிருந்து சமூகம் மீள வேண்டுமானால் அதற்கு 'ஏழை முதலாளி என்பது இல்லாமற் செய்' என்ற தத்துவப் பார்வையைத் துணையாகக் கொண்டார் பாரதிதாசன்.

பாரதிதாசன் மறைந்து இருபத்தைந்தாண்டுகளுக்கு உள்ளாகவே பொதுவுடைமைக் கோட்டை எனக் கருதப்பட்ட சோவியத் யூனியன் தகர்ந்து போயிற்று. அரசு பொதுவுடைமைக் கொள்கையைக் கைவிட்டு ஒரு வகையும் தொகையுமில்லாத சர்வாதிகாரத்தில் அகப்பட்டுக் கொண்டது. சீனக் குடியரசு ஒரு முதலாளித்துவமய சர்வாதிகாரமாக உருவெடுத்துப் பண்டை அடையாளமாக ஒரு செங்கொடியை மட்டும் பறக்கவிட்டுக் கொண்டிருக்கிறது.

ஒரு காலத்தின் கருத்துக்களைப் பாரதிதாசன் மிக வலுவாக எடுத்துரைக்கிறாரென்றாலும், எண்ணிப் பார்க்க முடியாத வேகத்தில் மேக மூட்டங்கள் கலைவது போல் ஒரு புதிய சமுதாயம் பற்றிய கனவுகளும் கலைந்து போகிற சூழலை இன்று காண்கிறோம்.

நுகர்வுக் கலாசாரம் அனைத்துக் கலாசாரத்தின் வேர்களையும் அரித்துத் தின்னும் கொடுமை மிக்க ஒரு காலத்தில் பாரதிதாசன் பாடல்களின் மூலமாக அல்லது பெரியாரியச் சிந்தனைகள் மூலமாகத் திசையறியாத நம் சமூகத்தின் பயணத்தை அவர்கள் விரும்பிய திசைக்கு ஈர்த்துச் செல்ல முடியுமா என்று தீவிரமாகச் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

கணினியப் புரட்சி உலக சமுதாயத்தையே புரட்டிப் போட்டுப் புதுப் பாதையில் அதிவேகப் பயணம் மேற்கொண்டிருக்கிறது. கல்வி வளர்ந்திருக்கிறது. பெண்களின் தலைமையாற்றல் புலப்படத் தொடங்கியிருக்கிறது. மனித குலம் நாடுகள் என்ற கோடுகளால் பிரிக்கப்பட்டிருந்தாலும், விஞ்ஞானத்தின் வெற்றிகளால் அவை தனித்தனிச் சந்தைகளாக மாறி விட்டிருக்கின்றன.

தேசியம், மொழி, பாரம்பரியம், பண்பாடு ஆகியவை பற்றிய இளைய தலைமுறையின் கண்ணோட்டம் முற்றிலும் மாறிப் போயிருக்கிறது. எந்த எந்தக் கோட்பாடுகளுக்காகவும் கொள்கைகளுக்காகவும் பாரதிதாசன் கவிதை அடையாளம் காணப்பட்டதோ, அந்தக் கொள்கைகளில் தேவையானவற்றை இன்று கண்டறிந்து காக்க முடியுமா?

The Essential Bharati Dasan – என்று பாரதிதாசனின் சாரத்தையேனும் வரும் தலைமுறைகளுக்குப் புகட்ட முடியுமா? விடைகளை இவ்வினாக்கள் தேடி அலைகின்றன. ●

**ஜீரணிக்கும் நைவேத்தியம்**

**மைசூரின் அருகிலுள்ள நஞ்சன்கூடு தலத்தில் சிவன் கோயில் உள்ளது. இங்கு இறைவனுக்குச் சர்க்கரை, சுக்கு, வெண்ணெய் ஆகியவற்றைக் கலந்து நைவேத்தியம் செய்கிறார்கள். சிவபெருமான் ஆலகால நஞ்சை உண்டவர் என்பதால் அதை ஜீரணிக்கும் வகையில் இந்த நைவேத்தியத்தைப் படைப்பதாக இந்த ஆலயத்தின் ஸ்தல வரலாறு கூறுகிறது !**

**– பே. சண்முகம்**



எஸ். ஸ்ரீதுரை

# நெற்குன்றம் ஸ்ரீ கரிவரதராஜப் பெருமாள் திருக்கோயில்



ஸ்ரீமத் பாகவதத்தின் எட்டாவது ஸ்கந்தத்தில் விவரிக்கப்படும் கஜேந்திர மோட்சம், எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன்,தன்னுடைய பக்தர்களின் அபயக்குரல் கேட்டவுடன் எங்கிருந்தாலும் ஓடோடி வந்து ரட்சிக்கும் கருணையை எடுத்துக் கூறுகின்றது.

திரிகூடமலை என்ற (மூன்று சிகரங்களை உடைய) மலையில் உள்ள வனப் பிரதேசங்களில் இருந்த யானைக் கூட்டத்திற்குத் தலைவனாக விளங்கியது கஜேந்திரன் என்னும் யானை.

அந்த யானை தனது முற்பிறவியில் இந்திரத்யும்னன் என்ற மன்னனாகப் பிறந்திருந்தது. சிறந்த விஷ்ணு பக்தனாக விளங்கிய இந்திரத்யும்னன், ஒருமுறை தனது அரண்மனைக்கு எழுந்தருளிய அகஸ்திய முனிவரைத் தகுந்த முறையில் மரியாதை காட்டி வரவேற்காமல் இருந்துவிட்டான். அதனால் சினமுற்ற அகஸ்தியர் அவனை ஒரு யானையாகப் பிறக்கும்படி சபித்துவிட்டார்.

யானையாகப் பிறந்தாலும் முற்பிறவியில் இருந்த விஷ்ணுபக்தி இப்பிறவியிலும் தொடர்ந்தது. நீர் நிலைகளில் உள்ள தாமரை மலர்களைப் பறித்துத் தினமும் விஷ்ணு பூஜை செய்துவந்தது கஜேந்திரன் என்ற அந்த யானையரசன்.

இன்னொரு புறம், அந்த யானை நீராடி, பூப்பறித்துப் பூஜை செய்யும் நீர்நிலையில் ஒரு முதலை வசித்து வந்தது. அம்முதலையின் முற்பிறவி கந்தருவப் பிறவியாகும்.

'ஹூஹூ' என்ற கந்தருவ மன்னன், தனது அரண்மனைக்கு வந்த தேவலர் என்ற முனிவர் நீர்நிலையில் இறங்கிச் சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்த போது, விளையாட்டாகத் தண்ணீரில் மூழ்கி தேவலருடைய காலை இழுத்துவிட்டான். சந்திபூஜை தடைப்பட்டதால் கோபம் கொண்ட தேவல முனிவர், ஹூஹூவை ஒரு முதலையாகப் பிறக்கும்படி சபித்துவிட்டார்.

அந்த முதலைதான், வெகுநாள் காத்திருந்து, சமயம்பார்த்துக் கஜேந்திரனுடைய காலைக் கவ்விக் கொண்டது.

'நெடும்புனலுள் வெல்லும் முதலை' என்பதற்கேற்ப, பெரிய உருவம் கொண்ட யானையினால்

தண்ணீரினுள் இருந்தபடி தன்னை இழுத்த முதலையின் பிடியிலிருந்து விடுபடமுடியவில்லை. தும்பிக்கையில் தாமரை மலரை ஏந்தியிருந்த கஜேந் திரனுக்குத் தனது விஷ்ணுபூஜை தடைபடுகிறதே என்ற வருத்தமும் ஒரு புறம் வாட்டியது.

தனது முழு பலத்தையும் பயன் படுத்திய பின்னும் அந்த முதலையின் பிடியிலிருந்து விடுபட முடியாத நிலையில், "ஆதிமூலமே, காப்பாற்று!" என்று அபயக்குரல் கொடுத்தது. கஜேந்திரனின் விஷ்ணுபக்தியை ஏற் கெனவே நன்கறிந்திருந்த எம் பெருமான் ஸ்ரீமந்நாராயணன் உட னடியாகத் தம்முடைய கருடவாகனத் தில் ஆரோகணித்து வந்து, தமது வலக்கையில் இருக்கும் சக்கராயுதத்தி னால் முதலையின் தலையை அறுத்து, கஜேந்திரனைக் காப்பாற்றி அருளினார்.

தமிழகத்தின் பல வைணவத் திருக் கோயில்களிலும் ஸ்ரீ கஜேந்திர மோட் சம் திருவிழாவாகக் கொண்டாடப் படுகிறது. அன்றைய தினம் அந்தந்தத் திருக்கோயில் பெருமாள்களைக் கருட வாகனத்தில் எழுந்தருளச் செய்து வீதி உலாவாக எடுத்து வருவது வழக்கம்.

சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் திருக் கோயிலில், ஸ்ரீ கஜேந்திர வரதராஜப் பெருமாளுக்குத் தனிச் சன்னிதி உள்ளது. மேலும், தமிழகத்தின் பல



முதலையிடமிருந்து கஜேந்திரனைக் காப்பாற்றும் ஸ்ரீமந்நாராயணன்



நெற்குன்றம் ஸ்ரீகரிவரதராஜப் பெருமாள் கோயில்

மாவட்டங்களிலும் ஸ்ரீ கஜேந்திர வரத ராஜப் பெருமாள் மற்றும் ஸ்ரீ கரிவரத ராஜப் பெருமாள் ஆகிய பெயர்களில் பல திருக்கோயில்கள் அமைந் துள்ளன.

இவ்வகையில், சென்னை கோயம் பேடு மத்தியப்பேருந்து நிலையத்தி லிருந்து சுமார் 2 கிலோ மீட்டர் தூரத் தில் உள்ள நெற்குன்றம் என்னும் பகுதியில் அமைந்துள்ள ஸ்ரீ கரிவரத ராஜப் பெருமாள் திருக்கோயிலும் நாள்தோறும் பக்தர்களைத் தன்வசம் ஈர்த்து வருகின்றது.

முன்பொரு காலத்தில், நெல் வயல்கள் நிறைந்திருந்த இவ்வூரில் விளைந்த நெல்லைக் குன்று போலக் குவித்து வைத்திருப்பார்களாம். இக்காரணத்தால் நெற்குன்றம் என்று பெயர் பெற்ற இத்திருத்தலத்தில், ஸ்ரீதேவி பூதேவி சமேதராக எழுந் தருளியிருந்து அருள்பாலிக்கின்றார் ஸ்ரீ கரிவரதராஜப்பெருமாள்.

திருமலையில் வாராவாரம் வியாழக்கிழமை அன்று ஸ்ரீ திருவே வங்கடமுடையானின் நேத்திர தரிசனத்தைப் பெற்று மகிழ்கிறோம்.

மூலஸ்தானம் என்னும் கருவறை யில் இருபுறமும் ஸ்ரீதேவி பூதேவி

யருடன் சுமார் ஐந்தரை அடி உயரத்தில் அபயஹஸ்தத்துடன் அருள் பாலிக்கும் ஸ்ரீ கரிவரதராஜப் பெருமாளுக்கு அர்ச்சனை செய்து முடித்தவுடன், மூலஸ்தானத்தின் மின் விளக்குகள் அனைத்தையும் அணைத்து விடுகின்ற அர்ச்சகர், அந்த அமைதியான சூழலில் நிதானமாகத் தீபாராதனையைப் பெருமாளின் திருமுகத்துக்கு நேரே உயர்த்திக் காட்டும்போது, மூலவருடைய திருக்கண் இமைகள் இரண்டும் மெதுவாகத் திறந்து நம்மையே பார்த்துப் புன்னகைப்பது போன்ற திருக்காட்சி கிடைக்கின்றது. மின்விளக்குகள் மீண்டும் ஒளிரும்போது, பெருமாளின் திருக்கண்கள் முன்பிருந்தது போல மூடியபடி காட்சியளிக்கின்றன.

ஸ்ரீதேவி பூதேவியருடன்
ஸ்ரீகரிவரதராஜப் பெருமாள்



ஸ்ரீகரிவரதராஜப் பெருமாளின் திருவடிகளில் திருமணமாக வேண்டிய மகன் அல்லது மகளின் ஜாதகப் பிரதியை வைத்து வேண்டிக் கொண்டால் விரவில் திருமணப் பேறு கிடைக்கிறது.

உற்சவமூர்த்தியின் பெயர் ஸ்ரீ சத்தியநாராயணர். கதாயுதத்துடன் சேவை சாதிக்கின்றார். மாதாமாதம் பௌர்ணமி நன்னாளன்று இவருக்கு ஸ்ரீ சத்தியநாராயண பூஜை நிகழ்த்தப் படுகின்றது. இதிலும் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு அருள் பெறுகின்றனர்.

மூலஸ்தானத்துக்கு நேர் எதிரே எம்பெருமானின் பெரிய திருவடியாகிய ஸ்ரீ கருடபகவான் சன்னிதி உள்ளது. காலசர்ப்ப தோஷம் உள்ளிட்ட நாகதோஷங்கள் பலவும் விலகிட இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கருட பகவானைப் பலரும் வணங்கி வழிபட்டுப் பயன்பெறுகின்றனர்.

வடக்கு நோக்கிக் கோயில் கொண்டுள்ள ஸ்ரீவரத ஆஞ்சநேயர் ஓர் வரப்பிரசாதி. இவரது திருவடியிலும் தங்களது ஜாதகங்களை வைத்துக் கொடுக்கச் சொல்லி கிரகதோஷம் நீங்க வேண்டிக் கொள்கின்றனர் பக்தர்கள். வெண்ணெய், வடைமாலை சாற்றி இவரை வழிபடுகின்றனர்.

ஸ்ரீ ஹனுமத்ஜெயந்தி நன்னாளை ஒட்டி லட்சார்ச்சனையும் நடத்தப் படுகின்றது. மாதாமாதம் பௌர்ணமியன்று ஸ்ரீ சத்தியநாராயண பூஜை, ஆனி மாதத்தில் கருடசேவை, திருக்கல்யாண உத்ஸவம், ஆடி மற்றும் தை வெள்ளிக்கிழமைகளில் திருவிளக்குப் பூஜைகள், புரட்டாசி சனிக்கிழமை சிறப்பு அலங்காரத் தரிசனம், ஸ்ரீ ஹனுமத்ஜெயந்தி என்று வருடம் முழுவதும் பல்வேறு திருவிழாக்கள் இத்திருக்கோயிலில் கொண்டாடப் படுகின்றன.

ஸ்ரீ திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆதரவில் சொற்பொழிவு, பஜனை முதலிய ஆன்மீக நிகழ்ச்சிகள் இத்திருக்கோயிலில் நிகழ்த்தப் பெறுகின்றன.

– கட்டுரை உதவி : **வி. சுரேஷ்**

கட்டுரை

# முன்னேற்றத்திற்கான மாற்றுப்பாதை அவசியம்!



இன்று நாம் வாழும் காலம் ஒரு நெருக்கடியான காலம் என்பதைச் சமீபகாலமாகத் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்ற ஆராய்ச்சி அறிக்கைகள் தெள்ளத் தெளிவாக நமக்கு அறிவித்துக் கொண்டிருக்கின்றன.

உலக ஏற்றத் தாழ்வு அறிக்கை, உலகப் பட்டினி அறிக்கை, உலகச் சுற்றுச்சூழல் அறிக்கை, உலக ஊழல் அறிக்கை, உலக மானுட மேம்பாட்டு அறிக்கை, உலக மானுட உரிமைகள் அறிக்கை, உலக பாலின சமத்துவ இடைவெளி அறிக்கை, உலக சுகாதாரம் மற்றும் நீர் மேலாண்மை அறிக்கை, உலக பல்லுயிர்ப் பெருக்க அறிக்கை என அனைத்தும் நமக்குக் கொண்டுவரும் செய்தி – அழிவின் விளிம்புக்கு நம் மக்களைக் கொண்டு சென்று கொண்டிருக்கிறோம் என்பதைப் படம்பிடித்துக் காட்டுகின்றன.

இதற்கான காரணங்களை ஆராய்ந்து பார்த்தால் இந்தச் சூழலுக்குக் காரணமே உலகில் நடந்த அரசியல், ஆளுகை, நிர்வாகம், மற்றும் சந்தை என்பது வெட்ட வெளிச்சமாகக் காட்டப்பட்டுள்ளன.

விஞ்ஞான வளர்ச்சி, தொழில்நுட்ப வளர்ச்சி, பொருளாதார வளர்ச்சி, ஆராய்ச்சி மேம்பாடு, கல்விச்சாலை மற்றும் கல்வி வளர்ச்சி, அரசுத் துறைகளின் பெருக்கம், விரிந்த காவல்துறை, ராணுவ பலம், வானளாவிய கட்டடங்கள், கண்களைக் கவரும் பெரும் வணிக வளாகங்கள், உலகத் தரத்தில் மருத்துவச் சாலைகள் என அனைத்தும் உயர்ந்திருப்பதாகக் காட்சியளிக்கின்றன.

ஆனால் அவற்றின் செயல்பாடுகளால் உருவான தாக்கங்கள் கூறுகின்ற செய்தி, இந்த அமைப்புக்களின் மேல் இருந்த நம்பிக்கையைச் சிதைக்கின்றன. இவை அனைத்தும் செயல்பட்டதன் விளைவாக இருபெரும் தாக்கங்களை நாம் கண்கூடாக உலகில் பார்த்து வருகின்றோம்.

ஒன்று, மிகப்பெரிய அளவில் சுரண்டி வாழும் தன்மையை எல்லா நிலைகளிலும் மானுடத்தில் வளர்த்து முறைமைப்படுத்தியது. இரண்டாவது, எல்லை இல்லா அளவுக்கு இயற்கையை அழித்து இயற்கைப் பேரிடர் என்பதைப் பருவச் செயலாக உருவாக்கியது. எனவே, சூழல் சீர்கேடும், வாழ்வியல் ஒழுக்கநியதிச் சீர்கேடும் இன்று மானு



டத்தை உலுக்கிக் கொண்டுள்ளன.

இந்த உலகச் சூழலில் நம் இந்தியாவைப் பார்க்கும்போது, சுதந்திரம் அடைந்தபோது குண்டு சியைக்கூடத் தயாரிக்க முடியாத நாம், இன்று அண்ட கோளங்களுக்கு ஏவுகணைகளைச் செலுத்தி ஆராய்ச்சி செய்வதோடு, உலகில் அறிவுப் பொருளாதாரத்தை உயர்த்திப் பிடிக்கத் தொழில்நுட்ப வல்லுநர்களை உலகத்திற்கே உற் பத்தி செய்து தரும் நாடு இந்தியா என்று கூறும் போது அதை மறுப்பதற்கில்லை. இவையெல்லாம் இந்தியாவின் ஒரு முகம்.

இந்தியாவிற்கு இன்னொரு முகம் இருக் கின்றது என்பதையும் நாம் மறுக்க இயலாது. இன்று அரசு தரும் அறிக்கைகளைப் படித்தாலே நம் மக்கள் எவ்வளவு சிக்கலுக்கு ஆட்பட்டிருக் கிறார்கள் என்பது நமக்குப் புலப்படும்.

அதைவிட எதிர்காலம் பற்றிச் சிந்தித்தால், நம் எதிர்காலச் சந்ததியினர் வாழ்க்கையை நிர்மூலமாக்கி வருகிறோம் என்பது புரியும். இந்த ஆண்டு பொருளாதார ஆய்வு அறிக்கை அத்தி யாயம் ஐந்து மற்றும் ஆறு இந்த இரண்டையும் படித்தால் நாம் எங்குச் செல்கிறோம் என்பது நமக்குப் புரியும்.

விவசாயத்தின் நிலை, விவசாயிகளின் நிலை, விவசாயத் தொழிலாளர்களின் நிலை, ஏழைப் பெண்களின் நிலை, படித்த இளைஞர் களின் நிலை, சிறு வணிகர்களின் நிலை, கைத் திறனை வைத்து வாழ்க்கை நடத்தும் குயவர், தச்சர், நூற்போர், கொல்லர் எனப் பலதரப்பட்ட கைத்திறனாளிகள் வாழ்க்கை நிலை, சிறுகுறு தொழில் நடத்துவோர், வீதிகளில் கடை விரிப்போர், தலையில் சுமந்து வணிகம் செய்வோர், கட்டுமானத் தொழிலாளர்கள், சாலைப் பணியாளர்கள், துப்புரவுப் பணியாளர்கள், காடுகளில் வாழும் ஆதிவாசிகளின் நிலை, ஆயிரக்கணக்கில் மாடுகளையும் ஆடுகளையும் வைத்து வாழ்க்கை நடத்தும் நாடோடி களின் நிலை, மீன வர்களின் நிலை என 70% மக் களின் வாழ்க்கைச் சிக்கலுக்கு உள் ளாகி இருப்பதைத் தான் இந்த அறிக்கைகள் எடுத்துக் காட்டு கின்றன.

இந்தியாவின் பிரச்சனை என்பது சாதாரண மானது அல்ல. இந்தியப் பிரச்சனை என்பது சூழல் சீர்கேட்டின் வெளிப்பாடு. இதனை எதிர்கொள்ள மிகப்பெரிய அளவில் அரசாங்கத்தில் மாற்றுக் கொள்கைகள், மாற்றுத் திட்டங்கள் தேவை. சூழல் சீரமைப்புச் செய்ய வேண்டியது காலத்தின் கட்டாயமாகும். இயற்கை வளங்கள் பாதுகாக்கப் படுவதும், வளர்த்தெடுக்கப்பட வேண்டியதும் அத்தியாவசியச் செயல்பாடுகளாகும்.

இந்தியாவில் 49 சதவிகித மக்களின் வாழ்வாதாரத்தைப் பாதுகாப்பது விவசாயம்தான். ஆனால் அந்த விவசாயமும், அதில் ஈடுபட்டிருக் கின்ற விவசாயிகளின் வாழ்க்கையும், விவசாயத் தொழிலாளர்களின் வாழ்க்கையும் நிர்மூலமாக்கப் பட்டு வருவதைக் குறிப்பாக நம் பொருளாதார ஆய்வு அறிக்கையின் ஐந்து மற்றும் ஆறாவது அத்தியாயங்களைப் படித்தாலே புரிந்து கொள்ளலாம்.

சூழல் என்பது சீர்கெட்டிருப்பதும், இயற்கை வளங்கள் சூறையாடப்பட்டிருப்பதும், பருவநிலை



மாறியிருப்பதும் எப்படிப்பட்ட விளைவுகளை ஏற்படுத்தப் போகிறது என்பதை நம் பொருளாதார அறிக்கை எடுத்துக் காட்டுகின்றது.

இன்று நாம் எங்கு இருக்கிறோம் என்றால், நீர் பற்றிய நம் அறியாமை, சூழல் பற்றிய அறியாமை, பல்லுயிர்ப் பெருக்கம் பற்றிய அறியாமை, மக்களாட்சியின் அடிப்படை பற்றிய அறியாமை, ஆளுகை பற்றிய அறியாமை, இயற்கைக்கும், மானுடத்திற்கும் உள்ள உயர்நிலைத் தொடர்பு பற்றிய அறியாமை, உலகமயத்தின் கேடுகள் பற்றிய அறியாமை, அடிப்படைச் சுத்தம், சுகாதாரம், ஆரோக்கியம் பற்றிய அறியாமை, கல்வியின் அடிப்படை புரியாத அறியாமை அனைத்தும் நம்மை எங்கே கொண்டுவந்து நிறுத்தியிருக்கின்றன என்று பார்த்தால், ஏறத்தாழ 64 சதவிகித மக்கள் தங்கள் வாழ்க்கையை மதிக்கத்தக்க மானுட வாழ்க்கையை வாழ முடியாமல் மாக்கள் வாழும் சூழலில் தாழ்வுற்று வாழ்ந்துவரும் நிலையில் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

ஏழைகளுக்கு ஆதாரமாக இருக்கும் அனைத்து இயற்கை வளங்களும் சுரண்டப்பட்டு, சூறையாடப்பட்டு, ஏழைகளின் எதிர்காலம் நிர்மூலமாக்கப்பட்டிருப்பதைத்தான் இன்று நாம் பார்த்து வருகின்றோம். இதற்குக் காரணம் அரசின் கொள்கைகளும், அவற்றை முறையற்றுப் பயன்படுத்திய தொழில் மற்றும் வர்த்தக நிறுவனங்களும்தான் என்பதை யாரும் மறுக்க முடியாது.

அதுமட்டுமல்ல, ஏழைகளின் பாதுகாவலனாக இருந்த அமைப்புக்கள், மற்றும் நிறுவனங்கள் அனைத்தும் ஏழைகளை வைத்தே சந்தையால் உருவாக்கப்பட்ட ஊடகங்கள் மூலம் நிர்மூலமாக்கப்பட்டுவிட்டன. ஏழைகளுக்கு இருக்கும் ஒரே கடைசி ஆயுதம் தன்னைப் பாதுகாக்க, அவர்களிடம் இருக்கும் ஒரு வாக்கு. அதையும் நம் அரசியல் சந்தையில் அரசியல் கட்சிகளை வைத்து விற்பனைப் பொருளாக மாற்றிவிட்டனர்.

இதுவரை நம் நாட்டில் ஒரு மனிதருக்கு மானுட வாழ்க்கை வாழத் தேவையான அடிப்படை வசதிகள் என்னென்ன என்பதை நாம் வரையறுக்கவும் இல்லை, அவற்றை உறுதிப்படுத்தவும் இல்லை.

மேற்கத்திய நாடுகளில் பெரிதாகப் பேசப்படுவது பொருளாதார வளர்ச்சி விகிதம் அல்ல, மானுட மேம்பாட்டுக்கு அடிப்படையில் தனி மனிதர்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிகள் பற்றித்தான். அங்கு வாழ்க்கைத்தரம் பற்றிய விவாதம்தான் முன்னிலைப்படுத்தப்படுகிறது. அப்படிப்பட்ட பெரு விவாதத்தை நம் நாட்டின் அறிவு ஜீவிகளோ, அரசியல் தலைவர்களோ முன்னெடுத்துச் செல்லவில்லை என்பதுதான் இந்தியாவின் பரிதாப நிலை.



இந்தியா வர்த்தகம் செய்வதற்கு எளிதாக்கப்படுகிறது என்பதைக் கோபுரத்தில் நின்று கூவி வெளிநாட்டினரை இந்தியாவில் தொழில் செய்ய அழைக்கின்றனர். அவர்களுக்கு எந்தக் கட்டுப்பாடும் தளர்த்தப்படும்.

ஒரு சிறிய நாடு வியட்நாம், பேரழிவைச் சந்தித்த நாடு. அங்கும் வெளிநாட்டுக் கம்பெனிக்காரர்கள் அழைக்கப்படுகிறார்கள். ஆனால் இரண்டு கட்டுப்பாடுகளை விதிக்கின்றனர்.



தொழில் செய்ய அனுமதி மற்றும் முன்னுரிமை வேலைவாய்ப்புக்கள் எந்த அளவுக்கு அதிகமாக உருவாக்கப்படுகின்றனவோ அவற்றின் அடிப்படையில்; மூலதனத்தின் அளவை வைத்து அல்ல.

அதேபோல் எந்த விதத்திலும் விவசாயத்தைப் பாழ்படுத்திவிடக் கூடாது, ஏனென்றால், பெரும்பகுதி மக்களின் வாழ்வாதாரம் விவசாயத்தை நம்பி இருப்பதால். அத்துடன் பொருளாதாரத்திலும் அது பெரும்பங்கு வகிக்கிறது.

ஆனால் இந்தியாவில் மூலதனம்தான் பெரிதாகக் கருதப்படுகிறது. ஏழைகள் வாழ்வதற்குத் தகுதிவாய்ந்த எல்லா அடிப்படை வசதிகளும் மானுடவாழ்வு எப்படி வாழ வேண்டுமோ அப்படி வாழ்வதற்கு உருவாக்கப்பட்டுவிட்டதா என்ற கேள்வியை யாரும் கேட்பது இல்லை என்பதுதான் இந்தியாவின் புதிர்.

தண்ணீருக்காக ஏழைப் பெண்கள் அலைவதைப் பார்க்கும்போது, கந்தல் துணியோடு சாலையோரங்களில் அமைதியாக யாராவது தன் பசியைத் தீர்க்க மாட்டார்களா என்று உட்கார்ந்து இருப்போரைப் பார்க்கும்போது, சாக்கடையில் மூழ்கி அடைப்புக்களை எடுப்போரைப் பார்க்கும்போது, தெரு ஓரங்களில் சிறு வணிகம் செய்பவர்களைப் பார்க்கும்போது, தலையில் சுமந்து பொருள்களை வீதிவீதியாக விற்பதற்கு அலைபவர்களைப் பார்க்கும்போது, வீடுகளில் பணி செய்து குடும்ப வாழ்வாதாரத்தைப் பாதுகாக்கும் பெண்களைப் பார்க்கும்போது, தள்ளாத வயதில் கூலிவேலை செய்து காலத்தைக் கழிக்கும் வயதானவர்களைப் பார்க்கும்போது நமக்கு இயல்பாக ஒரு கேள்வி எழுகின்றது. இது யாருக்கான நாடு, இந்த நாடு யாரை மகிழ்ச்சிப்படுத்த முயல்கிறது என்றுதான் கேட்கத் தோன்றுகிறது.

வீட்டுத் தேவைக்குத் தண்ணீர் தூக்குவதற்காகவே பள்ளிப்படிப்பை நிறுத்திய பெண்களின் சோகக் கதைகளைப் படித்து மனதை இரும்பாக்கிக் கொண்டுவிட்டோம். குடிப்பதற்குத் தண்ணீர் விலை கொடுத்துத்தான் வாங்கி ஆக வேண்டும் என்ற சூழலுக்கு ஏழைகளையும் தள்ளிவிட்டோம்.

இந்தச் சூழல் நீடித்தால், சமூக அமைதிக்குப் பங்கம் வந்துவிடும் என்பதில் யாருக்கும் எந்த ஐயமும் இருக்க முடியாது. அதுமட்டுமல்ல, மக்களாட்சிக்கும் ஆபத்து வந்துவிட்டது.

இந்தியாவில் மூன்றில் ஒரு பங்கு மாவட்டங்கள் அதாவது ஏறத்தாழ 200 மாவட்டங்கள் கலகப் பகுதிகளாகவே காட்சியளிக்கின்றன என்பதை நம் அரசாங்கமே ஆமோதிக்கிறது. பொதுவாக எல்லையற்ற ஏற்றத் தாழ்வுகள், மக்களாட்சியைக் குலைக்கும் காரணிகள். அந்த ஏற்றத் தாழ்வுகள் குறைக்கப்பட்டாக வேண்டும்.




நம்மிடம் இருக்கும் அரசியல் சமத் துவத்தை முறையாகப் பயன்படுத்தி, சமூக மற்றும் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் குறைந்திட வேண்டும். இதற்கு இந்த வரைமுறையற்ற பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கும் புதியப் பொருளாதாரக் கொள்கைக்கு மாற்று, மக்கள் மத்தியில் பதிக்கப்பட வேண்டும். அந்த மாற்றத்தை உருவாக்க நம் அரசியல் கட்சிகள் சிந்திக்க முயல வேண்டும். அதுதான் மாற்றுப்பாதையாக இருக்கும்.

**விவாதம்**



பாரதப் பிரதமர்
நரேந்திர மோடி

# வெறுப்பு அரசியலை வெறுப்போம்...

**20**.5.2018 அன்று 'தி ஹிந்து' ஆங்கிலப் பத்திரிகையில் வெளியான காங்கிரஸ் தலைவர் திரு. ராகுல் காந்தியின் அறிக்கையில், பிரதமர் மோடி லஞ்சத்தை ஒழிப்பதாகக் கூறி வருவதைப் பச்சைப் பொய் என்றும், ஆட்சி அமைக்கக் குதிரை பேரத்தில் ஈடுபடுவதற்குத் தமது கட்சித் தலைவர்களைத் தூண்டிவிட்டவரென்றும், அவர் ஒரு சர்வாதிகாரி (Dictator) என்றும் சாடியுள்ளார்.

27.5.2018–இல் மார்க்சிஸ்ட் கட்சியின் தேசியச் செயலாளர் தோழர் சீத்தாராம் யெச்சூரி 'பீப்பிள்ஸ் டெமாக்ரசி' கட்சிப் பத்திரிகையில் எழுதியுள்ள தலையங்கத்தில் "அரசியல் சட்ட அதிகார மையங்கள் மீது அனைத்து விதமான தாக்குதல்களையும் பி.ஜே.பி. மத்திய அரசு ஏவியிருக்கிறது" என்றும் குறிப்பிட்டுள்ளார்.

திரு. ராகுல்காந்தியின் கருத்தும் தோழர் யெச்சூரியின் கருத்தும் ஒரே விதமாக வெளியாகியுள்ளன.

அவர்கள் கூறியுள்ள அரசியல் சாசன நிறுவனங்களான (Institutions) நமது உச்ச நீதிமன்றம், தேர்தல் ஆணையம், ஆளுநர் பதவி, இம்மூன்றுக்கும் ஏற்பட்டுள்ள தாக்குதல்களைப் புரிந்து கொள்ள குஜராத் தேர்தலும் கர்நாடகத் தேர்தலும் நமக்கு உதவுகிறது.



திரு. ராகுல்காந்தி

தேர்தலில் போட்டியிடும் கட்சிகளோ, சுயேட்சைகளோ, சாதியைப் பயன்படுத்தியோ, மதத்தைப் பயன்படுத்தியோ ஆதரவு திரட்டுவது அரசியல் சட்டப்படி குற்றமாகும். அது நிரூபிக்கப்பட்டால், தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த வேட்பாளர் தேர்வு செல்லாது.

குஜராத் தேர்தலில் படேல் சாதியினர் தங்களுக்கு வேலைவாய்ப்பிலும், கல்வியிலும் ஒதுக்கீடு வேண்டும் என்று மாணவர் ஹர்திக் படேல் தலைமையில் கோரிக்கை வைத்தது அரசியல் சட்டத்திற்கு எதிரானது.

குஜராத் தேர்தலில் வெற்றியை நிர்ணயிப்பதற்கு 10 எம்.எல்.ஏ.–க்களே போதும். படேல் சாதியினர் பி.ஜே.பி.–யில் 20 பேர் இருப்பதாக மதிப்பீடு செய்யப்பட்டது. படேல் சாதித் தலைவர் மாணவர் ஹர்திக் படேல் தமது கோரிக்கையைக் காங்கிரஸ் கட்சி ஏற்றால், அதற்கு ஆதரவு தருவதாகவும், பி.ஜே.பி. ஏற்க முன்வருமானால் அதற்கு முன்னுரிமை தருவதாகவும் அறிவித்தார். பி.ஜே.பி.–யிடமிருந்து பதில் வரவில்லை. அதனால் கெடு விதித்தார். கெடுவும் முடிந்தது. இதற்கிடையில் காங்கிரஸ் தலைவர் ராகுல் காந்தி காங்கிரஸ் ஆட்சி அமைத்தால், படேல் சாதியினருக்கு இடஒதுக்கீடு தரப்படும் என்று அறிவித்தார்.

அப்போதும்கூட பிரதமர் அக்கோரிக்கையை அலட்சியப்படுத்தினார். காரணம், படேல் சாதியினர் வசதியானவர்கள் என்று புள்ளிவிபரங்கள் கூறின. கொள்கையில் கோணல் இல்லாமல் நின்றார் பிரதமர் மோடி. 10–க்கும் குறைவான எம்.எல்.ஏ.–க்கள்




வித்தியாசத்தில் பி.ஜே.பி. மயிரிழையில்தான் குஜராத்தில் ஜெயித்தது.

அடுத்து, கர்நாடக சட்டப்பேரவைத் தேர்த லுக்கு முன்பு லிங்காயத்துக்களையும், வீரசைவர் களையும் இருவேறு சிறுபான்மை மதங்களாகக் கர்நாடகக் காங்கிரஸ் அரசு அறிவித்தது. அதனு டைய உள்நோக்கம் லிங்காயத்து வாக்குவங்கி பி.ஜே.பி.–க்கு ஆதரவாகாமல் தடுப்பதுதான். முஸ் லீம்கள், கிருஸ்தவர்கள் போல லிங்காயத்துகளும் சிறுபான்மை மதமாக்கப்பட்ட நடவடிக்கை 71 ஆண்டு சுதந்திர இந்தியாவில் கர்நாடகத்தில் காங்கிரஸ் ஆட்சியில்தான் நடந்தது.

கர்நாடக சட்டப்பேரவைத் தேர்தலில் பெரும் பான்மை பெற்ற தனிக்கட்சியாக இருந்த பி.ஜே. பி.–யை ஆட்சியை அமைக்குமாறு ஆளுநர் அழைத்தார். முதல்வராக பி.எஸ். எடியூரப்பா வுக்குப் பதவிப் பிரமாணம் செய்துவைத்தார். அதை எதிர்த்து உச்ச நீதிமன்றத்தில் வழக்கு தாக்கல் செய்யப்பட்டது.

திரு. ராகுல் காந்தி தலைமை நீதிபதி தீபக் மிஸ்ரா மீது நடுநிலையற்றவர் எனக் குற்றம்சாட்டி மாநிலங்கள் அவையில் 60 எம்.பி.–க்களின் ஆதர வுடன் ஒரு மனுவை அளித்துத் தலைமை நீதிபதி யைப் பதவி நீக்கம் செய்யும் சட்ட நடவடிக்கையில் ஏற்கனவே இறங்கினார். மாநிலங்கள் அவைத் தலைவர் திரு. வெங்கய நாயுடு அம்மனுவைத் தள்ளுபடி செய்தார். உச்ச நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்யப்பட்டும் ராகுல் காந்தியின் நோக் கம் நிறைவேறவில்லை.

உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி மீது ராகுலுக்கு இருந்த சந்தேகம் நீடித்து வந்த நிலை யில், கர்நாடக மாநில ஆளுநரின் அழைப் பாணையை எதிர்த்து, உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி மேதகு தீபக் மிஸ்ராவிடமே மேல்முறையீடு செய்யப்பட்டது. தலைமை நீதிபதி நடுநிலையோடு அவ்வழக்கை மூன்று நீதிபதிகளைக் கொண்ட அமர்வுக்கு அனுப்பி வைத்தார். வழக்கை விசாரித்த அந்நீதிபதிகள் கர்நாடக மாநில ஆளுநர் அளித்த 15 நாட்கள் அவகாசத்தை, 48 மணி நேரமாகக் குறைத்துப் பெரும்பான்மையை நிரூபிக்குமாறு எடியூரப்பாவுக்கு உத்தரவிட்டது.

குறைந்த அவகாசத்தில் பெரும்பான்மையை நிரூபிக்க முடியாமல், வாக்கெடுப்புக்கு முன் பாகவே முதலமைச்சர் பதவியை ராஜினாமா செய்துவிட்டுத் துயரம் கப்பிய முகத்தோடு எடியூரப்பா வெளியேறினார்.

உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பு சரியானது என்று ராகுல்காந்தியே உரத்துப் பாராட்டினார். உச்சநீதிமன்றத்தின் இதே தலைமை நீதிபதியின் மீதுதான் ராகுல்காந்தி முன்னர் குற்றம் சுமத்தினார் என்பது நினைவுகூரத் தக்கது.

உச்சநீதிமன்றத் தீர்ப்பு பாதகமாக வழங்கப்பட் டால், உடனே குறை கூறுவதும், சாதகமாக வரு மானால் பாராட்டுவதும் சராசரிகளுக்குத்தான் உரியது..

கர்நாடக ஆளுநர் களங்கமுள்ளவர் என்றும், அவர் பி.எஸ். எடியூரப்பாவுக்குச் சார்பாக ஆட்சி யமைக்க முதலில் அவரை அழைத்துவிட்டதாகவும் ராகுல்காந்தி குறை கூறினார். சர்க்காரியா கமி ஷன் வழிகாட்டுதல்படியும் சட்ட வல்லுநர்களின் ஆலோசனைப்படியும் முதலில் ஆட்சியமைக்கத் தனிப்பெரும் கட்சியை அழைக்கலாம். அடுத்து கூட்டணியை அழைக்கலாம். தேர்தலுக்கு முந்திய கூட்டணியாக இருந்தால், முதலில் அதையே அழைக்கலாம். காங்கிரஸ் – ஜனதா தளம் கூட்டணி தேர்தலுக்குப் பிந்திய கூட்டணிதான்.



சீத்தாராம் யெச்சூரி

ஆனாலும் ஆளுநரை பி.ஜே.பி. சார்பானவர் என்றே ராகுல் பிரச்சாரப்படுத்தினார். சட்டசபையில் எடியூரப்பா பதவி விலகிய பிறகு, ஜனதா தளத் தலைவர் திரு. குமார சாமியை அரசமைக்க இதே ஆளுநர்தான் அழைத்தார். திரு. குமாரசாமிக்கு முதலமைச்சராகப் பதவிப் பிரமாணமும் இதே ஆளுநர்தான் செய்து வைத்தார்.

குற்றம்சாட்டப்பட்ட ஆளுநர் – இப்போது குற்றமற்றவராகி ராகுலின் மதிப்பிற்குரியவராகவும் ஆகிவிட்டார்.

குஜராத்தில் நடந்த மாநிலங்கள் அவைத் தேர்தலில் போட்டியிட்ட காங்கிரஸ் வேட்பாளர் அகமது படேலுக்கு ஆதரவாகத்தான் தேர்தல் ஆணையம் தீர்ப்பளித்ததே தவிர, பி.ஜே.பி. வேட்பாளருக்கு அல்ல என்பதும் நினைவுகூரத் தக்கது.

ஆளுநர் பதவி என்ற அரசியல் சாசன நியமனம் கர்நாடகாவிலும் குஜராத்திலும் பி.ஜே.பி.–யின் அதிகாரத்திற்கு உள்ளாகவில்லை. ஜனநாயகமும் படுகொலை செய்யப்படவில்லை. ஆர்.எஸ்.எஸ்.–சும் இந்நிறுவனத்தை ஆக்கிரமிப்பு செய்யவில்லை.

உச்சநீதிமன்றம், மாநில ஆளுநர், தேர்தல் ஆணையம் முதலிய மூன்று அரசியல் சட்ட நிறுவனங்களும் சுதந்திரமாகவும் நியாயமாகவும்தான் உள்ளன என்பதையே அவற்றின் நடவடிக்கைகளே நிரூபித்தன.

கர்நாடகத் தேர்தலில் பெரும்பான்மையை நிரூபிக்க முடியாமல் போன எடியூரப்பா தோல்வியை ஒப்புக் கொண்டு சட்டசபை தளத்திலிருந்து காங்கிரஸ் தலைவர்களுக்குக் கை கொடுத்து விட்டுத்தான் வெளியேறினார். அப்போது 20 எம்.எல்.ஏ.–க்களின் பதவி ஏற்பு நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

தேசிய கீதம் இசைத்து முடிவதற்கு முன்பு எடியூரப்பாவும் அவருடைய எம்.எல்.ஏ.–க்களும் வெளியேறியது அரசியல் சட்ட நிறுவனத்தை அவமதித்ததாகும் என்று குற்றம்சாட்டிய ராகுல்காந்திக்கு அப்போது தேசிய கீதம் இசைக்கப்படவில்லை என்பது ஏன் தெரியாமல் போனது.

1975–இல் அலகாபாத் உயர்நீதிமன்றத்தில் இந்திராஜி தேர்தலில் ஜெயித்தது செல்லாது என்று தீர்ப்பு வெளியாகி உச்சநீதிமன்றமும் அதை உறுதிப்படுத்திய பிறகு, பிரதமர் இந்திராஜி எமர்ஜென்சி என்ற நெருக்கடி நிலையை ஜனாதிபதி மூலம் பிரகடனம் செய்ய வைத்தார்.

லோக்நாயக் ஜெயப்பிரகாஷ் நாராயணன், பாபு ஜெகஜீவன்ராம், சோசலிஸ்ட் தலைவர் பெர்ணான்டஸ் முதலிய தலைவர்கள் கைது செய்யப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டனர். பத்திரிகைகள் தணிக்கை செய்யப்பட்டன. சுதந்திர இந்தியாவில் 1975–க்கு முன்பும் பின்பும் இல்லாத நெருக்கடிநிலையை அறிவித்த பிரதமர் இந்திராஜியை, சர்வாதிகாரி என்று நாம் யாரும் சொல்வதில்லை. ஆனால் பிரதமர் மோடியை சர்வாதிகாரி என்று ராகுல்காந்தி சொல்கிறபோது, தமது பாட்டியைத் தனக்கு வசதியாக அவர் மறந்துவிட்டதாகவே தெரிகிறது.

பிரதமர் நரேந்திர மோடிக்கு எதிராக ஏறக்குறைய எல்லா எதிர்க்கட்சிகளும் பெங்களூருவில் ஒன்று திரண்டு மேடையில் உற்சாகமாகக் கைகளை உயர்த்தி இணைத்தது, மோடி ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வருவதற்கான முதல் காட்சியை ஊடகங்களில் பார்த்தோம்.

அகிலேஷ் யாதவ், சோனியா காந்தி, தேவ கவுடா, மாயாவதி, சந்திரபாபு நாயுடு, சந்திரசேகர



ராவ், மம்தாஜி, சீத்தாராம் யெச்சூரி, ஸ்டாலின் முதலியோருக்கு மோடிதான் முதல் எதிரி என்ப தில் எந்தக் குழப்பமும் எவருக்கும் இல்லை. ஆனால் மோடியை அப்புறப்படுத்திவிட்ட இடத்தில் அமரவைக்க வேண்டிய இன்னொருவரைப் பற்றி யாரும் எந்த முடிவுக்கு வர முடியவில்லை. மர்மம் நிறைந்த இந்த மாய ஒற்றுமையை வெளிக்காட்டிக் கொள்வதற்குகான காரணம், இச்சந்தர்ப்பம் இன் னொரு முறை சாத்தியப்படுமா என்ற சந்தேகம் தான்.

சர்க்கசில்தான் ஆடும் புலியும் அருகருகே நிற்பதைப் பார்த்திருக்கிறோம். விதான் சௌதா அரங்கத்தில் இவர்கள் திரண்ட விதம் அதைத் தான் நினைவூட்டியது. சென்ற மாதம் நடந்த மேற்குவங்க உள்ளாட்சித் தேர்தலில் 40 பேர்கள் படுகொலையானதைக் கண்டித்து அறிக்கைவிட்ட தோழர் சீத்தாராம் யெச்சூரி, மம்தா பானர்ஜி நின்ற அதே மேடையில் நிற்கிறார். ராகுலை மாற்றுப் பிரதமராக ஏற்க முடியாது என்று அடுத்த இரு நாளில் அறிக்கைவிட்ட சந்திரபாபு நாயுடுவும் அதை மேடையில். நிதிஷ்குமாருக்கு நிழலாக உள்ள பி.ஜே.பி.–யை ஒழித்தால், நிதிஷ்குமார் நிர்கதியற்றுப் போவார் என எண்ணுகிற பீகார் லல்லு பிரசாத் யாதவின் மகன் தேஜஸ்வியும் அதே மேடையில்.

அதர்மக் கூட்டணி (Unholy) என இதைக் கூறுபவர்கள் தரும் ஒரே ஒரு காரணம், கர்நாடகத் தேர்தலில் காங்கிரஸ் வேட்பாளர்களை 224 தொகுதிகளிலும் பி.ஜே.பி.–யைவிடக் கடுமையாக எதிர்த்த கட்சி ஜனதா தளக் கட்சிதான்.

தேர்தலுக்குப் பிறகு 78 இடத்தில் ஜெயித்த காங்கிரஸ், 37 இடத்தில் மட்டுமே ஜெயித்த ஜனதா தளத்துடன் நிபந்தனையற்ற கூட்டணிக் காக சோனியாஜியே வழிய வழிய வந்து தொலை பேசியில் பேசியதாகப் பெரியவர் தேவகவுடாவே கூறினார். பி.ஜே.பி. ஆட்சியை மத்தியில் நீடிக்க விடக் கூடாது என்பதும் காங்கிரஸ் இல்லாத மத்திய ஆட்சி அமைய வேண்டும் என்பதும் வெறுப்பு அரசியலின் வெளிப்பாடாகும். மக்களுக்கு நன்மை செய்யும் நல்ல திட்டத்தை நிறைவேற்றினால் மக்கள் நலம் பெறுவார்கள். இதற்குக் கட்சி அரசியல் முக்கியமல்ல.

இந்திய அரசியலில் புனிதமான தார்மீக நெறி பூஜ்யமாகிவிட்டது. இதற்காக வெட்கப்பட வேண் டியது அனைத்து அரசியல் கட்சிகளும்தான்.

நமது தேசத்தின் வேத நூலான அரசியல் சட்டத்தில் மத்தியிலும் மாநிலத்திலும் ஆட்சி அமைக்க எம்.பி.–க்களின் அல்லது எம்.எல்.ஏ.–க் களின் பெரும்பான்மை எண்ணிக்கைதான் தேவை எனக் கூறப்பட்டுள்ளது. அப்பெரும் பான்மை என்பது பாதியைவிட ஒன்று கூடுதலாக இருந்தாலே போதும்.

சாட்டப்பட்ட குற்றத்தைச் சந்தேகத்துக்கு இடமளிக்காமல் அரசுத் தரப்பு நிரூபிக்கத் தவறு மானால், சந்தேகத்தின் பலனை சம்பந்தப்பட்ட குற்றம்சாட்டப்பட்டவருக்கே அளித்து, அவர் விடு தலை செய்யப்படுவதைப் பல வழக்குகளில் படிக் கிறோம்.

அரசியல்வாதிகளில் பலர் இப்படித்தான் சந்தேகத்தின் பலனால் சமூகத்தில் உலவக் கூடிய வர்களாகத் தெரிகின்றனர். நபர்களைவிட நாடு பெரிது – பதவிகளைவிடப் பணிகளே முக்கியம்.

தேசத்துக்கு இப்போதைய அவசரத் தேவை வளர்ச்சி. அதற்குத் தேவை வேலைவாய்ப்புகளை வழங்கும் தொழிற்சாலைகள். அதற்குத் தேவை, வெளிநாட்டு மூலதனம். அதற்குத் தேவை, நிலை யான ஆட்சி. அதற்குத் தேவை மத்தியிலும் மாநிலங்களிலும் வாரிசு இல்லாத ஆட்சி.

ஊழல் கறைபடியாத உயர்ந்த தலைவர்கள் ஒரு சிலரையாவது சரியாக நாம் அடையாளம் காண வேண்டும். அவர்கள் குடும்பப் பற்று இல் லாமல் தேசப்பற்றுள்ளவர்களாக இருப்பார்களேயா னால், ஊழலுக்கான அவசியமே அவர்களிடம் உருவாகாது. பெற்ற தாயை வயோதிகக் காலத்தில் கூட விஷேசமாகக் கவனிக்காமல், எல்லா ஏழைத் தாய்மார்களின் நலனிலும் அக்கறை செலுத்துபவர் களாக அவர்களால் சேவை செய்ய முடியும்.

பரம்பரைப் பெருமையில்லாத பாமரனின் மக னாக அவர்கள் இருப்பார்களேயானால், அதுவே நமக்கு ஒரு பேரதிர்ஷ்டம். காந்திஜி, காமராஜ், தோழர் ஜீவா, சர்தார் வல்லபாய் படேல் போன்ற வர்கள் தங்கள் தந்தைமார்களின் பெயர்களைப் பயன்படுத்தி வளர்ந்தவர்கள் அல்ல.

இப்பின்னணியில் இந்தியாவில் தேர்தல் மூலம் ஜனநாயக ஆட்சி அமைக்கப்படுவதாக இருந்தாலும் அந்தத் தேர்தல் அதர்மத்துக்கு இடம் தருவதாக இருந்தால், அது எப்படி ஜனநாயகத் தைப் பாதுகாக்கும்?

அதனால் வாசகர்களாகிய நீங்கள், இதுபற்றி என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள், ஜூலை 12–க்குள்.

**– பி.சி.**






பேராசிரியர் நா. வானமாமலை மார்க்சியச் சுடரை ஏற்றி வைத்தார்.

'சுடர்கள் ஏற்றும் சுடர்' எனும் இந்நூல் பல ஆண்டுகளுக்கு முன்னால் பேராசிரியரை அறி முகப்படுத்தும் வகையில் சிறு நூலாக வெளி வந்தது. இப்போது வெளி வந்திருக்கும் இந்த நூலின் ரத்தினச் சுருக்கம்தான் அது.

இப்போது வெளிவந்துள்ள நூல், பேராசிரியர் நா.வா.–வின் இளமைக் காலம், இடதுசாரிக் கண்ணோட்டம் அவருக்குள்ளே உருவான கதை, தமிழகக் கலை, இலக்கிய ஆய்வுலகத்திற்குள் அவர் ஏற்படுத்திய மாறுதல், நாட்டார் வழக்காற்றி யலுக்குள்ளிருந்து சமூக வரலாறைத் துலக்கிக் கண்டுபிடிக்கும் விதம், புதுக்கவிதையை அணு கும் முறை, சங்க கால இலக்கியம், நம் நாட்டுப் புராண, இதிகாசங்கள், நவீன இலக்கியங்களை மதிப்பிடும் முறை முதலியவற்றை உள்ளடக்கி இருக்கிறது.

# பொன்னீலனின் 'சுடர்கள் ஏற்றும் சுடர்'

ஏ.எம். சாலன்

**மா**ர்க்சிய அறிஞரான பேராசிரியர் நா. வானமாமலை அவர்களைப் பன்முக நோக்கில் அணுகி, காலத்தின் தேவையைக் கருதி நாவலா சிரியர் பொன்னீலன் அவர்களால் எழுதப்பட்ட நூல், 'சுடர்கள் ஏற்றும் சுடர்.'

ஆம்! பேராசிரியர் நா. வானமா மலை அவர்கள் 'சுடர்'தான். ஏழை – எளிய – உழைப்பாளி மக்கள், வியர்வை சிந்தும் தொழிலாளிகள், விவசாயிகள், தங்கள் தொழிலை மட்டுமே கவனித்துக் கொண்டிருந்த பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்களின் ஆசிரியர் கள், மாணவர்கள், தோற்றுத் தனிப் பயிற்சிக் கல்லூரியில் படிக்க வந்த மாணவர்கள், பழைமை இருளுக்குள் மூழ்கிக் கிடந்த தன் சாதியைச் சேர்ந்த இளைஞர்கள் முதலிய எல் லோருடைய மூளைக்குள்ளும்



சிவகங்கைக் கவிஞர் மீராவின் 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்' என்ற கவிதைத் தொகுப்பு வெளிவந்து கலை, இலக்கிய உலகைச் சிந்திக்கத் தூண்டிய வேளையில் இந்நூல் பற்றிய விமர்சனக் கூட்டத் திற்கு ஆராய்ச்சி அரங்கில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்தக் கூட்டத் தில் ஏராளமான கேள்விகள் கேட்கப்பட்டன. பேராசிரியர் அவற்றிற்கெல்லாம் பதிலளிக் கிறார்.

புதுக்கவிதை தமிழகக் கலை, இலக்கிய உலகில் ஆங்காங்கே ஊற்றெடுத்துப் பொங்குகிறது. இளங்கலை இலக்கியவாதிகளும், இலக் கிய மாணவர்களும், ஆர்வலர் களும் அதைப் பருக

நினைத்துப் பாய்கிறார்கள். காட்டாற்று வெள்ளம் கரை புரண்டு ஓடுவதைக் கரையோரமாக நின்று ரசிப்பதைப் போன்று புதுக்கவிதைக்கு ரசிகர் களின் எண்ணிக்கைக் கூடுகிறது.

இந்த வேளையில் 'சி.சு. செல்லப்பா, க.நா. சுப்பிரமணியம், வெங்கட்சாமிநாதன், தருமு சிவ ராமு முதலியோர் வக்கிரங்களையும், கட்டற்ற தனிமனிதச் சுதந்திரங்களையும், பாலியல்களை யும் முன்னிறுத்தி, இதுதான் புதுக்கவிதை என்று ஓங்கிப் பேசிக் கொண்டிருந்தபோது, மேலும் இவர்களோடு தி.சா. வேணுகோபால், ராஜ கோபால், நகுலன், சி. மணி, பெ.கோ. சுந்தர ராஜன் (சிட்டி), கஸ்தூரி ரங்கன் முதலியோர் கவிஞர்களாக அறியப்பட்டு வந்தபோது, சில ஆண்டுகள் கழிய, இவர்கள் இப்படியிருக்கையில், இன்னொரு பக்கமாய், நா. காமராசன், மீரா, சிற்பி, ஞானி, கங்கை கொண்டான், அக்கினிபுத்திரன் (அரங்கராசன்) புவியரசு, மேத்தா, பரிணாமன் முதலிய கவிஞர்களும் வந்தார்கள்.

'இது புதுக்கவிதையின் இரண்டாம் அத்தி யாயம். இது எழுதப்படுகிற போது, அங்கே நா.வா. வருகிறார். இக்காலக் கட்டத்தில் (1965–இல்) எ ழுத்து, புதுக்குரல்கள் உள்ளிட்ட பல இதழ்கள், பல தொகுப்புகள், பிரசுரங்கள் வரத் தொடங்கு கின்றன. இவற்றிற்கு வந்தனம் போடுகிறார்களே தவிர, விமர்சனங்கள் வரவில்லை.

'... இந்த வேளையில் தமிழில் இந்த முற் போக்கு அம்சங்களையும் அவற்றிற்கு மாறான பிற் போக்கு அம்சங்களையும் இனங்காட்டுகின்ற விதத்தில், நா.வா., இந்த இரண்டு கருத்தோட்டங் களின் வித்தியாசங்களைக் காட்டிக் கருத்தியல் ரீதியான விமர்சனங்களை வைக்கிறார். வித்தி யாசப்படுத்துதலும், சார்பு நிலைகளைக் காட்டு தலும், நா.வா.–விடம் பிரதானமாகக் காணப்படு கின்றன. இது நா.வா. தமிழ் நவீன இலக்கியத் திற்கு அளித்த பிரதானமான கொடை' என்கிறார் பொன்னீலன்.

கிட்டத்தட்ட இதே மாதிரியான ஒரு புரட்சிகர மான மாறுதல்தான், நா.வா. நாட்டுப்புறவியலில் செய்த சாதனையும் என்கிறது 'சுடர்கள் ஏற்றும் சுடர்' நூல்.

நா.வா. அவர்கள் நாட்டுப்புறவியலில் ரசனை முறையைத் தாண்டி, பாடல்களை ஆய்வுமுறையில் அணுகினார். இந்தப் பாடல்களைப் பற்றி ஓர் ஆய்வியல் முன்னுரை எழுதினார்.

'... இவற்றின் அடிப்படையில் அந்தப் பாடல் களை ரசனை அடிப்படையில் மட்டும் இல்லாமல், சமூக ஆய்வு அடிப்படையிலும் அனுபவிக்க முடியும்படி செய்தார் நா.வா. இது மற்றவர்கள் செய்யாத, வானமாமலை செய்த பெரும் சாதனை. இதற்காகத்தான் பேராசிரியர் நாட்டுப்புறவியலின் தந்தை எனப் போற்றப்படுகிறார்' என்கிறது 'சுடர்கள் ஏற்றும் சுடர்' நூல்.

இதே மாதிரிதான், அவர் தமிழ்நாட்டில் சிறப் பாக வளர்ந்து, மக்களிடம் செல்வாக்குச் செலுத்தி, ஆதிக்கச் சக்திகளால் அடக்கி ஒடுக் கப்பட்டுப் போன லோகாயதத் தத்துவத்தை, அதன் கூறுகளையெல்லாம் திரட்டி, அவற்றுக் குள்ளிருந்து அக்காலத் தமிழக லோகாயதம் எப்படிப்பட்டதாக இருந்திருக்கும் என்பதை அனு மானித்து 'பரபரக்க லோகாயதம்' என்னும் தத்துவ விளக்கத்தை நா.வா. சிரமப்பட்டு வடிவமைத்தார். இதுவும் அவருடைய மிகப்பெரிய சாதனைகளில் ஒன்றே.

'தமிழ்நாட்டில் இலக்கியமோ, வரலாறோ, பண்பாடோ, மேலோருக்குத் தனியாகவும், மக் களுக்குத் தனியாகவும் உள்ளன. இந்த இரண்டும் ஒன்றன் மீது ஒன்று தாக்கம் செய்யக் கூடியவை. ஒன்றில் ஒன்று ஊடுருவக் கூடியவை. ஆனால், மிக நீண்ட காலமாக மேலோரின் வரலாறும், இலக்கியமும் பண்பாடும்தான் தமிழ்ச் சமூகத்தின் மொத்த வரலாறாகவும், இலக்கியமாகவும், பண் பாடாகவும் உயர்வுபடுத்திச் சொல்லப்பட்டு வந்தது. உழைக்கும் மக்களின் வரலாறும், இலக் கியமும், பண்பாடும் கண்டுகொள்ளப்படவில்லை. அல்லது தாழ்வானதாக மதிக்கப்பட்டன.

நாடு விடுதலை பெற்ற பிறகு, அடித்தள மக்களின் சார்பாக அவர்களின் வரலாற்றையும், இலக்கியத்தையும், பண்பாட்டையும் தேடித் தொகுத்த முதல் ஆய்வாளர் பேராசிரியர் நா.வா.–வே' என்கிறது சுடர்கள் ஏற்றும் சுடர்.

இடதுசாரி மற்றும் மார்க்சிய ஆய்வாளர்கள், மார்க்சிய வரலாற்றியல் பொருள் முதல்வாத அளவுகோல்களையே இலக்கியத்திற்கும் அளவு கோல்களாகப் பயன்படுத்தினார்கள். இது இலக்கியத்தை மதிப்பிடுவதற்குச் சரியான கருவி யாக அமையவில்லை.

இந்தச் சூழலில் தமிழில் இருந்து அழகியல் நூல் ஒன்றை உருவாக்க வேண்டும் என்று பேரா சிரியர் விரும்ப, 'மார்க்சிய அழகியல்' என்னும் ஒரு நூல் அவரால் படைக்கப்படுகிறது. இது தமிழ்க் கலை இலக்கிய உலகிற்குரிய மிகச் சிறந்த வழிகாட்டி நூல் என்றுகூடச் சொல்லலாம்!

'பூம்புகார்' திரைப்படம் வெளிவந்த நேரத்தில் அப்படத்தின் கதாசிரியர் கலைஞர் மு. கருணா நிதி செய்திருந்த கதை மாற்றத்தையும் கருத்துச் சிதைவையும் சுட்டிக் காட்டி ஒரு சிறு நூலை எழுதினார் நா.வா. அது சாதாரண மறுப்பு நூலாக

இல்லாமல், ஓர் ஆய்வு நூலாகவே அமைந்தது.

தமிழ்நாடு முழுவதும் கவனிப்பாரற்றுக் கிடந்த உழைக்கும் மக்கள் பண்பாட்டினையும், கலை, இலக்கியங்களையும், அவர்கள் வாழ்வு சம்பந்தப்பட்டு வெளிக்கொண்டு வரப்படாத பல சமூக வரலாறுகளையும் வெளிக்கொணர, 'ஆராய்ச்சி' பத்திரிகையைத் தொடங்கியவர் நா.வா.

இதன்மூலம் அவர் 'ரசனை, பழம்பெருமை பேசுதல், மொழி ஆராய்ச்சி' என்ற போக்கில் சென்று கொண்டிருந்த தமிழ்ச் சிந்தனைப் போக்கிற்கு 'ஆராய்ச்சி' பத்திரிகை ஒரு மரண அடி கொடுத்தது எனலாம்.

பேராசிரியர் நா.வா. தன் கட்சியைச் சார்ந்தவர்களின் தவறானப் போக்கைக் கண்களை மூடிக்கொண்டு ஆதரிப்பவரல்லர். கட்சி மார்க்சியர்கள் மிகப் பெரும்பான்மையினர் இந்திய வகைச் சமூகப் போராட்டத்தை மேற்கத்திய பாணியில் வர்க்கப் போராட்டமாகவே கணித்தனர்.

... ஆக, இந்திய சமூகக் கட்டுமானம் என்பதே வர்க்கக் கட்டுமானம், சாதிக்கட்டுமானம் ஆகிய இரண்டையும் கொண்டது என்பதைப் பேராசிரியர் உணர்ந்து தன் மார்க்சிய ஆய்வுகளில் பின்பற்றினார். இது அக்காலத்தைத் தாண்டிய சிந்தனை.'

இது ஒருபுறம் இருக்க, தமிழர்களின் பெருமை நிலவுடைமை அமைப்பின் மன்னர்களின் வீரதீரச் செயல்களிலும், கட்டி எழுப்பிய கோயில்களிலும், ஏட்டுத் தமிழிலும் இருப்பதாகப் பழம்பெருமைப் பேசிக் கொண்டிருந்த திராவிட இயக்கத்தின் பொய்த் திரையை, மன்னர்கள் காலக் கல்வெட்டுக்களையும் நாட்டுப்புறவியலையும் ஆதாரமாகக் கொண்டு நா.வா. தன் ஆராய்ச்சி மாணவர்களுடன் நடத்திய 'ஆராய்ச்சி' கிழித்தெறிந்தது. தமிழ்நாட்டு வரலாறு என்பது மன்னர்களின் வரலாறு அல்ல; நிலவுடைமைக் கொடுமைகளுக்கு எதிராகச் சதாசமயமும் போராடிக் கொண்டிருந்த உழைக்கும் மக்கள் வரலாறாகும். அம்மக்களின் வாழ்வு துன்ப துயரங்களும், போராட்டமும் மிகுந்தது.

இவற்றையெல்லாம் பேராசிரியர் வரலாற்றிலிருந்து தேடிக் கண்டுபிடித்து சான்றாதாரங்களுடன் நிறுவியது மாபெரும் சாதனையாகும்.

வடக்கே, மார்க்சியத் தத்துவ மேதையான தேவிபிரசாத் சடோபாத்தியாயா, வரலாற்றறிஞர்களான டி.டி. கோசாம்பி, ரொமீலா தாப்பர், சர். தேசாய், ராகுல சாங்கிருத்தியாயன் முதலியோர் இந்தியத் தத்துவத்திலும், வரலாற்றிலும் செய்து



*பொன்னீலன்*

காட்டிய பல அரிய சாதனைகளைத் தெற்கில் பேராசிரியர் நிகழ்த்திக் காட்டினார்.

இத்தனை சாதனைகளைத் தமிழ்நாட்டில் செய்த அந்தக் கலை, இலக்கிய, தத்துவப் பேராசானுக்குக் கர்நாடகத்திலுள்ள தர்வார் பல்கலைக் கழகம் டி.லிட் பட்டம் அளித்து கௌரவப் படுத்தியது.

இது ஒருபுறம் இருக்க, பேராசிரியர் நா.வா. அவர்கள் இந்திய, மேற்கத்தியக் கலை, இலக்கியங்களின் போக்கு, நிலவும் கோட்பாடுகள், உலகத் தத்துவங்கள் முதலியவற்றை உடனுக்குடன் அறிந்து தமிழுக்கு அறிமுகம் செய்து கொண்டிருந்தவர். இதுபோல் நம் பழந்தமிழ்க் கலை, இலக்கியங்கள், சங்க கால இலக்கியம், பழந்தமிழர் மரபும் நம்பிக்கைகளும், சிலப்பதிகாரம் – ராமாயணம் பற்றிய ஆய்வுகள், முருகன் – ஸ்கந்த இணைப்பு, பண்டிகை சம்பந்தமாக அவர் நடத்திய ஆய்வுகள் அனைத்துமே தமிழ்க் கலை, இலக்கிய, பண்பாட்டு உலகிலும், தத்துவத்துறையிலும் மிகவும் குறிப்பிடத்தக்க சாதனைகளாகும். இவையும்கூட இந்நூலில் எடுத்துக்காட்டப்பட்டிருந்தால், 'சுடர்கள் ஏற்றும் சுடர்' இன்னும் ஒளிவீசி இருக்கும்.

நூல், பண்டிதர்களும் பாமரர்களும் ஒரே மாதிரி வாசித்துப் புரிந்துகொள்ளும்படி எளிய தமிழில், சுவையோடு பொன்னீலன் அவர்களால் படைக்கப்பட்டிருப்பது, இந்நூலின் சிறப்பம்சங்களில் குறிப்பிடத் தக்கதாகும்.

**புத்தக வெளியீடு** : நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., 41–பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர் (அஞ்சல்), சென்னை – 600 098, விலை ரூ. 160/–. போன் : 044–26251968.

சிறுகதை



அகிலன்கண்ணன்

# மாற்றமும் ஏமாற்றமும்

"சென்னையில் இந்த வருடப் போகிப் பொங்கலில் இயற்கையைப் பாதிக்கும் மாசு குறைவாகவே இருந்தது. மாசுக் கட்டுப்பாட்டு வாரிய நடவடிக் கையாலும் மக்களிடம் பிளாஸ்டிக்கின் அபாயம் பற்றிய விழிப் புணர்வாலும் இது சாத் தியமானது" என அதிகாரி அறிவிப்பு.

"வெளீல எங்க மாசு? அதெல்லாந் தான் சிலபேர் மனசுல பூந்துடுத்தே!" என்றபடி தொலைக்காட்சி ஒளிபரப் பைத் துண்டித்து எழுந்தார் எண்பது வயது கி.சு.ரா. எனப்படுகிற கி.சு. ராசப்பா. அடுத்திருந்த அடுக் களையிலிருந்து எதிப்புக்குரல் எழுந்தது ."ஏண்ணா! ஒங் களுக்குப் புடிக்கலன்னா இப் பிடித்தான் ரிமோட் கழுத்தை நெரிச்சு நிறுத்திப்பிட்றதா? வேற சேனல் போடுங்கோ. பொங்கலுக்கு சுவாரஸ்யமா பட்டிமன்றம் போடுவா!"



செய்தி மோகத்தால் எந் நேரமும் செய்தி அலைவரிசை களில் மூழ்கி நீங்கி, தான் எழும் வேளைகளில் மட்டும் தமது சகதர்மினி சகுந்தலாவிற்குத் தொலைக்காட்சி இயக்கி – ரிமோட் – கிடைக்கும். "சக்கு! உன் விருப்ப சேனல் போட்ருக்கேன்; பாரு, கேளு! உன் சின்னச் சின்ன ஆசையைக்கூட இவ்ளோ வருஷமா நான் நசுக்கிண்டு இருந்திண்டிருக் கேன். என்னோட ஆணாதிக்க மனோபாவத்துக்கு மன்னிப்புக் கோருகிறேன் ப்ரிய சகியே!"

"போறுமே உங்க பரிகாசம்! அதெல்லாம் உங்க கவிதை, கதை யோட நிக்கட்டும்! இங்க வேணாம். அடடே, இங்க பாருங்கோ, உங்க பழைய ரசிக சிகாமணி 'சாரி' பேசறார் பாருங்கோ! எவ்ளோ கூட் டம்! என்னமா பிச்சு வாங்குறார் பாருங்கோ! ஹும்... நீங்களுந்தான் பத் திரிக்கை நடத்தினேள்; புஸ்தகம் போட்டேள். சாரியப் பாருங்கோ; 'தெனாலி' பத்திரி கைய ஒரு மூவ்மெண்டா வளர்த்துட்டார்! புத்திசாலிப் பிள்ளையாண்டான்!"

'சாரி' என்கிற ரங்காச்சாரி தமது கல்லூரி நாளிலிருந்தே கி.சு.ரா.–வின் தீவிர வாசகர் – ரசிகர். வயது வித்தியாச மின்றிப் பழகும் ராசப்பா, 'ராயர் கபே' டிகிரி காப் பிக்கும் நல்லெண்ணெய் தோசைக்கும் சாரியை அறிமுகப்படுத்தியவர். சாரி என்று மக்களால் அறியப் படும் ரங்காச்சாரியை ராசப்பா என்றும் 'ரங்குடு' என்றே அழைக்கிறார்.

"அட, நம்ம ரங்குடு தான்! என்னமா அரசி யலை அலசுறான் பாரு!

> "அங்கிருந்து என்ன பதில் வந்ததோ தெரியவில்லை. நின்றபடியே பேச ஆரம்பித்த கி.சு.ரா. அருகிருந்த பிரம்பு நாற்காலியை இழுத்துப் போட்டு சரிந்த வண்ணம் அமர்ந்து பேசுகிறார்.

அவனோட கேலியும் கிண்டலும் அபாரம் போ! டில்லியாகட்டும், குஜராத் ஆகட்டும், நம்ம தமிழ் நாடாகட்டும் என்ன தீர்க்கமா அனலைஸ் பண்றான்!" என்றவர் தொடர்ந்து தொலைக் காட்சியில் சாரியின் உரைவீச்சில் அமிழ்ந்தார்...

"நாட்டையே விலை பேசுற நாடாள்பவர் நாட்டுல நடக்கிற எல்லாத் தில்லுமுல்லுக்கும் வருத்தப்படுவார். விசனப்படுவார். அவர் கீழ இருகிறவா செய்யிற ஊழல், லஞ்சம், மக்களை ஏமாத்தறது எல்லாத்தையும் அடக்கி ஒடுக்காம அவாளுக்கெல்லாம் 'பேஷ்! பேஷ்' போட்ற ஒரு சாட்சி. மவுன சாட்சி. ஆனா உண்மையிலேயே இவர் ஒரு பொய் சாட்சி!"

மக்கள் கூட்டம் கைதட்டி மகிழ்கிறது. மேலே நடக்கும் காட்டுத் தர்பார் பற்றியும் இங்கு நடந்து முடிந்த தன்னல, குடும்ப சுயாட்சி பற்றியும் தெளிவுபடுத்துகிறார்.

"அங்க அவுங்க மீண்டும் வரக் கூடாது; இங்கே முன்னவர் செய்த திருவிளையாடல்கள் தொடர்ந்து விடாதிருக்க இங்கே அவர் மீண்டும் வரக் கூடாது. இங்கே இப்போ நல்லாட்சி நடக்குது. தூய்மை துலங்குது. ஆகவே, நாம நம்ம வோட்டாயுதத்தைச் சரியாப் பயன்படுத்தணும். இவுங்களுக்கு நாம முழு ஆதரவைத் தரணும்."

அனைத்து வண்ணங்களாலும் ஓர் ஓவியம் வரைந்து புள்ளிவிபரங்களால் ஆன மரச்சட்டத்தில் அதைப் பதித்து மனமெனும் மேடையில் பதிய வைக்கிறார் சாரி.

"ஏண்ணா, என்னமா சொல்றார் இந்தப் பிள்ளையாண்டான்! நீங்க மாடியில ரூம் முழுக்க அடுக்கி வச்சிருக்கேளே, 'தியாக வேள்வி' புஸ்தகங்கள் – அதை இந்தப் பிள்ளைகிட்ட சொல்லி 'லைப்ரரி'யில வாங்கிக்கச் சொல்லுங்களேன்..."

ஈரக் கையைத் தம் புடவையில் துடைத்த வண்ணம் வெளிவரும் சகுந்தலா இதமாய்க் கோரிக்கை மனு சமர்ப்பிக்கிறார்.

மவுனமாய் சகுந்தலாவின் முகம் நோக்குகிறார் ராசப்பா. தனது சத்திய வேள்வியில் உறுதுணையாய்த் தன்னுடன் நீண்ட பயணம் செய்தவர். அந்தக் காலத்தில் அரசு உத்தியோகஸ்தனாகத் தான் பணியாற்றியபோது தம்மைக் கரம்பிடித்தவர்.

சில ஆண்டுகளில் பணி துறந்து முழுநேரக் கவியாகித் திரிந்த போதில் எழுத்துத் தாகத்தின் உள்ளர்த்தம் உணர்ந்து துன்பங்களையே இன்பமாக்கிக் கொள்ளும் மனரசவாதம் கற்றவர் சகுந்தலா. ராசப்பா தனியார் நிறுவனம் ஒன்றில் வேலை கிடைத்து, 'விதை கவி' இதழை விடாப்பிடியாக நஷ்டத்தில் நடத்திய போது முகம் கோணாது, முணு முணுப்பை உள்ளேயே ஜீரணித்தவர். ஒரே மகளைத் திருமணம் செய்வித்து தில்லிக்கு அனுப்பியபோது மட்டும் பெரும் தனிமை கொண்டவர். 'விதைகவி' இதழ்தான் ராசப்பாவின் முதல் மனைவி என்பதைத் தாமதமாகவே உணர்ந்தவர்.

துவைத்து உடுத்திக் கொள்ளும் கதராடைதான் கி.சு ராசப்பாவின் கவசம். நான்கு முழ வேட்டியும், காது நீண்ட காக்கிப் பையும் அதனுள்ளிருக்கும் இவர் எழுதிப் பதிப்பித்த இவரது புத்தகங்களும் பல கல்லூரி, பள்ளி ஆசிரியர்களுக்கும், முதல்வர்களுக்கும், நூலகர்களுக்கும் புரியாத புதிரானவை; பிடிக்காத கசக்கும் வேப்பங்காயானவை.

இவரது கால் படாத கல்விக் கூடங்களே தமிழக மாவட்டங்களில் இல்லை எனலாம். தமது 'விதை கவி' இதழில் பல படைப்பாளிகளை அறிமுகம் செய்வித்தார்.சில வருடங்களுக்கு முன் புதுக் கவிதைத் தொகுப்பொன்றையும், புதுப் படைப்பாளி ஒருவரின் சிறுகதைத் தொகுப்பையும் பதிப்பித்தார். அடுத்த




வருடம் ஒரு பெரும் முயற்சியை மேற்கொண்டார்.

தம் இளவயதில் தாமே விடுதலைப் போரில் ஈடுபட்டவர் என்பதாலும் வரும் இளம் தலைமுறைக்கு விடுதலை வேள்வியின் தமிழகப் பங்களிப்பை ஆவணப்படுத்த வேண்டிய அவசியத்தை உணர்ந்ததாலும் தாமே ஒரு நாவல் எழுதித் திருத்திப் பதிப்பிக்க முயன்ற முயற்சி முழுஉருவம் கண்டது. எவ்வளவு குறைத்தும் ஆயிரத்து இருநூறு பக்கம் வந்துவிட்டது. தன்

சேமிப்புப் பற்றாமல் அண்ணாந்து பார்த்த அவரிடம் தன் கைவளையைக் கழற்றி நீட்டினார் சகுந்தலா.

திடுக்கிட்டுத் துணுக்குற்ற கி.சு.ரா., "நான் ஒனக்குன்னு வாங்கின பொன் னாபரணம்கிறது இந்த ரெண்டு வளை தான்; அதையும் கழட்டி நீட்றயே. வேணாம்" என்று நைந்த குரலில் மறுத் தார்.

"அடகு வைக்க வேணாம்; பேசாம வித்திடுங்கோ. பின்னாடி புத்தகம் வித்து வந்ததுன்னா பார்த்துக்கலாம். எனக் கொண்ணும் பெரிசா நகையாசை கெடையாது. உங்க திருப்திக்கு ஒதவாத வளை எனக்கு மட்டும் சுகமாவா ஒலிக் கப் போறது? ...ம் போயிட்டு வாங்க!"

"நீ கண்ணகியா, இல்ல நா கோவலனா?"

"ம்... பாட்டுப் பட்டிமன்றம் வைய்ங்கோ... குசும்புக்கொன்னும் கொறைச்சல் இல்ல. ம்..."

'**தி**யாக வேள்வி' சுமார் ஒரு நூறு பிரதிகளே விற்றன. மீதம் ஆயிரம் அப் படியே மாடியறையில். சில வரு டங்களுக்கு முன் சென்னைப் புத்தகக் காட்சியில் கி.சு.ரா.–வை சிறந்த தமிழ்ப் படைப்பாளர் எனப் பாராட்டிப் பரிசளிக்க



அழைத்துச் செல்ல வந்த இளம் பதிப் பாளர் விமலனிடம் இவர் வினவினார். "என்னப்பா... இத பாரு, லைப்ரரில என் புஸ்தகத்த வாங்கலை. புஸ்தகத்தை நூலகத்துக்கு வாங்க, பதிப்பாளர்கள் கிட்டருந்து காசு கேக்கிறாளாமே... நம்ம கிட்டயிருந்து சொத்துவரியில நூலக வரியும் சேர்த்து வாங்கீட்டு இப்பிடி அநியாயமா லஞ்சம் கேக்கலாமா? கோடிக்கணக்கில செலவு செஞ்சு நூலகக் கட்டடம் கட்டீட்டா. உள்ள தாளிச்சுக் கொட்டின மாதிரி பேருக்குக் கொஞ்சூண்டு தமிழ்ப் புஸ்தகங்களும் மானாவாரியா இங்கிலீஷ் புஸ்தகங் களும் அடுக்கி வைச்சுட்டா. தமிழ் என் உயிர்ன்னெல்லாம் பீத்திண்டாளே... அவா செய்யிற காரியம் சரியா? எனக் குக் கூசறது... சொல்லவே... வந்து... அப் பிடி எதாவது காசு கொடுத்தாத்தான் புஸ்தகம் வாங்குவான்னாலும் குடுத்திட லாம். வேற வழியே இல்ல... நா போட்டு வச்ச புஸ்தகம் அப்பிடியே இருக்கு. இந்த விஷயம் நாலு பேருக்குப் போய்ச் சேரணும்கிற என்னோட ஆவ லாதி... அதான்..."

அதிர்ந்துபோன பதிப் பாளர் விமலன் கண் கலங்க ராசப்பாவை நோக்கினான். அவர் நீட்டிய புத்தகங்களை வாங்கி, எந்த வருடப் பதிப்பெனப் பார்த் தான். "கவிதை, சிறுகதை நூல்கள் தான் இப்ப வாங்கணும்; 'தியாக வேள்வி'–ய அடுத்த வருஷம்தான் வாங்கணும்..." என்றவனால் ஜீரணிக்க இயலவில்லை. இந்த சத்திய சீலரையே லஞ்சம் கொடுக்கத் தூண்டிவிட்ட தமி ழினத் தலைவர்களை நொந்து கொள் வதைத் தவிர வேறு வழியில்லை என்று வாய் திறந்து கூறிவிட்டான் ராசப்பா விடம் விமலன்.

"**எ**ன்ன அப்பிடியே செதுக்கிய சிலையாயிட்டேள்! அதான், அவா போய் இவா வந்துட்டாளே! 'இப்ப இங்க எல்லாம் சுத்தமா நடக்குது. அவா மாதிரி இல்ல இவாங்'றாரே ரங்காச்

## பள்ளிக்கூடம் கட்டுங்கள்!

**க**ர்மவீரர் காமராஜரை ஒரு பணக்காரர் சந்தித்து, பெருந்தொகையைக் கொடுத்து 'கட்சிப் பணிக்காக வைத்துக் கொள்ளுங்கள்!' என்றார்.

"உங்கள் பணத்தை நான் வாங்கிக் கொண்டால், அது சுயநலமாகிவிடும். அத னால் உங்கள் ஊரில் ஒரு நல்ல பள்ளிக் கூடத்தைக் கட்டுங்கள்... அது தலை முறைக்கே நன்மை செய்ததாக இருக்கும்!" என்றார் காமராஜர்.

– த.சீ. பாலு

சாரி. அவரண்ட பேசுங்கோ. இந்தத் தள்ளாத வயசுல நீங்களா மாடியேறி அப்பப்ப கரையான் வந்துச்சா, காபந்தா இருக்கான்னு புஸ்தகத்தப் பார்த்துப் பாத்துண்டுருக்கேள்... ஒங்க கனவும் க்ளியர் ஆகுமோன்னோ?" சகுந்தலாவின் உசுப்பல் ஆலோசனைக் குரல் கி.சு. ராசப்பாவை நடப்புலகிற்கு இழுத்து வந்தது.

"ம்... ம்... இதுவரையில நா நம்ம ரங்குடுண்ட சொந்தத்துக்குன்னு ஏதும் பேசினதில்லே, கேட்டதில்லே... இப்பக் கேட்கறேன். ஒன்னும் ஆப்ளிகேசனா இல்ல; எழுத்தாளனா உரிமையோட கேட்கறேன். சாரிதான் சொல்றானே – 'அவா ஊழல், லஞ்சப் பெருச்சாளி; இவா பரிசுத்தம்'ன்னு அக்மார்க் முத்திரை குத்தி இவாளுக்கோசரம் பிரசார பீரங்கியா முழங்கிண்டுருக்கானே. கேட்ருவோம் சக்கு."

ராசப்பாவின் வாழ்க்கை கசடற்ற வாழ்க்கை. பேராசைப் பெருநோய் தீண்டாத மனசு. நேர்மையான அயரா உழைப்பும் தணியாத இலக்கிய தாகமும் இவரது கால்கள். இவையே, முதுமை இவரைப் பெரிதாய் பாதிக்காததன் காரணங்களுள் சில.

எதையுமே தள்ளிப் போடாது செய்து முடிக்கத் துடிக்கும் துடிப்பு இன்றும் அப்படியே இவருள். தொலைபேசி அருகே சென்று 197–க்குத் தொடர்பு கொண்டு ரங்காச்சாரியாகிய சாரி எனும் ரங்குடுவின் அலுவலக எண், முகவரி வாங்கித் தொடர்பு கொள்கிறார்.

"எஸ்... சாரி ஹியர்..."

இவர், தம்மை நினைவுபடுத்தி அறிமுகம் செய்து கொள்கிறார். பழைய ஏடுகள் புரட்டப்பட்டு சாரியிடமிருந்து வரவேற்பான குசல விசாரிப்பு விரிகிறது. தேங்காய் உடைத்த மாதிரி விஷயத்தைப் ப்ரஸ்தாபிக்கிறார் ராசப்பா.

அங்கிருந்து என்ன பதில் வந்ததோ தெரியவில்லை. நின்றபடியே பேச ஆரம்பித்த கி.சு.ரா. அருகிருந்த பிரம்பு நாற்காலியை இழுத்துப் போட்டு சரிந்த வண்ணம் அமர்ந்து பேசுகிறார்.

"பரவால்லை... பரவால்லப்பா... லெட் இட் பி... ஆமா, அதே வீடுதான். திருவல்லிக்கேணி பெரியதெரு திருநெல்வேலி அல்வா ஹவுஸ் ஒட்டின வீடுதான். எப்ப வேணா வாப்பா."

டபராவின் நடுவில் வைத்த டம்ளரில் நுரை பொங்கும் காப்பியை நீட்டுகிறார் சகுந்தலா.

"என்ன டல்லாயிட்டேள்? இந்தாங்கோ காப்பி!"

"டீ சக்கு! ரங்குடூட்ட பேசிட்டேன்..."

ஆர்வமற்ற மிகச் சாதாரணத் த்வனியில் சகுந்தலா கேட்கிறார். "ம்... சாரி என்ன சொன்னார்?"

"அதே கதைதான் இப்பவும் இங்க தொடருதாம். இந்தக் கைல காசு; அந்தக் கைல ஆடராம். பதினைந்து, இரு பது பர்சென்ட்டாம். காசு குடுக்கிறவாளுக்குத்தான் ஆடராம். தன்னோட புஸ்தகத்துக்கே காசு குடுத்துத்தான் அவரோட பப்ளிஷர் ஆடர் வாங்கினாராம்... அதுனால தான் சொன்னா நடக்குமான்னு தெரியலை; எதுக்கும் ட்ரை பண்ணிப் பார்க்கிறேன்ங்கறான்.

"வேண்டாம்ப்பா; நேக்காக நீ சிரமப்பட வேணாம்னுட்டேன்!"

"அடப் பாவிங்களா! ஏமாத்தினவா போய்ட்டா; மாத்தம் வந்துடுத்து. இவா பிரமாதம்! ரொம்ப சுத்தமாக்கும் அப்படி, இப்படின்னு காத்தாடி பறக்க விட்டாரே! மாத்தம் ஏமாத்தம்தானா? டெல்லீல இருக்கிறவர் பொய் சாட்சின்னாரே; இப்ப இங்கே இவர் என்னவாம்? இப்படிப் பொய் பேசறாரே இவரு மனசாட்சி இல்லாம? படிச்சவா இப்படி ஊரை ஏமாத்தறாளே, இதுக்கெல்லாம் விடிவே இல்லையா?"

"வெசனப்படாதே சக்கு. இவா சாயமும் ஒரு நா வெளுக்கத்தானே போறது! காலம் நிச்சயம் மாறும்."

“ம்... கவியின் கனவோ, நம்பிக்கையோ?” சகுந்தலாவின் கேள்வியையும் அவர் தந்த சர்க்கரையில்லாத காப்பியின் கசப்பையும் ஒருசேர ருசிக்க முயல்கிறார் கி.சு.ரா. ●

## தமிழ் மருத்துவ நூல்களை எழுதிய

# அமெரிக்க அறிஞர்!



சாமுவேல் பிஸ்க் கிரீன்

தமிழால் எதுவும் முடியும் எனக் குரலெழுப்பிச் செயல்பூர்வமாக மெய்ப்பித்தவர் மருத்துவர் சாமுவேல் பிஸ்க் கிரீன்.

அமெரிக்காவில் 'கிரின் ஹில்' எனும் இடத்தில் 1822–ஆம் ஆண்டு அக்டோபர் 10–ஆம் நாள் பிறந்தார் கிரீன். மருத்துவத் துறையில் ஈடுபாடு கொண்டு தம் 23–வது வயதில், மருத்துவப் பட்டதாரி ஆனார்.

அமெரிக்கன் சமயக் குழுதான் இலங்கையில் முதலில் பணியைத் தொடங்கியது. மருத்துவப் பணிக்குக் கிரீன் அவர்களையும் அனுப்பியது.

மருத்துவர் கிரீன், மாணவர்ளுக்கு மருத்துவப் பயிற்சி வழங்குகின்ற போது, மாணவர்கள் எதிர்கொண்ட சிக்கலைக் கண்டுணர்ந்தார்.

ஆங்கில வழியில் மருத்துவம் கற்பதில் பிற மொழி மாணவர்கள் படுகின்ற துன்பத்தைக் கண்டார். அதனால் தாய்மொழியிலேயே மருத்துவம் கற்பித்தல் வேண்டும் என்று தீர்மானித்தார். அதற்காக ஒரு திட்டத்தைத் தொடங்கினார்.

மருத்துவப் பெயர்களைத் தமிழில் குறிப்பிடுவதும், பொருள்களுக்குப் பொருத்தமான பெயர்களைத் தமிழில் இடுவதுமே அத்திட்டமாகும்.

அத்திட்டத்தின் தொடக்கமாக மருத்துவர் கால்வின் எழுதிய 'உறுப்பமைப்பு' என்ற நூலைத் தமிழ்ப்படுத்த முதலில் தேர்ந்தெடுத்தார்.

1855–இல் 'மருந்தியல் தமிழ்' அகராதி வெளியிட்டார். மேனுசெல்லின் 'மகப்பேறு மருத்துவம்', ட்ரூட்டின் 'அறுவை மருத்துவம்', குரேயுவின் 'உடல் உறுப்பு அமைப்பு மருத்துவம்' ஆகிய நூல்களைத் தமிழில் வழங்கினார்.

ஹூப்பரின் 'மருத்துவர் கைச் சிற்றேடு', டால்ட்டோவின் 'உடலியல்', வாரிங்கின் 'இந்திய மருத்துவப் பொருள் தொகுதி' ஆகிய நூல்களையும் தமிழில் மொழிபெயர்த்து வழங்கினார். அவரது அரிய உழைப்பினால் 4,500 பக்கங்கள் கொண்ட தமிழ் நூல்கள் கிடைத்தன.

தமிழால் எதுவும் முடியும் எனத் தன்னம்பிக்கையுடன் வாழ்ந்த கிரீன் 1884–ஆம் ஆண்டு மே 28–ம் நாள் காலமானார்.

அமெரிக்காவிலுள்ள வூஸ்டர் கல்லறைத் தோட்டம், கிரீனின் கல்லறையில் 'தமிழுக்கான மருத்துவ ஊழியர்' என்ற வாசகத்தைக் கம்பீரத்துடன் ஏந்தியுள்ளது.

**– த.சீ. பாலு.**

# வாழ்விக்க வருகின்றாள் 'சக்தி'



மின்னலைப் போலொரு சக்தி – எனக்கு
வீரியம் ஊட்டுகிறாள்
மின்சாரம் போலொரு சக்தி – எனக்குள்
விளக்குகள் ஏற்றுகிறாள்.

ஆற்றலைத் தூண்டிடும் சக்தி – ஆவேச
அலைகளை வீசுகிறாள்
காற்றினைப் போலொரு சக்தி – தைரியக்
கனலினை விசிறுகிறாள்.

தீவென இருண்ட மனத்தை – சக்தி
திசைகளாய் ஆக்குகிறாள்
பூவென மனத்தை ஆக்கி – சக்தி
புதுத்தேனைத் தேக்குகிறாள்.

புற்றினில் நுழைவதுபோல் – துயரப்
பாம்புகளின் தீம்புகளாம்
உற்றெழும் சக்தியாலே – ஆகா
ஓடினவே பாம்புகளாம்.

அச்சங்கள் படையெடுத்தால் – சக்தி
அரணென எழுகின்றாள்
உச்சத்தில் மனதை ஏற்றி – எழுச்சி
ஊஞ்சலை அசைக்கின்றாள்.

கோழைகள் மானிடப் பிழைகள் – சக்தி
கூறிடுவாள் சொல் கேளடா
பீழைகள் கவலைகள் போக்க – சக்தி
பீறிடுவாள் இந்நாளடா.

தைரிய சதங்கைகள் பூட்டி – சக்தி
தாண்டவம் புரிகின்றாள்
வைரியாம் அச்சத்தைப் போக்கி – சக்தி
வாழ்விக்க வருகின்றாள்!



கே.ஜி.ராஜேந்திரபாபு

# "வேதாந்தம் தந்த வீரத்துறவி சுவாமி சித்பவானந்தர்"

"வேதாந்தம் தந்த வீரத்துறவி சுவாமி சித்பவானந்தர் – விரிவான வாழ்க்கை வரலாறு" பாகம் 1, 2, 3 ஆகிய மூன்று தொகுதிகளையும் ஒரே சமயத்தில் திருவண்ணாமலை ஸ்ரீ சாரதா ஆஸ்ரமம் வெளியிட்டுள்ளது ஆன்மீக உலகத்திற்குக் கிடைத்துள்ள அரிய பொக்கிஷமாகும்.

இந்நூல் பேசுகிற சுவாமி சித்பவானந்தர் அவர்களின் 88 ஆண்டு வாழ்க்கையின் அனுபவங்களை இந்த மூன்று தொகுதிகளிலும் பரக்கக் காணலாம்.




40 ஆண்டுகள் அவரோடு வாழ்ந்து, அவரை அங்குலம், அங்குலமாக அறிந்த சுவாமி நித்தியானந்தர் 'பராய்த்துறை மேவிய பரம புருஷர்' என்ற ஓர் அழகான அவருடைய வாழ்க்கைச் சித்திரத்தை வழங்கியுள்ளது நினைவுகூரத் தக்கது.

அவருடைய வாழ்க்கை வரலாற்றை எழுத வேண்டுமென்று எந்தச் சீடரையும் சுவாமி சித்பவானந்தர் அநேகமாக அவருடைய இறுதிக்காலம் வரை அனுமதிக்கவில்லை. ஆனால், அவரைப் பற்றிய வாய்வழிச் செய்திகள் பல சீடர்கள் மத்தியில் பரவி, பக்தர்கள் மத்தியில் போற்றப்பட்டு வந்தன.

அவருடைய மறைவிற்குச் சரியாக ஒரு மாதத்திற்கு முன்பாக அவருடைய சிஷ்யையாகிய திருவண்ணாமலை யதீஸ்வரி கிருஷ்ணப்பிரியா அம்பா அவர்களுக்கு அனுமதி வழங்கியதாக அறிகிறோம்.

அவ்வாறு அனுமதி வழங்கப்பட்ட பிறகும் சித்பவானந்தரின் வரலாற்று நூல் 13 ஆண்டுக் காலமாக உருவாகவில்லை. அது உருவாக வேண்டிய தருணத்தில்தான் அது உருவாகியது. அதை உருவாக்குவதற்காக சுவாமிகளுடைய படைப்புகள் சேகரிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக, வ.வே.சு. ஐயர், ரமண மகரிஷி, மகாத்மா காந்தி முதலியோரைப் பற்றி சித்பவானந்தரின் சிந்தனைகளைத் தொகுத்து, அதன் மூலமாகச் சேகரிக்கப்பட்ட செய்திகளும் இதில் உள்ளன.

பொள்ளாச்சி நல்ல முத்துக்கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி பதிப்பித்த 'ஞான பரம் பரை' என்ற தொகுப்பு நூலில் சுவாமி சித்பவானந்தர் பற்றி ஒரு கட்டுரை இடம் பெற்றுள்ளது. இதேபோல, சுவாமிகளுக்கும் கன்னியாகுமரி விவேகானந்த கேந்திர நிறுவனர் ஏக்நாத் ரானடே அவர்களுக்கும் நிலவிய இணக்கத்தையும் சேகரிக்க முடிந்தது.

இந்த வரலாற்று நூலில் அவரை மையமாக வைத்து இது சுழன்றாலும், அந்தச் சக்கரத்தின் ஒவ்வொரு ஆரக்காலிலும் ஒவ்வொரு ஆனந்தாக்களும், அம்பாக்களும்தான் இடம்பெற்றிருக்கிறார்கள். அதனால், இந்த வரலாற்று நூலைத் தமிழ்நாட்டின் ராமகிருஷ்ண இயக்கத்தினுடைய சரித்திரம் என்றே சொல்லலாம்.

ஏனெனில், இந்தச் சரித்திரம் 150 ஆண்டுகளுக்கு உட்பட்ட பரமஹம்சரிலிருந்து தொடங்குகிறது. ஆனால், இந்தச் சரித்திரத்தினுடைய தொலைவில் 5 ஆயிரம் ஆண்டு ஹிந்து சமய சனாதன தர்மம்தான் தெரிகிறது.

இந்த நூலுக்கு இன்னொரு வகையில் துணை செய்தது போல, சுவாமி விவேகானந்தர் பற்றி மகாகவி பாரதியார் கூறிய மூன்று




பாகங்களை எழுதியுள்ள சுவாமி கமலாத்மானந்த ரின் பங்களிப்பையும் பார்க்க முடிகிறது. இந்த நூலில் சென்னை ராமகிருஷ்ண மடத்தின் அச்சகப்பிரிவுப் பொறுப்பிலிருந்த ஸ்ரீமத் சுவாமி விமூர்த்தானந்தர் அவர்களின் பங்களிப்பையும் காணலாம்.

ஏறக்குறைய 1700 பக்கங்களைக் கொண்ட இந்த மூன்று பாகங்களும் தினசரி 100 பக்கங்கள் படித்தால் 10 நாட்களுக்குப் படிக்கலாம். அல்லது 15 நாட்களில் படித்து முடிக்கலாம். அந்தக் கால கட்டத்தில் நம் மனம் சுவாமி சித்பவானந்தரின் அருள் வெளியில் அலைந்து கொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

யதீஸ்வரி கிருஷ்ணப்பிரியா அம்பா அவர்கள் முன்னுரையாக எழுதியுள்ள 25 பக்கங்களைக் கொண்ட 'வாசகர்களுக்குச் சில வார்த்தைகள்' என்ற பகுதியில், இந்நூலின் நுட்பமான பகுதி களைப் பலாச்சுளையைத் தேனில் தொட்டுத் தந்ததைப் போலத் தந்துள்ளார்.

சித்பவானந்த சுவாமிகளின் தொலைநோக்கு மாணவப் பருவத்திலேயே நல்ல மாணவர்களை உருவாக்க வேண்டும் என்ற சிறந்த கல்வி முறை யாகும். அந்தக் கல்வி முறைக்காகத்தான் திருப் பராய்த்துறையில் ஒரு தபோவனம் அமைத்து, அங்கு மாணவர்களைச் சேர்த்து வேதாந்தக் கல்வியையும் வழங்கினார்.

அதேசமயம், ஹிந்து மதத்தைப் பற்றிய ஒரு பெருமிதம் அவருக்கு எப்போதும் இருந்து வந்தது. மற்ற மதத்தார் ஹிந்து மதத்தைத் தாழ்வாகப் பேசுவதற்கு உபயோகப்படுத்துகிற ஒரு யுக்தி, தங்கள் மதத்திற்கு ஒரே ஒரு வேதநூல் உள்ளது. ஆனால், ஹிந்து மதத்திற்கு மட்டும் இத்தனை புத்தகங்கள் உள்ளதே, குழப்பம் ஏற்படாதா? என்று வழக்கமாகக் கேட்பார்கள்.

அதற்கு சுவாமிகள் சொன்ன பதில், "அவர வர் தரத்திற்கு அந்தப் புராண இதிகாசங்களைத் தந்து அவர்களை அடுத்த கட்ட வளர்ச்சிக்கு உயர்த்துவதற்குத்தான் இத்தனை புத்தகங்களும் அவசியப்படுகின்றன. ஆரம்பப் பள்ளியில் கற்றுத் தரப்படுகிற கணிதம் வேறு, ஆராய்ச்சியில் கற்றுத் தரப்படுகிற கணிதம் வேறு. இரண்டும் ஒரே கணிதம்தான் என்று சொல்ல முடியாது. அவரவர் தரத்திற்கேற்பக் கணிதப் புத்தகங்கள் தரப்படு கின்றன" என்ற விளக்கம் அளித்து, மற்ற மதத்தா ரின் விமர்சனங்களை முறியடித்தவர் சுவாமி சித்பவானந்தர்.

அதேசமயத்தில் மூட நம்பிக்கைகளை மதத் தின் பெயரால் இருந்தாலும், அதை எதிர்ப்பதற்கும் முன்வந்தவர் சுவாமிகள். திருமால் மீது பூச்சிகள் படிந்து கொண்டிருந்தன. அந்தப் பூச்சிகளை ஒழிப்பதற்கு அர்ச்சகர்கள் விரும்பவில்லை. கார ணம், அந்தப் பூச்சிகளை சுவாமி பூச்சிகள் என்று விட்டுவிடவே விரும்பினர். ஆனால் சுவாமிகளோ, அப்படி விடக்கூடாது. அந்த நச்சுப்பூச்சிகளை ஒழித்து, அந்த இடத்தை ஆரோக்கியமாக வைப் பதுதான் சரியானது என்று வாதிட்டார் சுவாமி சித்பவானந்தர்.

எலி, பெருச்சாளிகளை விவசாயப் பூமிகளில் ஒழிப்பதைப்போலக் கோயில்களில் அவற்றை அழிக்க வேண்டும் என்றார்.

சுவாமிகள் அருளிய மிகப்பெரிய கொடை, 'அந்தர்யோகம்' என்ற தியான முறை. துறவுக்கும் ஆன்மீகத்திற்கும் உள்ள தொடர்பை இந்தத் தியான முறை இணைக்கிறது. இந்த அந்தர் யோகத்தை சுவாமிகள் தமிழ்நாட்டில் எல்லா இடங்களிலும் செய்து வந்தார். அந்தர்யோகம்தான் சரியான அடல்ட் எஜுகேஷன் என்றே கூறினார்.

அதேசமயம் பல்சமய உரையாடல்களைத் தனது சீடர்களுக்குப் பரிமாறவே சுவாமிகள் விரும்பினார். கொடைக்கானலில் நடைபெற்ற அந்தர்யோக நிகழ்ச்சியில் கிறிஸ்தவம், இஸ்லாம் முதலிய பிற மதங்களிலிருந்து பெரியவர்கள்

கலந்து கொண்டு உரையாற்றினார்கள். சர்வசமய சமரசக் கொள்கையை சுவாமிகள் விரும்பி ஏற்றார்கள்.

சுவாமி சித்பவானந்தர் பொள்ளாச்சிக்குப் பக்கத்திலுள்ள செங்குட்டைப்பாளையம் என்ற கிராமத்தில் பிறந்தவர். இவ்வகையில் அவர் ஒரு கிராமவாசி. சிறுவயதாக இருந்தபோதே இவர் சித்த வைத்தியத்தில் ஈடுபாடு கொண்டவராக விளங்கினார். அதற்குக் காரணம், சித்பவானந் தருடைய தந்தைக்கே ரசவாத வித்தை தெரியும். சோதிடத்திலும் அவருடைய தந்தைக்குப் புலமை உண்டு. அதனால் தனது குமாரனுடைய ஜாதகத்தை ஆழ்ந்து பார்த்துவிட்டு அதிர்ச்சியான செய்தியைத் தந்தையே சொன்னார்.

என்ன அந்தச் செய்தி என்றால், "ஒன்று நான் சந்நியாசி ஆக வேண்டும். அல்லது என் மகன் சந்நியாசியாகி விடுவான்" என்பதுதான் அது. அப்படித்தான் சுவாமி சித்பவானந்தர் சந்நியாசி ஆனார்.

கோவையிலுள்ள ஸ்டேன்ஸ் பள்ளியில் உயர் நிலைக் கல்வி கற்றார். அதன்பின் சென்னை மாநிலக் கல்லூரியில் பி.ஏ. படித்த பிறகு, ஐ.சி.எஸ். படிப்பதற்காக லண்டனுக்கு அனுப்ப வேண்டும் என்று இவருடைய குடும்பத்தார் விரும் பினர்.

பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோதே சுவாமிகள் மிடுக்காக உடை அணிவார். ஹாக்கி, கால்பந்து முதலிய விளையாட்டுக்களில் அவ ருக்கு ஈடுபாடு அதிகம். சற்குரு சுவாமிகள் என்ப வரை சுவாமி சித்பவானந்தர் சந்திக்க நேர்ந்தது. அவர் மூலமாக ராமகிருஷ்ண பரமஹம்சரின் பெரு மையை உணர்ந்தார். அது அவரைத் துறவு வாழ்க் கையை நோக்கி இழுத்துச் சென்றது. அதனால், லண்டன் சென்று ஐ.சி.எஸ். படிப்பதைக் கைவிட்டு விட்டு ராமகிருஷ்ண மடத்தின் துறவியாக இணைந்தார்.

ராமகிருஷ்ண மடத்தில் துறவியானபிறகு அவருடைய ஆத்ம சாதனைகள் ஒன்றல்ல, இரண் டல்ல. ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதத்தில் மேன் மையான புலமை பெற்றார். தமிழில் அவர் எழுதிய திருவாசகம் பற்றிய உரை இன்றைக்கும் தமிழறிஞர்களை வியப்புக்குள்ளாக்குகிறது.

அதேபோல, ஆங்கிலத்தில் அவர் எழுதி யுள்ள நூல்கள் அவருடைய ஆங்கிலப் புலமைக் கும் அறிவுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கு கின்றன. சமஸ்கிருத சுலோகத்தை மிக அழகாக உச்சரிக்கக்கூடியவர். அருட்செல்வர் அவர்களிடம் மிகவும் அன்பு கொண்டவர்.

ராமகிருஷ்ண தபோவனத்தின் கிளைகள் தமிழ்நாட்டில் பரவ, அவருடைய தியான வாழ்க் கைதான் காரணம். பற்றற்ற ஞானி. பாசமிக்க தேசத்துறவி. பரிசுத்தம் மிக்க சந்நியாசி. பூரணமான வாழ்வு. புனிதம் மிக்க வாழ்க்கை. புகழ் மிக்க சாதனைகள் என்று அவருடைய இந்த மூன்று பாகங்களையும் படித்த வாசகர்கள் எவரும் ஒப்புக் கொள்வார்கள்.




இந்த மூன்று பாகங்களைப் படிப்பதன் மூலம் நம்முடைய ஆத்மா சுத்தியடையும். நமக்குக் கிடைக்கும் விடுதலையானது, ஒரு பேரின்ப உணர்வை ஊட்டத்தக்கது. அதுமட்டுமல்ல, இந்த மூன்று பாகங்களையும் வாசித்த ஒருவர், அவற்றை எப்படியாகிலும் தன் சந்ததியினருக்குக் கட்டாயம் இதை வழங்காமல் இருக்க முடியாது. அந்த அளவுக்கு ஆற்றல் மிக்க அணுக்களைக் கொண்டவை இந்த மூன்று பாகங்கள்.

**"வேதாந்தம் தந்த வீரத் துறவி சுவாமி சித்பவானந்தர்"**

ஆசிரியர் : யதீஸ்வரி கிருஷணப்ரியா அம்பா
வெளியீடு : ஸ்ரீ சாரதா ஆசிரமம், 58, சாரதா நகர், மணக்குள விநாயகர் தெரு, திருவண்ணா மலை – 606 603. விலை : ரூ. 675/– (மூன்று பாகங்களும்).

**– ந.நி.**

# வாசகர் கடிதம்

'ஓம் சக்தி' ஜூன் மாத இதழ் முகப்பு அட்டையில் வெளியாகியிருந்த கிருஷ்ண பரமாத்மாவின் விஸ்வரூப தரிசனக் காட்சி நம்மை வியக்க வைக்கும்படி இருந்தது!

**– ஏ. பாஸ்கர்,** சேலம்.

2 – 3 கோடி மக்கள் தொகைக்கு ஒரு மாநிலம் என்று பிரிக்கப்படுமானால், நிர்வாகம் மற்றும் வளர்ச்சிக்கு ஏதுவாக அமையும் என்று 'சுரங்கம்' பகுதியில் வெளியாகியிருந்த அருட்செல்வரின் கட்டுரை விளக்கியது.

**– கே. சத்தியமூர்த்தி,** மதுரை.

'ஓம் சக்தி' ஜூன் இதழில் வெளியாகியிருந்த நாக கணேசனின் 'ஆதிநாதர் தீர்த்தங்கரர்' கட்டுரை வித்தியாசமானதாகவும் அரிய தகவலாகவும் அமைந்திருந்தது.

**– தி. குமாரராஜா,** உடுமலை.

இனிய நந்தவனம் ஆசிரியர் சந்திரசேகரனின் பார்வையில், இன்றைய யாழ்ப்பாணத்தின் நிலையை உணர முடிந்தது. வேதனைக்குரிய விசயம் தான்!

**– ஆர்.கே. லிங்கேசன்,**
மேலகிருஷ்ணன்புதூர்.

முதுமைக் கிணற்றில் மூழ்கியதைப் பற்றி புலவர் அடியன் மணிவாசகன் உணர்ந்து பாடிய பாடல் உள்ளத்தை உருக்கியது.

**– சுப்ரமண்ய வெங்கடாசலம்,**
திருப்பத்தூர்.

தீர்த்தமலை தீர்த்தகிரீசுவரர் ஆலயம் குறித்து ஆன்மிகப் பின்னணியில் அழகாக எடுத்துரைத்துள்ளார் மு. சண்முகம்.

**– இரா. வளையாபதி,**
தோட்டக்குறிச்சி.

நவீன நீர்வழிச்சாலை கொண்டு வருவதற்கான முயற்சிகளைத் தெள்ளத் தெளிவாகத் தமது கட்டுரையில் விளக்கியிருக்கிறார் பொறியாளர் ஏ.சி. காமராஜ்.

**– லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.

கமலவேலனின் 'எதிர்வினை' சிறுகதை பெண்களை அடிமையாக நடத்துபவர்களுக்கு ஒரு பாடமாக இருக்கும். முள்ளை முள்ளால் எடுப்பது போன்று சிறுகதை அமைந்துள்ளது.

**– நன்னிலம் இளங்கோவன்,**
மயிலாடுதுறை.

சிவஞானபோதம் பற்றிய தகவல்கள் உண்மையைப் பேசுவன. அது மூல நூல்தான் என்பதற்கு ஏராளமான சான்றுகள் தரப்பட்டுள்ளன.

**– இரா. தியாகராசன்,** இலால்குடி.

'ஓம் சக்தி'யின் சுரங்கத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட அருட்செல்வரின் 'தேவை புதிய அரசமைப்புச் சட்டம்' என்றென்றும் நாம் சிந்தித்துச் செயலாற்ற வேண்டிய பல வழிமுறைகளைச் சுட்டிக் காட்டியுள்ளது.

**– என்.ஜே. கந்தமாறன்,** சென்னை.

முருக இலக்கிய மாநாடு, இயற்கை வாழ்வியல் மாநாடு, காமாட்சிபுரி ஆதீன விழா, புத்தக வெளியீட்டு விழா என ஜூன் மாத ஓம் சக்தி விழாக்களின் மலராக மணம் பரப்பியது.'

**– முத்தமிழருவி மாரிமுத்து,**
அ. வாடிப்பட்டி.

இறைநிலை எய்திய எழுத்தாளர் பாலகுமாரன் ஓம் சக்தியோடு தொடர்பில் இருந்தது யாவரும் அறிந்ததே. அவரைப் பற்றிய கண்ணீர் அஞ்சலிச் செய்தி உண்மையிலேயே கண்ணீரை வரவழைத்தது.

**– த. நாகராசன்,** சிவகாசி.

சிவஞானபோதம் மூல நூலே, மொழிபெயர்ப்பல்ல என முனைவர் ந.இரா. சென்னியப்பனார், முனைவர் அமுதன் ஆகியோர் தம் கட்டுரைகளில் தெளிவாக விளக்கியிருக்கிறார்கள்.

**– அப்பரடிப்பொடி ச. திருநாவுக்கரசு,**
முசிறி.

# எனது மகளைக் காணவில்லை!



எனது மகளைக் காணவில்லை.
வீட்டிற்குள் நுழைந்ததும் ‘அப்பா’ என்று
கத்திக் கொண்டே ஓடோடி வந்து
என் கால்களைக் கட்டிக் கொள்ளும்
எனது மகளைக் காணவில்லை.
நான் பால்சோறு ஊட்டிவிடும்போது
கைகொட்டி சிரித்துக் கொண்டே
எனது கன்னத்தைச் செல்லமாய்க் கடிக்கும்
எனது மகளைக் காணவில்லை.
பூங்காவில் என் கையைப் பிடித்துக் கொண்டே
நடக்கும்போது ‘அப்பா! எத்தனை பெரிய பூ
பாருப்பா!’ என்று விழிகளை வியப்பால்
விரித்துக் கூக்குரலிடும்
எனது மகளைக் காணவில்லை.
இரவு உறங்கச் செல்கையில்
என் கழுத்தைக் கட்டிக் கொண்டு
தன் காலை என் இடுப்பில் போட்டுக் கொண்டு
‘கதை சொல்லுப்பா!’ என்று நச்சரிக்கும்
எனது மகளைக் காணவில்லை.
அவள்
தனது இரண்டு குழந்தைகளை அணைத்துக் கொண்டு
அவள் வீட்டின் உள்ளே நுழையும் என்னை
‘வாங்கப்பா’ என்று புன்சிரிப்புடன் மெல்ல
அழைக்கிறாள்!
தாய்மை
குழந்தைமையை விழுங்கி விடுகிறது!



ஜெ. கமலநாதன்

கட்டுரை

# இப்படியும் ஒரு மாணவனா அர்ச்சுனன்?

**கோ**வை காந்தியடிகள் தமிழ்ப் பண்பாட்டு மையம் "மகாபாரதம் அன்றும் இன்றும்" என்ற உரைத் தொடரை சென்ற மே மாதம் 5, 6 தேதிகளில் நடத்தியது. அக்கருத்தரங்கில் அர்ச்சுனனைப் பற்றி "இப்படியும் ஒரு மாணவனா?" என்று உரையாற்றிய கவிதாயினி மீ. உமாமகேஸ்வரி அவர்களின் கருத்து, கட்டுரையாக வெளியாகிறது.

மகாபாரதத்தில் அர்ச்சுனன் பாத்திரம் அவனை ஒரு மாணவனாகச் சித்தரித்துள்ளது. அவனுடைய ஆசிரியராகக் கண்ணபிரான் இருக்கிறார். இதில் உள்ள முரண்பாடு, ஆசிரியர் மாணவனுக்குச் சாரதியாகவும், மாணவனோ யுத்த களத்தின் தளநாயகனாகவும் இருப்பதுதான்.

இவ்வாறு அடையாளப்படுத்தியதன் மூலம் வியாசப்பெருமான் எதனை விளக்க வருகிறார் என்பது சிந்திக்கத்தக்கது. ஏனெனில், ஆசிரியர் பொதுவாக உயர்வானவராகவும், மாணவன் அவருடைய அறிவுக்குச் சமம் இல்லாதவனாகவும் இருப்பான்.

அப்படிப்பட்ட நிலையில் ஆசிரியர் அமர வேண்டிய இடம் உயர்ந்ததாகவும், மாணவனின் இடம் அதைவிடக் கீழானதாகவும்தான் இருக்க வேண்டும். இங்கே அப்படி இல்லை. ஏன்?

கவிதாயினி மீ. உமாமகேஸ்வரி, இன்றைய காலத்திற்கான கல்வித்துறையில் முக்கியமான ஓர் அம்சத்தை விளக்கியிருக்கிறார். கல்வி என்பது மாணவனுடைய கேள்விகளுக்கு உரியது. மகாபாரதக் காலத்தில் கண்ணனிடம் இந்தச் சுதந்திரம் இருந்திருக்கிறது. அதே சமயத்தில் துரோணாச்சாரியார் என்ற அர்ச்சுனனின் குரு இதற்கு இடமளிக்கவில்லை.

இவற்றைப் பற்றியெல்லாம் கவிதாயினி உமாமகேஸ்வரி உரிய கேள்விகளை எழுப்பியிருக்கிறார்.

– இ.ஆர்.



**வா**சிப்பிற்கும், மறுவாசிப்பிற்கும் மிக அதிக அளவில் உட்படுத்தப்பட்ட காப்பியங்களில் முதன்மையானதாக மகாபாரதம் போற்றப்படுகிறது. ஆதி பர்வம் முதல் சாந்தி பர்வம் வரை விரிந்து பரந்த மகாபாரதம் எண்ணற்ற கிளைக் கதைகளோடு தழைத்திருக்கும் ஆலமரமாகும்.

"மகாபாரதம் தமிழ்ப்படுத்தும்

# கவிதாயினி மீ. உமாமகேஸ்வரி



மதுராபுரி சங்கம் வைத்து” என்று மாணிக்கவாசகரால் குறிப்பிடப்படும் பாரதம் வரலாறா, கவிதையா, கதையா, தத்துவக் களஞ்சியமா, மத இலக்கியமா? என்று கேட்டால், இவை அனைத்தும் ஒருங்கு சேர்ந்த மாபெரும் தொகுப்பே என்று அறுதியிட்டுக் கூறலாம்.

இந்த மாபெரும் காப்பியத்தில் எத்




தனை எத்தனை கதாபாத்திரங்கள். நடு நிலையாளர்கள், நம்பிக்கையாளர்கள், ஆசையுற்றவர்கள், ஆசையற்றவர்கள், கொள்கை மறவர்கள், கொள்கை துறந் தவர்கள், பழியஞ்சுபவர்கள், பாசத்தில் மிதப்பவர்கள், கருணையாளர்கள், கல் மனக்காரர்கள், வாக்கு தவறாதவர்கள், வாக்கு மீறுபவர்கள், சூது போர் வல்ல வர்கள், மோது போர் மறவர்கள், ஆச் சாரியர்கள், அற வாழி அந்தணர்கள் என்று எண்ணிலடங் காப் பாத்திரங்களால் நிரம்பி வழிகிறது பாரதம்.

இத்தனை பாத்திரங்களிலும் “வெஞ் சிலையினால் இவன் இராகவனை ஒக்கும்” எனப் புகழப்படுகிற அர்ச்சுன னின் தன்மைகள் நாம் கூர்ந்து நோக்கத் தக்கவையாகும். இப்படியும் ஒரு மாண வனா? என நம்மை வியக்க வைக்கிற அர்ச்சுனன், ஒரு மாணவனாகக் கல்வி யின் படிநிலைகளில் உயர்ந்து கொண்டே போவதனை மகாபாரதம் நமக்கு உணர்த்துகிறது.

மாணவன் தயாராக இருந்தால் ஆசிரியர் எங்கிருந்தாலும் அவனிடம் வந்து சேர்ந்து விடுவார் என்ற நியதிக் கேற்ப, துருபதனால் அவமானமுற்ற துரோணாச்சாரியார் “என் சீடன் உன்னைத் தேர்க்காலில் கட்டி அவ மானஞ் செய்வான்” என்று சபத முரைத்து அத்தினாபுரத்துக்கு வந்து சேர்கிறார்.

கௌரவர்களுக்கும், பாண்டவர் களுக்கும், அசுவத்தாமனுக்கும், கர்ண னுக்கும் ஆசிரியராகிறார். சரம் எடுப் பதும், தொடுப்பதும், கணையை விடு வதும் குறித்த கல்வியை 107 மாணவர் களுக்கும் ஒருசேரக் கற்றுத்தருகிறார். ஆனால் அர்ச்சுனன் மட்டுமே அனை வரிலும் சிறந்த மாணவனாக முதன்மை யிடம் பெறுகிறான்.

துரோணர் பறவையை நோக்கிக் கணை விடுக்கச் சொன்னபோது, அர்ச் சுனனுக்கு மரம், இலைகள், கிளைகள், பழங்கள் எல்லாம் மறைந்து பறவையின் கழுத்து மட்டுமே கண்ணுக்குத் தெரிந் திருக்கிறது. ஆசிரியரின் பாடத்தை அப் படியே உள் வாங்கிக் கொள்கிற உள்ளம், இம்மியளவு பிசகாமல் நிறைவேற்றுகிற பணிவு, குறிக்கோளை மட்டுமே தன்

கண்களில் ஏந்துகிற திறமை இவை யனைத்தும் இணைந்த கலவைதான் அர்ச்சுனன்.

துரோணர், "அர்ச்சுனா! என் எதிரி யைக் தேர்க்காலில் கட்டி இழுத்து வா" என்றவுடன் ஏன், எதற்கு என்ற கேள்வி கள் எழுப்பாது அதனை நிறைவேற்று கிறான். தன்னைக் காட்டிலும் சிறந்த வில்வித்தைக்காரனான ஏகலைவனின் கட்டைவிரலைத் தன் குருதட்சணை யாகத் துரோணர் வாங்கி மகிழ்ந்த போது ஆசிரியரிடம் 'இதுதான் ஆசிரியத் தருமமா? ஏன் இப்படிச் செய் தீர்கள்?' என்ற கேள்விகளை மனிதாபி மான அடிப்படையில்கூட எழுப்பாத மிகக் கீழ்படிதலுள்ள மாணவனாக அர்ச்சுனன் விளங்குகிறான்.

சுருங்கச் சொன்னால், சொல்லித் தருவதைக் கவனமாகக் கேள், இடையில் பேசாதே, கேள்வி கேட்காதே, கீழ் படிந்து நட, ஆசிரியரை விமர்சிக்காதே என்று வலியுறுத்தும் குருசிஷ்ய கல்வி முறையின்படி கைகட்டி வாய்பொத்தி அடங்கியிருக்கிற மாணவன்தான் அர்ச்சுனன்.

இன்னும் சுருங்கச் சொன்னால், மன னம் செய்ததை அப்படியே ஒப்பிக்கிற கல்வியின் முதல்படி நிலையில் நிற் கிறான் துரோணரால் புகழப்பட்ட அர்ச்சுனன். ஆனால் கல்வியின் முக் கிய நோக்கம் மௌனமாய்ப் பணிந் திருத்தல் அல்ல, கேள்விகளை எழுப்பு வதுதான் முக்கியம் என்று கல்வி யாளர்கள் குறிப்பிடுகிறார்கள். கல்வி யின் இந்தப் படிநிலைக்கு முன்னேறு கிறான் அர்ச்சுனன்.

எங்கே நடந்தது இந்த மாற்றம்?

'ஆசிரியர் தான் வகுப்பறையின் மூச்சுக்காற்று' என்று ரஷ்யக் கல்வி யாளர் இவானோவ் குறிப்பிட்ட வகுப் பறையிலா? இல்லை... முப்புறமும் படைகள் சூழ்ந்திருக்கிற போர்க்களத் தில்தான் அர்ச்சுனனுக்கு இந்த ஞானோதயம் நிகழ்கிறது. ஆம்! போர்க் களம் வகுப்பறை ஆகிறது... தேரோட் டும் கண்ணன் ஆசிரியராகிறான்... சர மாரியாக அவனிடம் கேள்விக் கணை களைத் தொடுக்கிறான் அர்ச்சுனன்.

அவனின் சரங்களின் வேகத்தை மிஞ்சுகிறது கேள்விகள்... "கண்ணா பகைவர்களிடம் தானே போரிட வேண் டும். இரத்தமும் சதையுமான என் உறவினர்களிடம் ஏன் நான் போரிட வேண்டும்? என் அங்கங்கள் அயர்ச்சி யடைகின்றன. என் காண்டீபம் கை நழுவுகிறது கண்ணா" என்று சொல்லி, தன் உயிரினும் மேலான காண்டீப மெனும் ஆயுதத்தைக் கீழே போட்டு விடுகிறான்.

கேள்விகள் கேட்கத் தொடங்குகிற போதுதான் நாம் அறிவெனும் ஆயுதத் தைக் கையில் எடுக்கிறோம். அப்போது புற ஆயுதங்கள் எல்லாம் கைநழுவி வீழ்ந்து விடும் என்பதனைப் போர்க் களத்தில் வீழ்ந்து கிடக்கிற அர்ச்சுன னின் காண்டீபம் நமக்கு உணர்த்து கிறது. "காண்டீவம் ஏந்தி உலகினை வென்ற கல்லொத்த தோள் எவர் தோள்? எம்மை ஆண்டருள் செய்பவள் ஆரிய தேவியின் தோள்" என்று மகா கவியால் பாராட்டப்பட்ட அர்ச்சுனன் வாழ்க்கைக் கல்வியில் கரை தேர்ந்தவ னாகப் போர்க்களத்தில் நிற்கிறான்.

மாணவர்களிடம் ஆசிரியர்கள்தான் கேள்விகள் கேட்பார்கள். ஆனால் மாணவனின் அத்தனை கேள்விகளுக் கும் பதில் சொல்ல வேண்டிய நிலைக்கு ஆசிரியனை நிர்ப்பந்தித்த முதல் மாண வன் நமது அர்ச்சுனன்தான்.

கீதையின் சாரதியாக கண்ணன் இருக்கலாம். ஆனால் கீதை தோன்று வதற்கான விதையாக மாணவன் அர்ச் சுனன்தான் இருந்திருக்கிறான். மொத் தத்தில், அடங்கி நடக்கிற கல்வியின் முதல் நிலையிலிருந்து ஆசிரியனைக் கேள்வி கேட்கிற அடுத்த படிநிலைக்குச் சென்ற அர்ச்சுனனைப் பார்த்து 'இப் படியும் ஒரு மாணவனா?' என நாம் வியக்கிறோம். ●

# வேண்டும் நீட் தேர்வு, வேண்டாம் சோதனை!

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

நீட் தேர்வு நிச்சயம் வேண்டும். நன்றாகப் படித்தும் வசதி வாய்ப்பு இல்லாத ஏழை, எளிய மாணவ, மாணவியரின் டாக்டர் கனவை நன வாக்கக்கூடிய நீட் தேர்வு மிக மிக அவசியம். சி.பி.எஸ்.இ.யின் மனிதாபிமானமற்ற, மற்ற மட்ட ரகமான சோதனைகளுக்கு இனி வரும் ஆண்டு களில் 'குட் பை' சொல்லிவிட்டு நீட் தேர்வை நடத்த வேண்டும்.

– **இரா. வளையாபதி**, தோட்டக்குறிச்சி

**ம**த்திய அரசு எதைச் செய்தாலும் செய்து காட்டிச் சாதித்துவிடுகிறது. நீட் விஷயத்திலும் அப்படித்தான் நடந்திருக்கிறது. இந்தியைத் திணிப்பதும், சமஸ்கிருதத்திற்கு முதல் மரியாதை கொடுப்பதும் இதுபோலத்தான். நீட் வேண்டும் தான். அதற்காக இத்தனை கெடுபிடிகள் மாண வர்களை அவமதித்த செயலே.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

'**நீட்**' என்னும் நீட்டாண்மைக் காரியே! 'வாட்' என்னும் வரி விதிப்பால் – 'ஓட்' போட்டவர் ஓலமிட – 'வேட்' வைக்காதே! 'நீட்டே' உனக் கொருநாள் நீட் வைப்போம்!

– **தெ. முருகசாமி**, பாண்டிச்சேரி.

**மா**நிலக் கல்வி முறை வேறு, மத்தியக் கல்விமுறை வேறு. மாநிலக் கல்வி முறையில் படித்த மாணவர்களை மத்தியக் கல்வி முறையில் படித்த மாணவர்களோடு, மத்தியக் கல்வி முறை யில் உருவாக்கப்பட்ட தேர்வு முறையில் போட்டி யிட வைத்தது வடிகட்டின ஏமாற்று வேலை, சதி காரத்தனம். பாலத்துறை பாலுவையும், விராட் கோலியையும் ஒரு பந்தயத்தில் எதிர் எதிர் அணி யில் ஆடவைத்தால் எப்படி இருக்கும்? அது போலத்தான் நீட் தேர்வும்.

– **ம.பெ. சுதந்திரகுமார்**, சென்னை.

**மா**ணவ, மாணவியருக்குத் திடீரென்று நீட் தேர்வை நடத்தி மனச்சங்கடமும், உயிர்ப்பலியும் ஏற்படுத்தி விட்டார்கள். ஆட்சியாளர்களோ, அதி காரிகள் மூலம் பல சோதனைகளை நடத்தி மனச் சங்கடத்தையும், பரீட்சை எழுதும் மாணவ, மாணவியரை அவமானப்படுத்துகிறார்கள். இனி மேலாவது, பயிற்சி கொடுத்து நீட் தேர்வை நடத்த வேண்டும்.

– **தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

'**நீட்**' தேர்வு அவசியமானது. நீட் தேர்வு எழுதிய பின்தங்கிய கிராமப்புறப் பகுதிகளில் உள்ள மாணவர்கள் அதிக இடங்களைப் பெற்றார் கள். சி.பி.எஸ்.இ. இயக்ககம் தேவையற்ற சோத னைகளை மேற்கொண்டது அந்த இயக்ககத் திற்கும் அழகல்ல. பிளஸ் டூ தேர்வு எழுதுவதைப் போலவே நீட் தேர்வை எழுத அனுமதிக்க வேண் டும். கல்வி முறையிலேயே ஏதோ ஒரு குறை உள்ளது. அதைச் சரி செய்தல் வேண்டும்.

– **சு. இலக்குமணசுவாமி**, மதுரை.

**நீட்** தேர்விற்குச் செல்வோர் எடுத்துச் செல் லக்கூடாத பொருள்கள் எவை எவை எனத் தெளிவாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. அவற்றைத் தவிர்த்தால் சோதனையின்போது எந்தவிதமான அழுத்தமும் ஏற்பட வாய்ப்பில்லை. இன்றைய அறிவியல் முன்னேற்றத்தில் மோதிரம், கம்மல், செயின், மூக்குத்தி, கைக்கடிகாரம் முதலிய வற்றில் கண்ணுக்குத் தெரியாத நுண்கருவி களைப் பதித்துச் செல்ல வாய்ப்பிருக்கிறது. அதனால்தான் அவை தடை செய்யப்பட்டுள்ளன. சோதனை செய்பவர்களும் தங்களுடைய பிள்ளை களும் எழுதுகிறார்கள் என்ற மனநிலையில் மென் மையாக நடந்து கொண்டால் சோதனை என்பது

வேதனையைத் தராது.

– **புலவர் கருமலைத்தமிழாழன்**, ஒசூர்.

**இ**தைப் போட்டுக் கொள்ளாதே, அதைப் போட்டுக் கொள்ளாதே என்று நீட் தேர்வு எழுத வரும் பிள்ளைகளைக் கட்டாயப்படுத்தும்போது அவர்களுக்கு அந்தத் தேர்வுமீது இருக்கும் ஈடு பாடு குறைந்து, பயந்து அந்தத் தேர்வை ஏனோ தானோ என்று எழுதிவிடுகிறார்கள். பயத்துடன் எந்த ஒரு செயலைச் செய்தாலும் அதில் வெற்றி கிடைப்பது அரிது. காப்பி அடிக்க நினைக்கும் பிள்ளைகள் எப்படியாவது காப்பி அடித்து விடுவர். மாணவர்களை அவர்கள் போக்கில் விட்டுப் பிடித் தால் ஆர்வமுடன் எந்தத் தேர்வையும் சந்திக்கத் தயாராக இருப்பர்.

– **உஷா முத்துராமன்**, திருநகர்.

**நீ**ட் தேர்வுக்கு ஆதரவாக உச்சநீதிமன்றமே தீர்ப்பு அளித்த பிறகு இருவேறு கருத்துக்களுக்கு இடமில்லை. சென்ற ஆண்டு தேர்வு எழுதிய 80 ஆயிரம் பேர்களைவிட, இந்த ஆண்டு 1 லட்சம் பேர்கள் பங்கேற்றதிலிருந்து, இந்தத் தேர்வுக்கு எத்தனை ஆதரவு உள்ளது என்பது தெரிகிறது. இன்றைக்குக் கிராமப்புற மாணவர்கள் நகர்ப்புற மாணவர்களைவிட எந்த வகையிலும் குறைந்தவர் கள் அல்ல என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. சோதனை என்ற பெயரில் ஓரளவிற்கு எச்சரிக்கை யாக இருக்க வேண்டியதுதான். ஆனால், சோதனை என்ற பெயரில் மாணவ, மாணவியரை மன உளைச்சலுக்கு ஆளாக்குவதை ஏற்றுக் கொள்ள முடியாது.

– **கே.என். பிச்சைமணி**, பொள்ளாச்சி.

### வித்தியாசமான பெயர்கள்!

*சரஸ்வதி தேவியைத் திபெத் திய மக்கள் 'யங்சன்ம' என்ற பெய ரால் வணங்குகிறார்கள். பாலித் தீவுப் பகுதியில் சரஸ்வதி பூஜை அன்று நம் நாட்டவர்களைப் போன்று புத்தகங்களை அடுக்கிப் பூஜை செய்கிறார்கள். இங்கு சரஸ் வதிக்குக் 'கலுங்கன்' என்று பெயர்.*

– ***ஆர்.கே. லிங்கேசன்***

**க**ல்வி வளர்ச்சி என்பது கட்டாயத்தேவை. இதில் தேர்வு என்பது சோதனை அல்ல. இதனால் முறையாகக் கல்வி கற்கும் மாணவர்கள் மனக் குழப்பம் அடைவார்கள். இதனை அரசு பின்பற்றிக் குழப்பம் ஏற்படாத வகையில் தேர்வு நடத்த வேண்டும். கல்வி கற்கும்போதும், தேர்வு எழுதும் போதும் மனக்குழப்பம் ஏற்படக்கூடாது.

– **இரா. தியாகராசன்**, இலால்குடி.

**எ**ல்லையில் தீவிரவாதியைச் சோதிப்பதைப் போல, நீட் தேர்வில் இந்திய மாணவர்களோடு மல்லுக்கட்டுவது அதிகப்படியானது. இவ்வளவு செய்யும் அவர்களால் ஊழலுக்கு எதிராக ஒரு தேர்வினை நடத்தி ஊழலை ஒழிக்க முடியுமா? தகுதியானவர்களைத் தேர்ந்தெடுக்கும் தலை மைத் தகுதி அத்தனை அதிகாரிகளுக்கும் உள்ள தென அந்த ஆண்டவன் வந்து சொன்னானா?

– **முத்தமிழருவி இ. மாரிமுத்து**,

அ. வாடிப்பட்டி.

**நீ**ட் தேர்வு அவசியம் என்று வலியுறுத்து வதற்கு மத்திய அரசு கூறும் அடிப்படைக் கார ணம் – திறமை உள்ள மாணவர்களைத் தேர்ந் தெடுத்து அவர்களைச் சிறந்த மருத்துவர்களாக உருவாக்க வேண்டும் என்பதுதான். அப்படியெ னில், நீட் தேர்வில் அதிக மதிப்பெண்கள் பெற்றுத் தேர்ச்சி பெறுபவர்கள்தானே தகுதியானவர்களா கவும், திறமையான மருத்துவர்களாகவும் இருக்க முடியும்? ஆனால், இட ஒதுக்கீடு அடிப்படையில் மொத்தம் 720–க்கு 96 முதல் 150 மதிப்பெண்கள் பெற்றுத் தேர்ச்சி பெற்றவர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டு மருத்துவர்கள் ஆகும் வாய்ப்பு இருக்கிறது. எனவே, நீட் தேர்வு மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டவர் களிலும் திறமையுள்ளவர்கள், திறமையில்லாத வர்கள் என்ற பாகுபாடு எழத்தானே செய்கிறது. இதை எங்ஙனம் நிவர்த்தி செய்வது?

– **உ.மு.ந. ராசன் கலாமணி**,
கோபிசெட்டிபாளையம்.

**மா**நிலக் கல்வித் திட்டத்தில், நமது குழந்தை கள் எப்படிப்பட்ட மதிப்பெண் பெற்றிருந்தாலும், உயிர் காக்கும் மருத்துவக்கல்வி பயில்வதற்கு, தகுதியான மாணவர்களைத் தேர்வு செய்வதற்கு 'நீட்' தேர்வு அவசியம் வேண்டும். அதே நேரத்தில் நீட் தேர்வு என்ற பெயரால் மாணவ, மாணவியரின் ஆடைகளைச் சோதனை செய்வது, மோதிரம், தோடு அணியக்கூடாது என்று நிர்ப்பந்தம் செய்வ தெல்லாம் கூடாது. ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். முதலிய

அட்டைப்பட விளக்கம்

## அருள்மிகு லட்சுமி நாராயணன்




**தே**வர்களும், அசுரர்களும் பாற்கடலைக் கடைந்த போது வெளிப்பட்டவள் மகாலட்சுமி. பரம்பொருளான நாராயணன், மகாலட்சுமியைத் தன் தேவியாக்கிக் கொண்டார். மகாலட்சுமி, செல்வங்களைத் தரும் கடவுளாகப் போற்றப்படுகிறாள். மகாலட்சுமியோடு இணைந்து காட்சிதரும் லட்சுமி நாராயணனைப் பௌர்ணமி நாட்களில் 'லட்சுமி நாராயணப் பூசை' செய்து வழிபட்டால் பல்வேறு செல்வங்கள் கிட்டும் என்பது நம்பிக்கை. ஆதிசேடன் மீது மகாலட்சுமியோடு சேர்ந்து அமர்ந்து திருமால் காட்சி தரும் 'லட்சுமி நாராயணன்' இம்மாத 'ஓம் சக்தி' அட்டைப்படத்தில்...

– **ஆர்.வி.**

அரசுத் தேர்வுகள் எவ்வாறு நடத்தப்படுகின்றனவோ, அதே நிலையிலேயே நீட் தேர்வையும் நடத்த வேண்டியது அரசின் கடமையாகும்.

– **நன்னிலம் இளங்கோவன்**, மயிலாடுதுறை.

**பு**னிதமான தொழிலான மருத்துவப் படிப்பிற்குத் திறமையான மாணவர்களைத் தேர்ந்தெடுக்க அகில இந்திய அளவில் பொதுவான நீட் தேர்வு அவசியம். இதனால், பணம் கொடுத்தோ அல்லது சாதி அடிப்படையில் மட்டுமோ சீட் வாங்கும் முறை ஒழியும். நடந்து முடிந்த நீட் தேர்வில் மாணவர்களைத் தேர்வு எழுதும் முன்பாகச் சோதனை என்ற பெயரில் அவமானப்படுத்தியது வேதனை தருவது. மத்திய, மாநில அரசுகள் மாணவர்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு, நீட் தேர்வை நடத்த வேண்டும்.

– **வெ. ஜெயலட்சுமி**, கோவை.

**கி**ராமப்புறங்களில் உள்ள மாணவர்களுக்கும், நகரப்புறங்களில் உள்ள மாணவர்களுக்கும் நீட் தேர்வு கட்டாயம் என்று சட்டம் தீட்டிவிட்டு, அலங்கோலம் செய்துவிட்டார்கள். மருத்துவத் துறை சிறப்பாக இருக்கவும், மக்களுக்கு நல்ல முறையில் மருத்துவம் செய்யவும், எதிர்காலத்தில் நீட் தேர்வு அவசியம் வேண்டும். சல்லடையில் வடிகட்டியதைப் போன்று திறமையுள்ள மாணவர்களைத் தேர்ந்தெடுப்பதே மிக மிக முக்கியமும் அவசியமும் ஆகும்.

– **லிங்கம் சின்னசாமி**, தாராபுரம்.

**உ**யர்ந்தபட்சத் திறமையான மருத்துவரை உருவாக்குவதே 'நீட் தேர்வின்' உன்னதமான நோக்கம் என்பதை மனித நேயமுள்ள மக்கள் யாரும் மறுக்க மாட்டார்கள். அதேசமயம் குழந்தையைப் பள்ளியில் சேர்க்கக் குறிப்பிட்ட வயது வரம்பு இருப்பதைப் போன்று, நீட் தேர்வில் குறைந்தபட்ச மார்க் எடுத்தால்தான் அந்தந்த மாநிலப் பாடத் திட்டத்தில் 12 வருடங்கள் பயின்று அதிக பட்ச மதிப்பெண் உடன் நீட் மதிப்பெண்களையும் சேர்த்து ரேங்க் தொகுப்பது அந்தந்த மாநில அரசின் அரசு உரிமை. சுயநிதிக் கல்லூரிகளில் அம் மாநில அரசுகளின் உரிமையின்படி சேர்த்துக் கொள்ள அனுமதிக்கும்போது, அதுவே அம்மாநில மாணவர்கட்கும் மக்களுக்கும் உண்மையில் பயனுள்ளதாக இருக்கும்.

நீட் தேர்வினையே அடிப்படையாகக் கொண்டு, யு.பி.எஸ்.சி. முறையில் மேற்கொண்டு எம்.டி., எம்.எஸ்., எம்.சிஎச், டி.எம். போன்று மேன்மேலும் படிப்பவர்களுக்கு ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., ஐ.ஆர்.எஸ்., ஐ.எப்.எஸ். மாணவர்களைப் போன்று தேர்ந்தெடுக்க, எல்லா மாநில மருத்துவர்களின் திறமையும் வெளிப்படும். ஒட்டுமொத்த இந்திய மருத்துவத்துறை சிறப்புறும். உலகத்தர மருத்துவர்களுக்கு ஒப்பானவர் என்பதும் பெருமை பெறும். மாநில அரசுகளின் உரிமையும் மதிக்கப்பெறும். மாணவர்களின் திறமையும் வெளிப்படும். மக்களின் உடல்நலனும் காக்கப்படும். அதேபோன்று நீட் தேர்வின் அடிப்படையில் தேர்ந்தெடுத்து உருவாக்கப்படும் மாணவர்கள், உலகத்தரம் வாய்ந்தவர்களாகவும், எதிர்கால விஞ்ஞான வளர்ச்சிக் கேற்பத் திறமையை வளர்க்க ஏதுவாக அமையும்.

– **விஜய சண்முகம்**, கோவை.





கட்டுரை

# பஞ்சமோ பஞ்சம் குடிநீருக்கு!

திட்டக்குழுவுக்கு மாற்றாக உருவாக்கப்பட்டுள்ள 'நிதி ஆயோக்' இந்தியாவில் மிக விரைவில் ஏற்படக்கூடிய தண்ணீர்ப்பஞ்சத்தைத் தண்டோரா போட்டு எச்சரிக்கை செய்துள்ளது.

பொதுவாக, இந்தியா என்றாலே உணவுப் பஞ்சம் உள்ள நாடு என்றுதான் சொல்வார்கள். இது சுதந்திரத்திற்கு முன்பு. உணவுப் பற்றாக்குறை காரணமாகக் கிடைத்த உணவுப் பொருள்களை விகிதாச்சார அடிப்படையில் விநியோகிக்க ரேஷன் கடைகள் அப்போதுதான் தோன்றின. பர்மாவிலிருந்து அரிசிக் குருணைகள் இறக்குமதி செய்யப்பட்டு இந்தியாவில் விநியோகிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் காங்கிரஸ் ஆட்சியிலேயே கஞ்சித்தொட்டி வைத்து ஏழைகளுக்கு உணவு தந்தார்கள். 1967–இல் நடந்த தமிழ்நாட்டின் ஆட்சி மாற்றம் ஏதோ இந்தி எதிர்ப்புக் காரணமாகத் தி.மு.க.வுக்கு வழிவகுத்து விட்டது என்று ஒரு தவறான கருத்து நிலவுகிறது.

உண்மையில் 1966 – 67களில் கடுமையான அரிசிப் பஞ்சம் தமிழ்நாட்டில் தலைவிரித்து ஆடியது. ஒரு பக்கம் உணவு உற்பத்திப் பற்றாக்குறை. இன்னொரு பக்கமோ, கேரளாவுக்கு அரிசி கடத்தல். இதனால், கடுமையான அரிசித் தட்டுப்பாடு தமிழ்நாட்டில் ஏற்பட்டது. மக்கள் பசியால் துடித்தார்கள். இந்தி மொழி வந்த காரணத்தால் அவர்கள் சிரமப்படவில்லை. கஞ்சிகூடக் குடிக்க வழியில்லாமல்தான் சிரமப்பட்டார்கள்.

1967–இல் தமிழ்நாட்டில் நடந்த ஆட்சி மாற்றத்திற்கு முதல் காரணம், அரிசிப் பஞ்சம். இரண்டாவது, மூன்றாவது காரணம்தான் இந்த இந்தி எதிர்ப்பு அதிருப்தி. ஆகவே, உணவுப் பஞ்சத்தால் மட்டுமே சிரமப்பட்ட தமிழ்நாட்டிற்குக் கடந்த 70 ஆண்டுக்கால அரசு நடவடிக்கைகளாலும், விவசாயப் பல்கலைக்கழகங்களின் அமோக மகசூல் தரும் பயிர்களை அறிமுகப்படுத்தியதாலும் உணவு தானிய உற்பத்தி தமிழ்நாட்டில் பன்மடங்காகப் பெருகியது. இந்த ஆண்டு 1 லட்சத்து 10 ஆயிரம் டன் உணவு தானியம் உற்பத்தியாகியது. இந்தியாவின் மொத்த உணவு உற்பத்தி 26 கோடி டன்.

ஆகவே, தமிழ்நாட்டில் உணவுப் பஞ்சம் என்பது அநேகமாக இல்லை. தமிழ்நாட்டில் அரசே குடும்ப அட்டைதாரருக்கு 20 கிலோ இலவச அரிசி தருகிறது. இப்படியான தமிழ்நாட்டில் கடந்த 10 ஆண்டுகளாகத் தஞ்சைத் தரணி பாலைவனமாகியது. காவிரியில் தண்ணீர் திறந்துவிடப்படுவதில்லை. பாசனப் பற்றாக்குறை. முல்லைப் பெரியாறு அணையிலிருந்து தண்ணீர் பெற நீதிமன்றத் தீர்ப்பு உதவியது. பாலாற்றில் ஆந்திரா பல தடுப்பணைகளைக் கட்டி அந்த ஆறு பாழாறு ஆகிவிட்டது. அதேபோல ஹேமாவதி, ஹேரங்கி, கபினி என்று கர்நாடக அரசு கட்டிய அணைகளால் தமிழ்நாட்டிற்குத் தரப்படுகிற தண்ணீர் சொற்பமாகிவிட்டது. இப்போதுதான் வழக்குப் போட்டு வெற்றி பெற்றிருக்கிறோம். இன்னும் 'காவிரி மேலாண்மை ஆணையம்' முழுமையாக

அமையவில்லை.

இவ்வாறு, உணவு தானியப் பஞ்சம் ஏற்படு கிறது என்றால், அதற்குக் காரணம் பாசன நீருக்குப் பஞ்சம் ஏற்படுவதால்தான். பாசன நீரோ பக்கத்துச் சகோதர மாநிலங்கள் பரிதாபப்பட்டு நமக்குத் தந்தால்தான். உபயோகித்துக்கொள்ள முடியாத அளவிற்கு அவர்களுக்கு உபரி நீர் இருக்குமானால், அதற்கான வடிகாலாகத்தான் தமிழகத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

இந்தப் பின்னணியில்தான் ‘நிதி ஆயோக்’ என்ற நமது திட்டக்குழு அமைப்பு, ஓர் அதிர்ச்சி அறிக்கையை வெளியிட்டுள்ளது. பாசன நீருக்குத் தமிழ்நாட்டில் மட்டும் பற்றாக்குறை அல்ல. இன் னும் பல மாநிலங்கள் இதற்குப் பலியாக உள்ளன என்ற எச்சரிக்கையை இப்போதே தெரிவித்து விட்டது. இது நடக்கப் போவதாக ஊகிப்பது இன் னும் 10 ஆண்டுகளுக்குப் பிறகுதான். ஆனால் அது வருவது உறுதி. சந்தேகமில்லை.

இந்த அறிக்கை பஞ்சாங்கத்தை வைத்தோ, ஜோதிடத்தை வைத்தோ கணிக்கப்பட்டதல்ல. பத்தாண்டுக் கால நீரின் அளவை வைத்து, நிலத் தடி நீர் அளவை வைத்து, வெப்பத்தால் ஏற்பட்ட பருவநிலை மாற்றத்தில் ஏற்பட்ட தாக்கத்தை வைத்து வந்த முடிவுகள்தான் இவை. இவற்றைப் புறந்தள்ள முடியாது.

சிந்துச் சமவெளியில் 900 ஆண்டுக்காலமாக ஒரு சொட்டுத் தண்ணீர்கூட அப்பகுதியில் இல் லாமல் போனதால், அந்த வெப்பத்தாலேயே மொகஞ்சதாரோ, ஹரப்பா நகரங்கள் மண்ணுக் குள் புதைந்து போயின. இதேபோலக் கடல் கோளால் ஏற்பட்ட விபத்தால் தலைநகரம் தென் மதுரை அழிந்தது. இவ்வாறு கடல் கொந்தளிப்பால் தமிழகம் அழிந்துள்ளது. வெப்பத்தால் சிந்துச் சமவெளி அழிந்துள்ளது.

நிதி ஆயோக் தந்திருக்கிற எச்சரிக்கை, பாசனப் பற்றாக்குறையால் வற்றிப்போய், வறண்டு போய் ஒருவேளை இந்தியா பாலைவனமாகுமோ என்ற கவலையை ஏற்படுத்துகிறது. இந்த எச் சரிக்கை மட்டும் நமக்குப் போதாது. எச்சரிக்கை யோடு சேர்ந்து அதை வெற்றி கொள்வதற்காக எடுக்கப்படும் நடவடிக்கைகளையும் விஞ்ஞான ரீதியில் நிதி ஆயோக் தரத் தவறி விட்டது என்றே தோன்றுகிறது.

இந்தியா என்ற இந்தப் பிரதேசம் இயற்கை யாகவே மூன்று பக்கமும் கடல் சூழ்ந்த பகுதி. தமிழ்நாடு, ஆந்திரா, ஒடிசா, வங்கம் வரை வங்காள குடாக் கடல். கேரளம், கர்நாடகம், மகா ராஷ்ட்ரா, குஜராத் வரை அரபிக்கடல் சார்ந்த பகுதி. இந்த இருபக்க மாக் கடல்களிலும் உப்புத் தண்ணீர்தான் உள்ளது. இன்றைய நவீன விஞ் ஞானம் தண்ணீரில் உள்ள உப்பை மட்டுப்படுத்தி, அதை ஆற்று மணல் தண்ணீர் போல ஆக்கித் தருகிறது. அதைத்தான் கடல் நீரைக் குடி நீராக்கும் திட்டம் என்கிறோம்.

மத்திய நீர்வழிச்சாலை அமைச்சர் நிதின் கட்காரி அவர்கள், கடல் நீரைக் குடிநீராக்கும் திட்டத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார். அந்த நவீனத் திட்டம் விரைந்து நடைமுறைக்கு வந்து விடுமானால், குடிநீர் மற்றும் பாசனப் பற்றாக்கு றையால் இந்தியா பாதிக்காது. இதில் எவ்வித ஐயமும் இல்லை.

கடவுள் ஒரு கதவை மூடுகிறார் என்றால், இன்னொரு கதவைத் திறந்து வைக்கிறார் என்று தான் கருத வேண்டும்.





அதனால், நிலத்தடி நீர், பருவ மழை நீர், நதி நீர் எல்லாமே காணாமல் போனாலும் கடல் நீர் நமக்கு ஏராளமாக உள்ளது. அதைக் குடிநீராக்க விஞ்ஞானம் உள்ளது. சூரிய சக்தியிலிருந்து மின்சாரத்தைத் தயாரிக்கிற நவீன யுகம் இது. அஞ்சத் தேவையில்லை. யாரிடமும் சென்று கெஞ்சத் தேவையில்லை.

**‘நி**தி ஆயோக்’ என்ற நமது திட்டக்குழு, அதிர்ச்சி தரத்தக்க ஒரு முடிவை அறிவித்துள்ளது. இன்னும் 10 ஆண்டுகளுக்குப் பிறகு 2030–இல் இந்தியாவில் கடுமையான குடிநீர்ப் பஞ்சம் ஏற்படப்போகிறது என எச்சரிக்கை செய்துள்ளது.




இதுவரை அப்படிப்பட்ட தண்ணீர்ப் பஞ்சம் நமது நாட்டில் ஏற்பட்டதில்லையாம். 2030–இல் நமது குடிதண்ணீர்த் தேவைக்கும், கிடைக்கும் குடிதண்ணீருக்கும் பெரிய வித்தியாசம் சம்பவிக்க உள்ளதாம். 60 கோடி மக்களுக்குக் கடுமையான குடிதண்ணீர்ப் பஞ்சம் ஏற்படப் போகிறதாம்.

பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைக்காமல் இப்போதே ஆண்டுக்கு 2 லட்சம் மக்கள் பசியால் அல்ல, தாகத்தால் மரணமடைவதாகப் புள்ளி விபரம் கூறுகிறது. அந்த ஆய்வு மேலும் கூறுகையில், 21 நகரங்கள் பாதிக்கப்பட உள்ளன என்கிறது.

டெல்லி, பெங்களூரு, சென்னை, ஹைதராபாத் முதலிய நகரங்களின் நிலத்தடி நீர், 2020–இல் வற்றி வறண்டு போய்விடுமாம். 10 கோடி மக்களை இது பாதிக்கும் என்கிறது அந்த ஆய்வு. இதனால், 2050–இல் நமது மொத்த உள்நாட்டு உற்பத்தியே 6 சதம் வீழ்ச்சியடையலாம்.

இதற்கு மேல், 40 சதம் நிலத்தடி நீர் வற்றிப் போய்விடும். மீண்டும் அது உற்பத்தியாகாது. இத்துடன், மிச்சம் கிடைக்கும் குடிநீரில் 70 சதம் தொற்று நோய் உண்டாக்கும் நீராகவே இருக்குமாம்.

குடிதண்ணீர்ப் பிரச்சனையைச் சமாளிக்கக் கூடிய சக்தி வாய்ந்த 24 மாநிலங்களில் குஜராத், ஆந்திரா, மத்தியப்பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்கள் முதலாவதாக உள்ளன என்கிறது அந்த ஆய்வு.

இதேபோல ஜார்க்கண்ட், பீகார், ஹரியானா முதலிய 3 மாநிலங்கள் அந்த 24 மாநிலங்களில் கடைசியாக உள்ளன. இவை இந்த ஆண்டே கடுமையான குடிதண்ணீர்ப் பஞ்சத்தால் பாதிக்கப்பட உள்ளன.

இவை ஹிமாச்சலப் பிரதேசம் சார்ந்த மாநிலங்கள். இப்பட்டியலில் 8 மாநிலங்கள் உள்ளன. ஏறக்குறைய 60 சத மாநிலங்கள் மிகவும் ஆபத்தான சூழ்நிலையில் அகப்பட்டுள்ளன.

உ.பி., ஒடிசா, சத்தீஸ்கர் மாநிலங்களின் விவசாய உற்பத்தி 20 – 30 சதம் குறைந்து விடுமாம். நிலத்தடி நீர் வறண்டு போவதால், நமது உணவுப் பாதுகாப்புக்குச் சரிவு ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகள் அதிகம்.

இந்த எச்சரிக்கை முன்கூட்டியே செய்யப்பட்டுள்ளதால், நாம் என்ன விதமான நடவடிக்கைகளை மேற்கொண்டு தண்ணீர்ப் பஞ்சத்தைச் சமாளிக்கப் போகிறோம் என்பது தெளிவாகத் தெரியவில்லை.

2019–இல் ஆட்சி மாற்றத்தை ஏற்படுத்துவதில் அதிகமான பிரச்சாரம் நடத்தப்படுகிறது. ஆட்சியைத் தக்கவைத்துக் கொள்வதற்கும், முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன.

தண்ணீர்ப் பஞ்சமோ எந்த ஆட்சி வந்தாலும் ஏற்படப்போகிறது என்பதை அரசியல்வாதிகள் அல்ல, அறிவியல்வாதிகள் அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

**– ந.நி.**



# கடல்

- எஸ். மேகநாதன்

மையென்றும் முகிலென்றும் மழைவண்ணம் இவனென்றும்
இறைவண்ணம் துதி பாடுவார்.
கார் மேகம் கருமேகம் ககன இடி மின்னலுடன்
விளையாடும் நீலமேகம்.
வானமழை பொய்த்துவிட வயல்வெளிகள் வறண்டுவிட
உயிர் வாழ்க்கை பொய்யாகிடும்.
வான் இன்றி உயிர் இல்லை நான் இன்றி வான் இல்லை
உண்மையிது பொய்மையில்லை.
மறையாத சத்தியம் அழியாத நித்தியம்
நான் மட்டும் நிலையானவள்!
இருந்தாலும் இறந்தாலும் இனி வந்து பிறந்தாலும்
அனைத்துக்கும் தாயானவள்.
எடுக்க மனம் தினம் நாடி கொடுக்காத சிறிய மனம்
பொக்கிஷமா மனித மூடா!
வந்தவைகள் சென்றாலும் திரும்பாது போனாலும்
கொடுப்பதுதான் எங்கள் தர்மம்!

எடுத்தாலும் கவர்ந்தாலும் கோடி முறை முகந்தாலும்
என் பாண்டம் குறையாதது.
கள்வர்க்கும் பொருளாகும் இழந்தார்க்கும் குறையாது
அன்புக்கு நிகரானது!
மானிடர்கள் மறைந்திடுவர் தலைமுறைகள் மறைந்துவிடும்
மனித இனம் நிலையானது.
மன்னவர்கள் மறைந்தாலும் மணிமுடிகள் உருண்டாலும்
மறையாது அலை ஓசைதான்.
மணல் எண்ணி தொலையாது காலத்தின் கணக்கென்ன
தேடும் தினம் அறிவானது.
ஆழத்தில் அன்பாக அகலத்தில் நிகளத்தில்
அறிவாக விரிவானது.
கடல் மிஞ்சும் பேராசை அலைப்பட்ட துரும்பு நீ
நிறைவேது மனித மூடா!
கடல் போன்று நிறைவாக நூறாண்டு வாழ்ந்துவிட
வேண்டும் மனம் நிறைவானது.

கட்டுரை

# பித்ருக்கள் தவம்



முனைவர் கோ. அழகர்ராமானுஜம்

**ந**மது பித்ருக்களை நன்றியுணர்வோடு நினைத்துப் பார்க்கிற நாள்தான் பித்ருக்கள் திவஸ் (நாள்). நாளடைவில் அது ‘பித்ருக்கள் திவசம்’ என்று அழைக்கப்பட்டு, அதன் மூல சத்தியம் மறைந்து சடங்குகள் மேலோங்கி சிலருக்கு அது பொருள் ஈட்டுகிற ஓர் உபாயமாக மாறிவிட்டது.

அந்தத் தினத்தன்று யார் யாரெல்லாம் நமது பித்ருக்கள் என்று நினைத்துப் பார்க்காமல், ஓர் ஆற்றங்கரையையும் அதன் அருகில் ஓடும் தண்ணீரைத் தேடியும் ஓடிக்கொண்டிருக்கிறோம். இந்த ஓட்டத்தில் பாமரன் மட்டுமல்ல, மெத்தப் படித்தவர்களும் அடக்கம். பித்ருக்கள் பெயரில் நடைபெறும் சாரமற்ற சடங்குகளைத் தவிர்த்து, அதிலுள்ள சத்தியத்தை நாடுவதுதான் பித்ருக்கள் தவம்.

***யார் நமது பித்ருக்கள்?***

நான் இந்தப் பூமியில் நானாக வருவதற்கு யார் யாரெல்லாம் காரணமாக இருந்திருக்கிறார்களோ அவர்களும், அவர்கள் உருவாக எது எதுவெல்லாம் காரணமாக இருந்தனவோ அவையும் எனது பித்ருக்களே!

என்னிலிருந்து எனது கடந்த காலப் பாதையில் நடந்து சென்றால், நான் முதலில் சந்திப்பது எனது பெற்றோர்களை. அவர்களைக் கடந்து எனது பாட்டி, பாட்டனார்; அவர்களையும் கடந்து சென்றால், முப்பாட்டனார், முப்பாட்டனாரின் பெற்றோர்கள்... அப்படியே சென்றோமானால் முதல் மனிதன், அவன் வருவதற்குக் காரணமாக அமைந்த ஐந்து அறிவு விலங்குகள், அவற்றிற்கும் முன்பாக வாழ்ந்த நான்கு அறிவு, மூன்று அறிவு... ஓரறிவு தாவரங்கள் என அனைத்தும் எனது பித்ருக்களே.

ஓரறிவுத் தாவரங்கள் உருவாகக் காரணமாக இருந்த ஐந்து பௌதீகப் பொருட்களுக்கும் அப்பொருட்களுக்கும் முன்பாக, அவற்றிற்கு ஆதாரமாக, அவை உருவாகக் காரணமாக விளங்கிய, இன்றும் விளங்குகிற ஆதியாகிய இறைநிலையும் எனது பித்ருவே. இறைநிலையில் எனது கடந்த காலப் பயணம் முடிவடைகிறது.

ஆதி இறைநிலையைப் ‘பரமண்டலத்தில் வாழும் பிதாவே’ என்று ஏசுபிரான் அழைத்ததன் மகிமையை நாம் உணர வேண்டும். பிதாவின் குமாரன் நான் என்று அறிவித்து, பிதாவைத் தன் பித்ருவாகக் கருதினார் ஏசுபிரான். The kingdom of God is within me என்றார் அவர்.

“அப்பா நான் வேண்டுதல் கேட்டருள்
புரிதல் வேண்டும்”

“தந்தையுமாய்த் தாயாகித் தாங்குகின்ற தெய்வம்”

என்ற வரிகளில் வள்ளல் பெருமான் அப்பா என்றும் தந்தை என்றும், தாய் என்றும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரைத் தனது பித்ருவாகப் பார்த்தார்.

எனது எண்ணற்ற பித்ருக்களின் வரிசையில் நான் பார்த்து, தொட்டுப் பழகிய, கைகோர்த்து நடந்த பித்ருக்கள் ஐந்து ஜோடிகளே. அப்பா, அம்மா, அப்பா வழிப் பாட்டன், பாட்டி, முப்பாட்டன் முப்பாட்டி, அம்மா வழிப் பாட்டன், பாட்டி, முப்பாட்டன் முப்பாட்டி.

இந்த ஐந்து ஜோடிகளிலும் நம்ம ஊர்ப் பெரிசுகள் சில இடங்களில் அம்மா வழிப் பித்ருக்களை விட்டுவிட்ட தால், இப்போது பிண்டம் கொடுப்பது மூன்று ஜோடிகளோடு நின்றுவிட்டது.

இந்த மூன்று ஜோடிகளுக்குப் பிண் டம் படைக்க அமாவாசை தினத்தைத் தேர்ந்தெடுத்தார்கள் நமது முன்னோர் கள். ஏன் அமாவாசை தினம்? அன்று அதுவரை வாழ்ந்து கொண்டிருந்த சந் திரன் மறைந்த நாள் அது. எனவே மறைந்தவர்களுக்குப் பிண்டம் கொடுக்க அன்றைய தினத்தைத் தேர்ந்தெடுத் தார்கள்.

எனக்கும் எனது பித்ருக்களுக்கும் உள்ள உறவு என்ன? எது எங்களை இணைக்கிறது? எனது செயல் எவ்வாறு எனது பித்ருக்களைச் சென்றடைகிறது? சற்று விரிவாகப் பார்ப்போம்.

“ஒவ்வொரு பொருளும் பரமுதலாய்

அவ்வுருவரையில் வந்த கதை

செவ்விய சிறுசொல் பரிணாமம்

சிறப்பை உணர்வாய் நீயுமதே”

என்றார் வேதாத்திரி மகரிஷி.

ஆதி பரத்தின் பரிணாம வளர்ச்சி யில் நான் ஒரு கட்டம் அல்லது ஒரு நிலை (State).

“பெரிய இயக்க மண்டலமே

பிரபஞ்சம் எனும் மேடையிலே

அரிய உருவ அழகோடு

ஆடுகின்றேன் நான் அவன் கதையாய்...”

என்பார் மகரிஷி.

உடல், உயிர், ஆத்மா என்ற மூன்று அம்சங்களைக் கொண்ட ஒரு ஜீவன் நான். எந்த ஒரு ஜீவனிலும் இந்த மூன்று அம்சங்களும் உண்டு. பறவை என்றா லும் சரி, பாம்பு என்றாலும் சரி, அவற் றைப் பார்த்துப் பரவசப்படுகின்ற மனி தன் என்றாலும் சரி, உடல், உயிர், ஆத்மா என்ற மூன்று அம்சங்களும் அனைத்து ஜீவன்களுக்கும் பொது வானவை. இந்த மூன்று அம்சங்களை யும் தத்துவார்த்தமாகவும், விஞ்ஞானப் பூர்வமாகவும், சற்று ஆழமாகப் புரிந்து கொள்ள அடுத்து ஒரு சிந்தனைக்கு வருகிறோம்.

உங்கள் வீட்டிலுள்ள தொலைக் காட்சிப் பெட்டியைக் கூர்ந்து கவனியுங் கள். பல சிறு சிறு பாகங்களை உள்ள டக்கிய மரத்தினாலோ அல்லது வேறு எந்தப் பொருளாலோ ஆன உடல் அதற்கு உண்டு. அந்த உடல் இயங்கு வதற்கு மின்னோட்டம் (மின்சாரம்) வேண்டும். அது எவ்வாறு இயங்க வேண்டும் என்று தீர்மானிப்பது நாம் வாங்குகிற அலையில் (Signal) உள்ள ஒலி, ஒளிப் பதிவுகள். ஒலிக் கருவி (Speaker) தரும் செய்தி நமக்குப் பிடிக்க வில்லை என்றாலோ, பார்க்கும் காட்சி நமக்கு வேண்டாம் என்றாலோ, அல் லது ஒலிக் கருவி பேசுகின்ற மொழி நமக்குப் பிடிக்கவில்லையென்றாலோ நாம் அலையை மாற்றிவிடுகிறோம். வேறு செய்திக்கோ, வேறு காட்சிக்கோ போக வேண்டுமென்றால் நாம் மாற்று வது அலையைத்தானே தவிர, பெட் டியை மாற்றுவதில்லை; மின்சாரத்தை யும் மாற்றுவதில்லை.

பெட்டி இயங்குவதற்கு மின்சாரம் வேண்டும்; ஆனால் அது எந்த வகை யில் இயங்க வேண்டும் என்று சொல் வதற்கு அலை (Signal) வேண்டும். ஒளி, ஒலிப் பதிவுகளைக் கொண்ட அலை தான் தொலைக்காட்சி பெட்டியின் ஆத்மா. தொலைக்காட்சிப் பெட்டியை நெறிப்படுத்தும் அதன் ஆத்ம அலைகள் எங்கோ உருவாக்கப்பட்டு அங்கு வந்து சேருகின்றன.

தொலைக்காட்சிப் பெட்டியைப் போன்று ஒவ்வொரு ஜீவனிடத்திலும் மூன்று அம்சங்கள் உண்டு. ஜீவனின் உடல், அந்த உடல் இயங்குவதற்கு உயி ரோட்டம்; அந்த உடல் இப்படித்தான் இயங்க வேண்டும் என்று நெறிப்படுத்த, பதிவுகளை உள்ளடக்கிய அந்த ஜீவனுக் குள்ளேயே உருவாகிற ஓர் அலைத் தொகுப்பு. ஒரு ஜீவனுக்குள் செயல் படும் பதிவுகளைக் கொண்ட அலை அந்த ஜீவனின் ஆத்மா எனப்படுகிறது.

ஒவ்வொரு ஜீவனிலும் உள்ள மூன்று அம்சங்களை கவிஞர் பெ. சிதம்பரநாதன் அவர்கள் இன்றைய



விஞ்ஞானத்தோடு இணைத்து ஒரு புதிய கருத்தை அண்மையில் தெரிவித் ததை வாசகர்களாடு பகிர்ந்து கொள் வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். கவிஞரின் கருத்து: தண்ணீருக்கு மூன்று நிலைகள் உள்ளன. ஒன்று திடநிலை. அது பனிக்கட்டி. இன்னொன்று திரவ நிலை. அது தண்ணீர். மற்றொன்று வாயு நிலை. அது நீராவி. இதேபோல மனிதனுக்கும் மூன்று நிலைகள். அவனு டைய உடம்பு ஸ்தூல உடம்பு. அது திட நிலை. மனிதனுடைய திரவ நிலை என்ன? அது அவனுடைய விந்து. வாயு நிலை என்ன? அது அவனுடைய ஆத்ம அலை. ஆத்மா என்பது ஓர் அலைத் தொகுப்பு என்பது விஞ்ஞானம் கலந்த மெய்ஞ்ஞானமாகும்.

ஒவ்வொரு பதிவையும் ஒரு கர்மம் (செயல்) உருவாக்குவதால், பதிவுகளைக் கர்மா என்றும் கூறுகிறோம். நமது ஆத்மா, கர்மப் பதிவுகளைக் கொண்ட ஓர் அலை என்பது நாம் உணர வேண் டிய உண்மையாகும். இந்த உண்மையை உணரும்போது சங்கரரை நாம் எளி தாகப் புரிந்து கொள்ளலாம். 'நிர்வாண சதகம்' எனும் புத்தகத்தில் சங்கரர் சொல்வார்: ஆத்மா அழியாதது; நீரி னால் நனையாதது; நெருப்பால் வேகா தது என்பார். ஆம், உண்மைதானே!

தொலைக்காட்சிப் பெட்டி கீழே விழுந்து உடைந்தாலும், அதை நெறிப் படுத்துகிற அலை இருக்கத்தானே செய் கிறது. அது அழியாது. எங்கோ இருந்து நமது பெட்டிக்குள் வருகிற அலை மழை யால் நனைவதுமில்லை; நெருப்பால் அதன் ஒளி, ஒலிப்பதிவுகள் மாறுவது மில்லை. அதைப் போன்றே நமக்குள் செயல்படுகிற ஆத்ம அலைகளும். உடல் இயக்கம் நின்று, உடல் உருமாறி அழிந்தாலும் நமக்குள் செயல்படும் ஆத்ம அலைகள் அழிவதில்லை. அவை நிரந்தரமாகின்றன. அலைகள் ஓய்வதில்லை; உடல் ஓயாமல் இருப்பதுமில்லை.

பித்துருக்கள் தவத்தின் மேன்மையையும், சிறப்பையும், முக்கியத்துவத்தையும் புரிந்து கொள்ள நாம் ஆத்ம அலைகளின் தாத்பரியத்தைத் தெரிந்து கொள்வது அவசியம். நமது உடல் இயக்கத்தை நெறிப்படுத்துகிற நமக்குள் இருக்கும் ஆத்ம அலைகள் எவ்வாறு உருவா கின்றன. சற்றுச் சிந்திப்போம்.

ஒரு விதையே மரமாகிறது என்பதை நாம் அறிவோம். விதையிலிருந்து மரம் வருகிறதா அல்லது விதையே விரிந்து விரிந்து மரமாகிறதா என்று கேட்டால் விதையே மரமாகிறது என்பதுதான் சரி யான கூற்று.

விதை மரமாவது அதன் வாழ்க்கை. மரம் மீண்டும் விதையில் சுருங்குவது அதன் இயற்கை. மரத்தின் மறுபிறவி அதன் விதை. இப்பொழுது ஒரு கேள்வி. எந்த விதை விரிந்து நாமாகி யிருக்கிறோம்? நாம் மறுபடியும் விதை யில் சுருங்குவோமா?

தந்தை விந்துவில் சுருங்க, தாய் கரு முட்டையாகிய நாதத்தில் சுருங்க, விந்து வும் நாதமும் சேர்ந்து ஒரு விதை உரு வானது. தந்தை விந்துவில் சுருங்குவதை அல்லது தாய் தனது கருமுட்டையில் சுருங்குவதை, அவர்கள் தனக்குள் ளாகவே எடுத்துக் கொண்ட முதல் பிறவி என்கிறது பிரஸ்ன உபநிடதம்.

விந்தணு கருமுட்டைக்குள் இணை வதுதான் உயிர் உற்பத்தி. தந்தையின் உடல், உயிர், கர்மா (ஆத்மா) என்ற மூன்று அம்சங்களின் சுருங்கிய நிலை தான் விந்து. அதே போன்று, தாயின்



உடல், உயிர், கர்மா என்ற மூன்று அம்சங்களின் சுருங்கிய நிலைதான் நாதம் அல்லது கருமுட்டை.

எனது தாய் தந்தையர்களின் விந்து நாதக் கூட்டுதான் எனது விதை. அந்த விதையின் விரிவுதான் நான். என்னில் எனது தாய் தந்தையின் உடல் கலப்பு இருக்கிறது; உயிர்க்கலப்பு இருக்கிறது; அவர்களின் ஆத்மக் கலப்பும் இருக் கிறது. என்னில் சரிபாதி தந்தையுடை யது, மற்றொரு பாதி தாயுடையது என்ற உண்மையை உணரும்போது, என்னில் என்னுடையது என்று சொல்ல ஒன்று மில்லை என்ற உண்மையையும் உணர்ந்து கொள்கிறேன்.

நானே எனக்கு சொந்தமில்லாத போது, எதன் மீதும் நான் சொந்தம் கொண்டாடுவது ஒருவித மயக்கத்தில் விளைந்த மாயையினால்தான். பொது வாக என்னுடைய உடல், என்னுடைய கைகள் என்று சொல்கிறோம். என்னு டைய உடலின் உயரத்தையோ, நிறத் தையோ அல்லது உடலுக்குள் இயங்கும் உறுப்புகளின் உறுதித் தன்மையையோ நான் தீர்மானிக்கவில்லை. இவையெல் லாம் எனக்குக் கொடுக்கப்பட்டவை. கொடுக்கப்பட்டதைப் பராமரிக்க மட்டுமே எனக்கு உரிமை உண்டு; அழிப் பதற்காக அல்ல. “எது உன்னுடையது இழந்தேன் என்று சொல்வதற்கு” என்று நம்மைப் பார்த்து பகவத் கீதை கேட்பது இப்போது நமக்குப் புரிகிறது.

உயிருள்ள விந்துவும் உயிருள்ள நாத மும் இணைந்து உருவான விதையின் விரிவுதான் நான். தாய் – தந்தை மூல மாக நான் பெற்ற கர்மப் பதிவுகளைச் சஞ்சித கர்மா என்கிறேன். நிலம் மீது விழுந்த பின்னே, எனது செயல்கள் (கர்மாக்கள்) ஆத்ம அலையில் உருவாக் குகிற பதிவுகளைப் பிராரப்த கர்மா என்கிறேன். சஞ்சிதம் மற்றும் பிராரப்த பதிவுகள் இணைந்து என்னை வழி நடத்துகின்றன.

என்னை வழி நடத்தும் எனக்குள் இருக்கும் ஆத்ம அலைகள் எனக்கும் முன்பாக எனது பெற்றோர்களுக்குள் இருந்து அவர்களை வழிநடத்தியது. இவ்வாறாகப் பின்னோக்கிச் சென்றால், இன்று என்னை வழிநடத்துகிற ஆத்மா எனக்கு முன்பாக எண்ணற்ற ஜீவராசி களுக்குள் இருந்து அவ்வவற்றை அவ் வப்போது இயக்கி வந்திருக்கிறது. பல ஜீவராசிகளை இயக்கி இயக்கி மிகவும் சலித்துவிட்ட ஆத்மா, நான் இயக்குவ தற்கு இன்னொரு உடல் வேண்டாம், மிகவும் இளைத்துவிட்டேன் என்று கெஞ்சுவதைச் சிவபுராணத்தில் நாம் பார்க்கலாம்.

பல்வேறு உடல்களை இயக்கிச் சலிப்பு அடைந்த நிலையை ‘இளைத் தேன்’ என்ற வார்த்தை குறிக்கிறது. ஆத்ம அலைகள் ஓர் உடலைவிட்டு, உதாரணமாகத் தந்தையின் உடலை விட்டு அவரது மகனின் உடலுக்குத் தாவுவது பிறப்பு எனப்படுகிறது. சிவ புராணத்திற்கு உரை எழுதிய திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் ‘இளைப்பு’ என்பதைச் ‘சலிப்பு அடைந் தேன்’ என்ற கருத்தில் பொருள் கூறு வதை நாம் கவனித்தல் வேண்டும்.

“புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன்
எம்பெருமான்”

என்னில் இன்றைக்கும் தந்தையின் ஆத்மப் பதிவுகளும் தாயின் ஆத்மப் பதிவுகளும் உள்ளன. எனது தந்தையா ரின் உடல் இன்று இல்லை, தாயின் உடலும் இன்று இல்லை. ஆனாலும் அவர்களது ஆத்மாக்கள் என்னில் இன் றும் செயல்படுகின்றன. எனது ஐந்து புலன்களும் தொட்டு உணர எனது பெற்றோர்களின் உடல் இல்லையே தவிர, எனக்குள்ளாக ஆத்ம நிலையில் அவர்கள் என்னில் வாழ்ந்து கொண்டு தான் இருக்கிறார்கள்.

உடலால் மறைந்த எனது தாய் – தந்தை எனக்குள்ளாக ஆத்ம அலை களாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்ற தாத்பரியம்தான் பித்ருக்கள் தவ நிலையின் அடிப்படையாகும். என்னில் இருக்கிற தாய், தந்தையரின் ஆத்மாக் களைச் சாந்தப்படுத்துவதுதான் பித்ருக் கள் தவத்தின் முக்கிய நோக்கமாகும்.

ஆத்மாவைச் சாந்தப்படுத்துவது எப்படி? வரும் இதழில்... ●



கட்டுரை

# மீண்டும் பெரிய கோவிலில் 'ராஜராஜன்'



மீட்கப்பட்ட ராஜராஜன், உலகமாதேவி திருமேனிகள்.

ஆண்டு 1932.

தஞ்சாவூர்.

மெல்ல, மெல்ல அந்தச் செய்தி, ஊர் முழுவதும் பரவுகிறது.

செய்தியினைக் கேட்ட யாவரும் திடுக்கிட்டுத்தான் போனார்கள். நம்ப முடியாமல், திகைத்துத்தான் போனார்கள்.

சிலைகளைக் காணவில்லை. தஞ்சைப் பெரிய கோவிலில் இருந்த, இரண்டு சிலைகள் மாயமாய் மறைந்துவிட்டன. இவற்றின் தற்போதைய மதிப்பு ரூ. 150 கோடி.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், பொய்கை நாட்டுக் கிழவன், தென்னவன் மூவேந்த வேளாளன் அவர்களால், செய்யப் பெற்ற செப்புத் திருமேனிகள், காற்றோடு காற்றாய்க் கரைந்து போய்விட்டன.

தேவாரப் பதிகங்களைத் தில்லைக் கோவிலில் இருந்து மீட்டுவந்து, ஓதுவார்களை நியமித்து, நாடெங்கும் பரப்பினார் அல்லவா? அவர் சிலை காணாமல் போய்விட்டது.

மலைகளே இல்லாத சோழ மண்டலத்தில், ஐம்பதாயிரம் டன் சலவைக் கற்களால், ஒரு மாபெரும் கட்டமைப்பை நிறுவினார் அல்லவா? அவர் சிலை காணாமல் போய் விட்டது.

ஆம், அறிவி



கரந்தை ஜெயக்குமார்

யல் தொழில்நுட்பம் வளர்ச்சியடை யாத, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், உலகே வியந்து போற்றும் வகையில், மாபெரும் கற்றளியை எழுப்பினார் அல் லவா, மாமன்னர் இராஜராஜ சோழன், அவர் சிலை, அவர் எழுப்பிய கோவி லில் இருந்தே காணாமல் போய் விட்டது.

இராஜராஜன் சிலை மட்டுமா, பட்டத்தரசி உலக மாதேவியின் சிலை யும் சேர்ந்தே காணாமல் போய் விட்டது.

அடியார்கள், பக்தர்கள், தமிழறிஞர் கள், தொல்லியல் ஆய்வாளர்கள் அதிர்ச்சி அடைந்தனர். ஆங்கிலேயர் ஆட்சியில் எதுவும் செய்ய இயலாநிலை. தஞ்சை மக்கள் காத்திருந்தனர்.

*1947*–ஆம் ஆண்டு, நம் நாடு சுதந் திரம் பெற்றவுடன், பிரதமர் நேருவிடம், 'ராஜராஜனைக் கண்டுபிடித்துத் தாருங் கள்' எனக் கோரிக்கை வைத்தனர். கோரிக்கை வைத்ததோடு அமைதி யடைந்துவிடாமல், தேடுதல் வேட்டை யிலும் இறங்கினார்கள்.

பெரிய கோவிலில் உள்ள ஒரு கல்வெட்டில், ராஜராஜன் மற்றும் உலகமாதேவியின் செப்புச் சிலைகளைப் பற்றி, விரிவானக் குறிப்புகள் காணப்படு கின்றன.

இச்சிலைகளின் உயரம், சிலைகளின் ஆடை அணிகலன்களைப் பற்றிய விவரங்கள்கூட, இக்கல்வெட்டில், தெளி வாய்ப் பொறிக்கப்பட்டுள்ளன. கல் வெட்டுக் குறிப்புகளை வைத்துக் கொண்டு தேடுதலைத் தொடர்ந்தனர். தமிழறிஞர்கள், தொல்லியல் அறிஞர்கள் மற்றும் வரலாற்று ஆய்வாளர்களின் தொடர் தேடலில், இச்சிலைகள், குஜ ராத் மாநிலத்தில் உள்ள, கௌதம் சாரா பாய் அருங்காட்சியகத்தில் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது.

*1984*–ஆம் ஆண்டு, இராஜராஜ சோழனின் ஆயிரமாவது பிறந்த நாள் விழாவிற்கு வந்த, அன்றைய பிரதமர் இந்திரா காந்தி அவர்களிடமும், அன்றைய தமிழக முதல்வர் எம்.ஜி.ஆர் அவர்களிடமும் கோரிக்கைகள் வைத் தனர்.

செப்புத் திருமேனிகளை மீட்டுத் தாருங்கள் எனக் கோரினர். பலன் இல்லை.

*2010*–ஆம் ஆண்டு நடைபெற்ற பெரிய கோவிலின் ஆயிரமாவது ஆண்டு, சதய விழாவிற்கும் முன்னதாக, சிலைகளை மீட்டு வர, முயற்சிகளை மேற்கொண்டார், அன்றைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள். அமைச்சர் தங்கம் தென்னரசு, இறை யன்பு ஆகியோர் தலைமையில் குழு அமைத்து முயற்சிகளை மேற்கொண் டார். ஆயினும் முயற்சி வெற்றி பெற வில்லை. தஞ்சை நகர மக்களின் ஏக்க மும் தீர்ந்தபாடில்லை.

இந்நிலையில், கடந்த ஆண்டு *2017*, ஆகஸ்ட் மாதம், தஞ்சையின் புதிய காவல் கண்பாணிப்பாளராக, உடலில் காக்கியையும், உள்ளத்தில் செந்தமிழை யும் சுமந்து மகிழும், முனைவர் த. செந் தில்குமார் அவர்கள் பொறுப்பேற்றார். இவர் தமிழை நேசிக்கப் பிறந்தவர். தமிழைச் சுவாசிக்கப் பிறந்தவர். இவர் மேடையேறி வாய் திறந்தால், சங்க இலக்கியங்கள் அருவியாய் ஆர்ப் பரித்துக் கொட்டும்.

இவர் தன் வீட்டில், சிறுகச்சிறுகச் சேமித்து வைத்திருக்கும் நூல்களின் எண்ணிக்கை இருபத்து ஐந்தாயிரத் தையும் தாண்டும். அத்துணையும் இவர் வாசித்த, நேசித்த நூல்கள். இவரது குழந்தைகளின் பெயரே, இவர் தமிழ்மீது கொண்ட, பற்றை, காதலை, நமக்கு உணர்த்தும். செம்மொழி பாரதி, இவ ரது அன்பு மகள். திருவாசகம், இவரது பாச மகன்.

இவர் தஞ்சைக்கு வந்த அன்றே, பெரிய கோவிலுக்குச் சென்றார். தமிழின் மீதும், சிவனின் மீதும் இவர் கொண்ட பற்றினை அறிந்த தமிழார் வலர்கள், தஞ்சை மக்களின் நீண்டகால ஏக்கத்தை, துயரத்தை, இவரிடம் எடுத்துக் கூறினர். எங்கள் அரசரையும், பட்டத்து ராணியையும் மீட்டுத் தாருங் கள் என வேண்டினர்.



சிலைகளை மீட்டெடுத்த
ஐ.ஜி. திரு. பொன். மாணிக்கவேல்,
காவல் கண்காணிப்பாளர் திரு. த. செந்தில்குமார்.

அன்றே முடிவெடுத்தார். எப்படி யாவது, அரும்பாடுபட்டு, குஜராத் தேசத்தில் இருந்து, சிலைகளை மீட்டு, மீண்டும் சோழ மண்ணிற்குக் கொண்டு வர வேண்டும் என்று அன்றே முடி வெடுத்தார். வரலாற்று ஆய்வாளர்கள், தொல்லியல் அறிஞர்களுடன் கலந்து ஆலோசித்தார்.

இந்நிலையில், ஒரு நாள், தஞ்சைக்கு வந்திருந்த, சிலை கடத்தல் தடுப்புப் பிரிவு ஐ.ஜி திரு பொன்.மாணிக்கவேல் அவர்களைச் சந்தித்தார். பெரிய கோவில், மாமன்னன் ராஜராஜன், பொய்கை நாட்டுக் கிழவன் பற்றி, இரு வரும், நீண்ட நேரம் பேசி மகிழ்ந்தனர். அப்பொழுது சிலைகள் காணாமல் போன விவரத்தைக் கூறி, இச்சிலை களை மீட்டாக வேண்டும், வழி கூறுங் கள் என வேண்டினார்.

வழக்குப் பதிவு செய்து, சட்டப்படி சிலைகளை மீட்டுக் கொண்டு வந்து விடலாம், என திரு. பொன். மாணிக்க வேல் கூறவே, அன்றே, வழக்கினைப் பதிவு செய்தார்.

1932–ஆம் ஆண்டு, காணாமல் போன சிலைகளுக்கு, 2018–ஆம் ஆண்டு வழக்குப் பதிவு செய்யப்பட் டது. விவரம் அறிந்து, பத்திரிக்கையா ளர்கள் குவிந்தனர். ராஜராஜனை மீட்டு வருவோம் என நம்பிக்கையோடு முழங் கினார்.

வழக்கு, உயர் நீதிமன்றத்தைச் சென்றடைந்தது. நீதி மன்றத்தின் ஆணையின்படி, வழக்கானது, சிலைக் கடத்தல் தடுப்புப் பிரிவிற்கு மாற்றப் பட்டது. ஐ.ஜி திரு பொன். மாணிக்க வேல் அவர்கள் தலைமையிலான குழுவினர் அயராது பாடுபட்டனர். உரிய சட்ட முறைகளைப் பின்பற்றினர்.

மாமன்னர் ராஜராஜன் மற்றும் பட்டத்தரசி உலகமாதேவி செப்புத் திரு மேனிகளை மீட்டனர். கடந்த 1.6.2018 வெள்ளிக் கிழமையன்று, மாலை, மேள, தாளம் ஒலிக்க, தேவாரப் பாடல்கள் முழங்க, மங்கையர்கள் நாட்டியம் ஆடி வரவேற்க... மாமன்னர் ராஜராஜ சோழ னும் பட்டத்தரசி உலகமாதேவியும் பெரிய கோவிலுக்குத் திரும்பினர்.

தஞ்சை காவல் கண்காணிப்பாளர், தமிழ்த்திரு முனைவர் த. செந்தில்குமார், சிலைக் கடத்தல் தடுப்புப் பிரிவு ஐ.ஜி., திரு பொன்.மாணிக்க வேல், ஏ.டி.எஸ்.பி திரு ராஜாராம், டி.எஸ்.பி திரு வெங்கட்ராமன், டி.ஜி.பி திரு டி.கே.ராஜேந்திரன், வரலாற்று ஆய் வாளர் முனைவர் குடவாயில் பால சுப்பிரமணியன் மற்றும் வழக்குரைஞர் யானை ராஜேந்திரன் ஆகியோரின் பெருமுயற்சியால், இராஜராஜனும், உலகமாதேவியும் மீண்டும் சோழ மண்ணிற்குத் திரும்பி உள்ளனர்.

இவர்களது பெருமுயற்சி போற்று தலுக்கும், பாராட்டுதலுக்கும் உரியது. போற்றுவோம், வாழ்த்துவோம்!

கட்டுரை







# வாரணாசி சாதுக்கள்



சி.எஸ். இராமகிருஷ்ணன்

அண்மையில் இந்திரா காந்தி தேசியக் கலை மையம் மூலம் 'பெனாரஸ் சாதுக்கள்' என்ற புகைப்படக் கண்காட்சி புதுச்சேரியில் நடைபெற்றது. புகைப்படங்களை எடுத்துப் புகைப்படக் கண்காட்சியை நடத்தியவர் டாக்டர். ராதா கிருஷ்ண கணேசன் என்ற தமிழர். காசியில் பிறந்த இவரது முன்னோர்கள் திருநெல்வேலியைச் சார்ந்தவர்கள். வேதங்களைக் கற்ற இவர், காசி ஹிந்துப் பல்கலைக்கழகத்தில் *1984*–இல் கலைகளில் பட்டதாரி ஆனார்.

*1986*–இல் இப்பல்கலைக்கழகத்தில் முதுநிலையில் முதல் மாணவராகப் பட்டம் பெற்றுத் தங்கப் பதக்கம் பெற்றார். ஓவியம், இசை, உள்அலங்காரம், புகைப்படக் கலை, கம்ப்யூட்டர் வரை கலை வடிவமைப்பு ஆகியவற்றில் டிப்ளமோ வாங்கினார்.

கடந்த *27* ஆண்டுகளாகக் காசி ஹிந்துப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றி வருகிறார். அருங்காட்சியகங்கள் அமைத்தல், கருத்தரங்குகள் நடத்துதல், கலாச்சார ஆராய்ச்சி முதலியவற்றில் வல்லவர்.

புதுச்சேரியில் அவர் நடத்திய புகைப் படக் கண்காட்சியின்போது, அவரிடமிருந்து கிடைத்த தகவல்கள் :

**வாரணாசி சாதுக்கள்**

பெனாரஸ், வாரணாசி என்ற பெயர் கொண்ட காசி நகரம் கோவில்கள் நிறைந்தது. அதுமட்டுமல்ல, சாதுக்களுக்கும், சன்னியாசிகளுக்கும் அது ஓர் ஆன்மீக மையமாகத் திகழ்ந்து வருகிறது. சாதுக்கள் உலக இன்பத்தைத் துறந்து மோட்ச உலகை நோக்கிப் பயணம் செய்யும் இடமாக இது உள்ளது.

சாதுக்களும், சன்னியாசிகளும் இந்திய மதத் தத்துவம், கலாச்சாரம், ஆன்மீகம் முதலியவற்றைக் காசியைத் தலைமையிடமாகக் கருதிப் பணி



செய்து வருகின்றனர். ஆன்மீகக் கல்வி மையமாகவும் காசி திகழ்ந்து வருகிறது.

தர்மப் பிரசாரகர்களான மகரிஷி பதஞ்சலி, மகான் புத்தர், ஆதிசங்கரர் முதலியோர் மடங்களையும், ஆசிரமங்களையும் நிறுவி நம்முடைய உயர்ந்த பண்பாட்டையும், சிறந்த கல்வி முறைகளையும் பரப்பி வந்தனர். இந்த மடங்களும், ஆசிரமங்களும் இன்றளவும் சிறப்பாகச் செயல்பட்டு வருகின்றன.

சாது என்ற வார்த்தைகளுக்குப் புனிதர், தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டவர், அமைதியானவர், எளிமையைக் கடைப்பிடிப்பவர், உலக இன்பங்களைத் துறந்து முக்தியடைய முயல்பவர் என்று பொருள் கொள்ளலாம். காசியில் இருக்கும் சாதுக்கள் தினமும் கங்கையில் குளித்துத் தங்கள் தினசரி அனுஷ்டானங்களைச் செய்து வருகின்றனர்.

முற்காலத்தில் சாதுக்களும், சன்னியாசிகளும் ஏழ்மையை மேற்கொண்டு சுற்றித் திரிந்து கொண்டிருந்தார்கள். காலங்கள் மாறியபோது, அவர்கள் வாழ்க்கையிலும் மாற்றங்கள் ஏற்பட்டன. அவர்களில் இந்துக்கள் காவி, ஆரஞ்சு, சிவப்பு வர்ணங்களாலும், வெண்ணிற ஆடையை ஜைனர்களும் எளிமையான கோலத்தில் அணிந்து வருகிறார்கள்.

உலகப்பற்றே இல்லை என்று ஆடையை அணியாத திகம்பர சாமியார்களும் உள்ளனர். இவர்களில் கனமான தலைமுடியைத் தலையில் சுற்றிக் கொண்டு ஜடாமுடியாக இருப்பவர்களும் உண்டு.



இத்தகைய சாதுக்களும், சன்னியாசிகளும் தங்கள் மதப் பழக்கங்களைக் கடைப்பிடிக்கிறார்கள். சிலர் தங்கள் சமய ஒழுக்கங்களுடன், சுயக்கட்டுப்பாட்டுடன் தியானம் செய்கிறார்கள். சிலர் கூட்டுப் பிரார்த்தனை செய்கிறார்கள்.

சாதுக்கள் சில சம்பிரதாயங்களைக் கடைப்பிடிக்கிறார்கள். சைவ சாதுக்கள் சிவனையும், வைஷ்ணவ சாதுக்கள் விஷ்ணுவையும் (கிருஷ்ணர், ராமர் உட்பட) பின்பற்றுகிறார்கள். பெரும்பாலான சாதுக்கள் காவி, சிவப்பு, ஆரஞ்சு நிற உடையில், நெற்றியில் மூன்று வரிகளாகத் திலகமிட்டுக் கொள்கின்றனர். திரிசூலத்தையும் வைத்துக் கொள்கிறார்கள்.

வைஷ்ணவ சாதுக்களைப் ‘பைராகிகள்’ என்று அழைக்கிறார்கள். சாக்த சாதுக்கள் என்ற சக்திதாசர்கள் குறைந்த அளவிலேதான் உள்ளனர். இம்மாதிரியான பொதுவான சாதுக்களிலும் பல உட்பிரிவுகள் உள்ளன. உட்பிரிவுகளில் உள்ளவர்கள் – உட்பிரிவுகளுக்குண்டான சம்பிரதாயங்களைக் கடைப்பிடிக்கின்றனர். பெண் சாதுக்களும் (சாத்விகள்) உள்ளனர்.

‘அகோரி’ என்ற சாதுக்கள் சுடுகாட்டுச் சாம்பலை உடல் முழுவதும் பூசிக் கொண்டு மண்டை ஓட்டில் பிச்சை எடுத்துக் கொண்டு மற்றவர்கள் முகம் சுளிக்கும் வகையில் வாழ்கிறார்கள். இவர்கள் ‘கபாலிகள்’ என்று அழைக்கப்படுகிறார்கள்.

காசியை முக்கியமான ஒரு புனிதத் தலமாகக் கருதிச் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் கோயில்களும், மடங்களும் மன்னர்களாலும், ஆன்மீகப் பெரியோர்களாலும் புராதனக் கட்டடக் கலை மூலம் கட்டப்பட்டன. மடங்கள், ஆசிரமங்கள் படித்துறைகள், கிணறுகள், குளங்கள் 19–வது நூற்றாண்டில் அமைக்கப்பட்டன.

பௌத்தம், ஜைனம் முதலியவற்றில் தோன்றிய சான்றோர்கள் தங்கள் பிரசாரங்களைச் செய்தார்கள். இந்துமத மடங்களும் அமைக்கப்பட்டு வேதங்களையும், இந்துமத தர்மங்களையும் போதித்து வந்தன. ஆதிசங்கரர் இந்தியாவின் நான்கு திசைகளிலும் மடங்களை நிறுவி இந்தியாவின் ஒற்றுமை, ஒருமைப்பாடு, தர்மம் ஆகியவற்றைப் போதித்தது அருஞ்செயல் என்று போற்றப்பட்டது.



பின்னர் காசியில் ராமானுஜர், மத்வாசாரியார் முதலிய ஆச்சாரியார்களும், சுவாமி விவேகானந்தர், வல்லபாச்சாரியார், நிம்பர்கா, சைதன்ய மகாப்பிரபு முதலியோரும் மடங்களை நிறுவினார்கள்.



நாகா சாதுக்களும் தங்கள் பங்களிப்பை அளித்தார்கள். தாஸ்நாமி (சைவம் அல்லது சீக்கியம்), ராமானந்த வைஷ்ணவ மரபினர் இன்றும் இருக்கிறார்கள். இந்தத் 'தாஸ்நாமி' பிரிவில் தீர்த்தர், ஸரஸ்வத், பாரதி, கிரி, புடி, வன, பர்வத, ஆரண்ய, சாகர் முதலிய பிரிவுகளும், ராம்நடி அகதா என்ற பிரிவில் நிர்வாணி, காக்கி, நிர்வலம்பி, திகம்பர், நிர்மோகி, மகாநிர்வாணி, சந்தோஷி, கிருஷ்ண பாலக் ஆகிய பிரிவினர்கள் உள்ளனர். இந்தச் சாதுக்கள் எல்லோரையும் கும்பமேளாவின் போது ஒருமித்துக் காணலாம்.




ஸ்ரீதைலாங்க சுவாமி ஆசிரமம், அகோர் ஆசிரமம், மாதா ஆனந்தமயி ஆசிரமம், ஸ்ரீ ராமகிருஷ்ணா சேவா ஆசிரமம், சாது பேலா ஆசிரமம், பிங்கராஜ்தண்டி சேவாசிரமம் ஆகியவை இன்றளவும் தம் கலாச்சாரப் பணிகளைச் செய்து வருகின்றன.

தற்போதுள்ள பல சாதுக்கள் கஷ்ட ஜீவனம் நடத்துவதாகவும், அவர்களில் சிலரின் வாழ்க்கை மர்மம் நிறைந்ததாகவும், பலர் புகைப்படம் எடுக்க வேண்டாம்... பேட்டி வேண்டாம் என்று மறுத்ததாகவும் டாக்டர் ராதாகிருஷ்ண கணேசன் தெரிவிக்கிறார்.

கட்டுரை

பதினோராம் நூற்றாண்டில் வடக்குப் பகுதியிலுள்ள சோம்நாத் மற்றும் பவநகரை கஜினி முகம்மது வேருடன் சாய்த்தபோது அங்கிருந்த சௌராஷ்ட்ர மக்கள் தென்னகப் பகுதியான தமிழகத்திற்குள் வந்து சேர்ந்தனர்.

வந்த மக்களில் பெரும்பான்மையினர் தம் குலத்தொழிலான கைத்தறி நெசவுத் தொழிலை மேற்கொண்டிருந்தனர். குறிப்பாக அப்போதிருந்த மன்னர்களின் குடும்பத்திற்குத் தேவையான உடைகளை நவீன வடிவமைப்புடன் நெய்து வழங்கினர்.

அதன் காரணமாக மன்னர்கள் வாழ்ந்த அரண்மனைக்கு அருகிலேயே அவர்கள் குடியமர்த்தப்பட்டனர். பட்டு நெசவு செய்யும் இந்தச் சமூகத்திலிருந்துதான் 1923 மார்ச் 24–இல் மீனாட்சி அய்யங்கார் – வேங்கடம்மாள் தம்பதியருக்கு மகனாகப் பிறந்தவர் டி.எம்.சௌந்தர்ராஜன்.

'தொகுளுவா' என்கிற வீட்டுப் பெயருடன் தந்தையின் பெயரின் ஆங்கில முதல் எழுத்தும் சேர்ந்து "டி.எம்.எஸ்." என்கிற மூன்றெழுத்துப் பாடகராகத் திரைஉலகில் அடியெடுத்து வைத்தார்.

எம்.கே.டி. பாகவதருடைய குரலின் மயக்கத்திலிருந்து தமிழ் ரசிகர்கள் முழுமையாக விடுபட்டிராத காலகட்டம் அது! ஒரு வழக்கின் சிறைவாசத்திற்குப் பிறகு மீண்டும் திரைஉலகில் தலையெடுக்க இயலாது பாகவதர் ஓய்ந்திருந்தார். அவருடைய குரலின் நகல் போல ஒலித்த இன்னொரு குரல் இயற்கையாகவே வெற்றி பெற்றது.

திரைஇசை மெட்டுக்களிலும் குறிப்பிடத்தக்க மாற்றம் இந்தக் காலத்தில் அரங்கேறியது. எஸ்.வி. வெங்கட்ராமன், சி.ஆர்.சுப்புராமன், ஜி.ராமனாதன் முதலான தூய கர்நாடகப் பாணியில் மெட்டமைத்தவர்கள் முன்னணியில் இருந்தபோது, மேற்கத்திய இசையை இந்தக் காலகட்டத்தில்தான் உள்ளூர் மரபிசையுடன் கலந்து இசையமைக்கும் புதிய பாணியும் உருவானது. மரபிசை நன்குத் தெரிந்த – ஆனால் அதன் அழுத்தமான ஆதிக்கம் இல்லாத – பாடக்கூடிய பாடகருக்கான தேவையும் உருவானது.



இந்தக் காலகட்டத்தில் தமிழ்த்திரை உலகில் அறிமுகமான டி.எம்.எஸ். தொடக்கத்தில் பாகவதரின் குரலின் சாயலில்தான் பாடினார். பிறகு தனக்கென்ற தனித்துவத்தை உருவாக்க முனைந்தார். அதில் வெற்றியும் பெற்றார்.

"குலமகள் ராதை" படத்தில் 'ராதே உனக்குக் கோபம் ஆகாதடி' என்ற புகழ்பெற்ற பாடலை பாகவதர் பாணியிலும், அதே படத்தில் 'உன்னைச் சொல்லி குற்றமில்லை' என்ற பாடலை கதாநாயகனின் குரலுக்கேற்பச் சோகத்துடன் அழுத்தமான குரலிலும் பாடியிருப்பார். இந்த மாற்றம்தான் பின்னாட்களில் எம்.ஜி.ஆருக்கும் மிகப் பொருத்தமாக அமைந்தது.

புரட்சிகரமான வசனங்கள், நீதிக்கான அறச்சீற்றம் கொண்ட வார்த்தைகள், இவற்றிற்கிடையில் கம்பீரமான ஆண் குரலில் பாட வேண்டும் என்றால் அதற்கு டி.எம். எஸ்–தான் பொருத்தமாக இருந்தார்.

எம்.ஜி.ஆரின் படங்களென்றால் அதுவும் தத்துவப் பாடல்களென்றால் அதற்கு டி.எம்.எஸ்.–தான் சரியானவர் என்பதை ரசிகர்கள் மட்டுமல்ல, எம்.ஜி.ஆரும் உணர்ந்திருந்தார். ஒரு கட்டத்தில், அடிமைப்பெண் திரைப்படப் பாடலைப் பாட முடியாது – எம்.ஜி.ஆரின் வேண்டுகோளையும் மறுத்து டி.எம்.எஸ் தனது இரண்டாவது மகளின் திருமணத்திற்காக மதுரைக்கு வந்துவிட்டார்.




குரலோடு ஒன்றிப்போனால் அது ரசிகர்களின் மனதில் நீங்காத ஓர் இடத்தைப் பெற்றுவிடும்.

இதை முழுவதுமாகத் தெரிந்துகொண்ட எம்.ஜி.ஆர் அரசியலில் கவனம் செலுத்த முனைந்தபோது தன்னுடைய கொள்கை சார்ந்த பாடல் வரிகளை சௌந்தர்ராஜனை வைத்துத்தான் பாடினார். அதனால்தான் அ.தி.மு.க. தொடங்கிய போது கட்சியின் கொள்கை விளக்கப் பாடலாக இருந்த ‘இரட்டை இலை வெற்றி தந்த இலை’ என்ற பாடலையும் எம்.ஜி.ஆரைப்

# தமிழுக்குப் பெருமை சேர்த்த ‘டி.எம்.எஸ்.’

கோபமடைந்த எம்.ஜி.ஆர். எஸ்.பி. பால சுப்பிரமணியத்தைத் தன்னுடைய படத்தில் அறிமுகப்படுத்தினார். ஆனால் எஸ்.பி.பாலசுப்பிரமணியத்தின் குரல் தான் பாடுவது போல் அமையவில்லை என்பதை உணர்ந்த எம்.ஜி.ஆர், மீதிப் பாடல்களைப் பாட டி.எம்.எம்.–சை அழைத்த போது, ஒரு பாடலுக்கு 1500 ரூபாய் என்கிற ஒப்பந்தத்தை மீறி 2000 கேட்டார் டி.எம்.எஸ். அதற்கும் சம்மதித்து ஒத்துக் கொண்டவர்தான் எம்.ஜி.ஆர்!

சௌந்தர்ராஜனுக்காக எம்.ஜி.ஆர் உடன்பட்டு வந்தார் என்றால், தானே சொந்தக் குரலில் பாடுவது போன்ற பிம்பத்தை டி.எம்.எஸ் ஏற்கனவே உருவாக்கி வைத்திருந்தார். என்னதான் படம் முழுவதிலும் ஆவேசமாக நீதி வசனங்களைப் பேசி நடித்தாலும் அந்தக் காட்சிக்கேற்ப வரும் பாடல் என்பது வசனம் பேசியவரின் போன்ற குரல் அமைப்பில் டி.எம்.எஸ் பாடினார்.

அழுத்தமான குடும்ப உறவுகளுக்கான கதைக் களம்தான் சிவாஜி கணேசனுக்கு அமைந்தது. சோகப் பாடலும் காதல் பாடல்களும் சிவாஜிக்குப் பொருந்துமாறே பாடியவர் டி.எம்.எஸ். வயதான தந்தை வேடத்தில் சிவாஜி நடித்தாலும் அந்தத் தந்தைக்கான கனத்த குரலில் பாடி சிவாஜி ரசிகர்களையும் டி.எம்.எஸ் கவர்ந்தார்.

ஐம்பது வயதிற்கு மேற்பட்ட ஆண்கள் எல்லோரையும் திரைப்படத்தில் மட்டுமல்ல, தான் நடத்திய இசைக்கச்சேரிகளிலும் அழ வைத்த பாடல் ஒன்று உண்டென்றால் அது “வியட்நாம் வீடு” படத்தின் பாடலான ‘உன் கண்ணில் நீர்வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி’ என்கிற பாடல்தான்!



**நீ.சு. பெருமாள்**

எம்.ஜி.ஆருக்காக நீங்கள் பாடினாலும் சரி, சிவாஜிக்காக நீங்கள் பாடினாலும் சரி அசலாக எம்.ஜி. ஆரும் சிவாஜியும் பாடுவது போல் அமைகின்றதே அது எவ்வாறு? இப்படி இலங்கை வானொலி டி.எம்.எஸ் பங்கு பெற்ற நேர்முகத்தில் கேள்வியைக் கேட்டது.



மக்கள் திலகம் எம்.ஜி.ஆர்.



நடிகர் திலகம் சிவாஜி

“பொதுவாக நான் எந்தக் கதாநாயகர்களுக்காகப் பாடினாலும் அவர்கள் பேசி நடிக்கும் பாவனையினைப் பார்ப்பேன். அதுபோல நான் பாட முயற்சிக்கின்றேன். எம்.ஜி.ஆர் என்றால் கொஞ்சம் அடிவயிற்றிலிருந்து குரல் எடுப்பேன். சிவாஜிக்காக என்றால் என் இயல்பான கனத்த குரலில் பாடுவேன் அவ்வளவுதான்” என்றார் டி.எம்.எஸ். அதனால்தான் தமிழ்த் திரைப்படப் பாடல்களைப் பொறுத்தவரை அவரளவு போதபூர்வமான அறிவியல் அணுகுமுறை கொண்ட இன்னொரு பாடகர் தோன்றவில்லை.

‘தூங்காதே தம்பி தூங்காதே’ பாடலில் வரும் ‘விழித்துக் கொண்டோர் எல்லாம் பிழைத்துக்கொண்டார்’ என்கிற வரிகளை டி.எம்.எஸ் பாடுகிறபோது ஒரு நான்கு ஆவர்த்தம் உச்சஸ்தாயியில் ராகம் இழுத்திருப்பார். இந்தப் பாடலை இந்தி மொழியில் பெயர்த்து புகழ்பெற்ற பாடகர் முகம்மத் ரஃபி அவர்களைப் பாட வைத்தனர். ஆனால் டி.எம்.எஸ் அளவிற்கு உச்சஸ்தாயியில் பாட முடியாது திணறினார். அது மட்டுமல்ல – இசையமைப்பாளர் சுப்பையா நாயுடுவைப் பார்த்துச் சொன்னாராம் (ஹம் மர் ஜாயேங்கே). ‘இப்படிப் பாடினால் உயிர் போய் விடும்’ என்றாராம்.

ஆனால் டி.எம்.எஸ். தொண்ணூறு வயதுவரை வாழ்ந்தார். சொல்வோர் சொன்னால் தமிழ் சொந்தம் கொண்டாடும் என்பார்கள். தமிழன்னையின் பூரண ஆசி டி.எம். சௌந்தர்ராஜனுக்குக் கிடைத்திருந்த காரணத்தினால்தான் ழகர ஒலி தொடங்கி எல்லா எழுத்துகளுக்குமான உச்சரிப்பு டி.எம்.எஸ்க்கு வரப்பிரசாதமாக அமைந்தது.

தமிழக முதல்வராக கலைஞர் கருணாநிதி இருந்தபோது மனோன் மணியம் சுந்தரனார் இயற்றிய தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலை பின்னணி இசையுடன் பதிவு செய்ய முடிவெடுக்கையில் “இப்பாடல் டி.எம்.சௌந்தர்ராஜன் பாடினால்தான் மிகச் சரியாக அமையும்” என்றாராம். அதன்படி தமிழ்நாடு அரசு அமைத்த தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடல் இன்றளவும் சௌந்தர்ராஜன் குரலில்தான் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

சௌந்தர்ராஜன் காலமான நேரத்தில் அவருக்கான இரங்கற்பாவில் எம்.ஜி.ஆர்., சிவாஜி, நாகேஷ், எஸ்.எஸ்.ஆர் முதலிய மூன்றெழுத்து தமிழ்த்திரை உலகின் கதாநாயகர்களின் குரல் டி.எம்.எஸ் என்ற மூன்றெழுத்துத் தொண்டைக் குழிக்குள் அடங்கி இருந்தது தமிழ்த் திரைப்பட உலகின் அதிசயம் என்றார் கவிஞர் வாலி.

தமிழ்திரைப்பட உலகில் தான் பாடுவதை நிறுத்திக் கால் நூற்றாண்டுக்குப் பிறகுதான் டி.எம்.எஸ் மறைந்தார். ஆனால் அவர் மறைந்த நாள் தமிழ் பேசத் தெரிந்த அனைவருக்குமே மிகப் பெரும் சோக நாளாக அமைந்தது. காரணம், ஏதாவது ஒரு வீட்டில் அல்லது நிகழ்ச்சியில் டி.எம்.எஸ் பாடல்கள் ஒலித்துக் கொண்டிருந்தன.

உலகின் மூத்த மொழியான தமிழுக்குப் பாடல்கள் மூலம் பெருமை சேர்த்த டி.எம். சௌந்தர்ராஜனுக்குப் ‘பத்மஸ்ரீ’யை விட உயர்ந்த தேசிய விருதுகளும் கிடைக்கவில்லை. ஆனால் தமிழ்கூறும் நல்லுலகம் இருக்கும்வரை தமிழர்கள் வாழும் பகுதிகளில் உள்ள மெல்லிய காற்றில் டி.எம்.சௌந்தர்ராஜன் குரல் ஒலித்துக் கொண்டே இருக்கும்! ●

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 36 ஜூலை 2018 இதழ் : 6

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,

E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,

கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**

கதை, கவிதைகளில் வரும் பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

படைப்புகளைச் சுருக்கவோ, திருத்தி அமைக்கவோ ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**தனிப் பிரதி ரூ.15/-**
**ஆண்டு சந்தா ரூ. 265/-**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/-**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :
**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் :
**சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail :
omsakthieditorial@gmail.com




**சமையல்**

# சாமை அரிசி வாழைத்தண்டு சாதம்

**தேவையானவை :**

*சாமை அரிசி : 1 கப், வாழைத் தண்டுச் சாறு : 2 கப், தேங்காய்ப் பால் : 1 கப், கடலைப் பருப்பு : 1/4 டீஸ் பூன், கடுகு, உளுத்தம்பருப்பு : 1/4 டீஸ் பூன், சிவப்பு மிளகாய் : 3, பெருங்காயம், கறிவேப்பிலை : சிறிதளவு, உப்பு, எண் ணெய் : தேவைக்கேற்ப.*

**செய்முறை :**

1. சாமை அரிசியை வாழைத்தண்டுச் சாறு, தேங்காய்ப் பாலில் போட்டுக் குக்கரில் ஒரு விசில் வரும் வரை வேக விடவும்.
2. வாணலியில் எண்ணெய் விட்டு கடுகு, உளுத்தம்பருப்பு, கடலைப் பருப்பு, மிளகாய் இட்டுத் தாளித்து, பெருங்காயம், கறிவேப்பிலையைப் போட்டுக் கிளறி, வேகவைத்த சாதத் தில் கொட்டி, உப்பு கலந்து கிளற வும்.

சுவையான, சத்தான 'சாமை அரிசி – வாழைத்தண்டு சாதம்' ரெடி.

– **பி. சந்திரகலா**, சென்னை – 11.

# இம்மாத ராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

**1.7.2018 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| | | | சூரியன் |
| | 04.7.2018 சுக். – சிம்மம்<br>16.7.2018 சூரி. – கடகம்<br>10.7.2018 குரு – வக்ர நிவர்த்தி<br>26.7.2018 புதன் – வக்ர ஆரம்பம் | | புதன்<br>சுக்கிரன்<br>ராகு |
| கேது<br>சந்திரன்<br>செவ். (வ) | | | |
| சனி (வ) | | குரு (வ) | |

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, பொதுவில் இம்மாதம் அதிர்ஷ்டகரமானதாகவே காணப்படுகிறது. சுக்கிரன் மாதத்தின் முற்பாதியிலும், குரு மாதத்தின் பிற்பாதியிலும் அவ்வாறான அதிர்ஷ்ட வாய்ப்புகளை ஏற்படுத்தக்கூடும். சூரியன் மாதத்தின் முற்பாதியில் தொழில் உத்தியோகத் துறைகளிலும், பொருளாதார விஷயங்களிலும் நன்மையை ஏற்படுத்தக்கூடும். செவ்வாய் 10–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சில நேரங்களில் பெரும் குழப்பங்களுக்கு ஆளாவீர்கள். தொழில் துறையில் விரும்பத்தகாத விஷயங்கள் ஒரு சிலருக்கு ஏற்படலாம். நீங்களே அக்குழப்பங்களுக்கு மூல காரணமாக விளங்குவீர்கள்.

10–ஆம் தேதி முதல் குரு வக்கிர நிவர்த்தியாவதால், தடைகள் அகன்று விடும். சுப காரியங்கள், சுப காரிய முயற்சிகள் ஈடேற வாய்ப்புண்டு. சனி 9–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், தடைகள் ஏற்படுவது இயல்பாகும். சூரியன் – புதன் 4–ஆம் வீட்டில் மாதத்தின் பிற்பாதியில் சஞ்சரிப்பதால், குடும்பத்தில் எதிர்ப்பும் பிரச்சனைகளும் வந்தகலும். வீண் அலைச்சல், உடல் நலிவு ஒரு சிலருக்கு ஏற்படும். சுப காரியங்களை மாதத்தின் முற்பாதியில் தொடங்கலாம். உறவினர்கள் வகையில் மனக்கசப்பு ஏற்பட வாய்ப்புண்டு.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் குடும்பத்தில் சற்று ஆறுதலற்ற போக்குத் தென்பட்டாலும், மாதத்தின் பிற்பாதியில் சகல காரியங்களும் அனுகூலப்படும். தொழில் துறையில் நன்மையும், பொருளாதார விருத்தியும் ஏற்படும். ஜூலை 10 முதல் குரு வக்கிர நிவர்த்தியாவதால், உடல் உபாதைகள் ஏற்பட வாய்ப்புண்டு. ஒரு சிலருக்கு புதியதாகக் கடன் பெற வாய்ப்பு ஏற்படலாம். உறவினர்கள் வகையில் கசப்பான செய்திகள் கேள்விப்பட நேரிடலாம். திருமணக் காரியங்களுக்கு உகந்த காலமல்ல.

சனி 8–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், போக்குவரத்துக்களில் கூடிய மட்டிலும் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். சிலர் பெற்றோரைப் பிரிய நேரிடும். செவ்வாய் 9–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் ஆலயப் பணிகள் செய்வோர் பொதுத் தொண்டு நிறுவனங்களை நடத்துபவர்கள் அவப்பெயரை அடைவர். சுக்கிரன் 4–ஆம் வீட்டில் 4–ஆம் தேதி முதல் சஞ்சரிப்பதால் வாகன சுகம், லாபம் உண்டாகும். ராகு 3–இல் சூரியன் சம்பந்தம் பெற்றுச் சஞ்சரிப்பதால், துணிவான செயல்கள் வெற்றியளிக்கும்.

## மிதுனம்



**மி**துன ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் தொடக்க நாட்கள் அனுகூல மற்றுக் காணப்படுகின்றன. கோபதாபங்கள், சிறு விபத்துக்கள், நண்பர்களால் உபத்திரவம் ஏற்பட வாய்ப்புள்ளது. மாதத்தின் பிற்பாதியில் குருவின் அனுகூலத்தால் தடைப்பட்ட காரியங்கள் மீண்டும் புத்துயிர் பெறும். இருப்பினும் ஒரு சிலர் பணக் கஷ்டத்தால் பரிதவிப்பர். எதிர்ப்புகள் பலவாறாக ஏற்படும். சகோதர வர்க்கத்தாரின் செயல்கள் விருப்பத்திற்கு மாறாக இருக்கும். சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் கூட்டாளிகள் வகையில் மனக்கசப்பும், பிரிவும் ஏற்பட வாய்ப்புண்டு.

சுக்கிரன் 4–ஆம் தேதி முதல் மாதக் கடைசி வரை 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், சுகபோக இச்சைகளுக்குக் குறைவிருக்காது. 26–ஆம் தேதி முதல் புதன் வக்கிரம் பெறுவதால் உங்களின் செயல்பாடுகள் அதன் பின்னர் முரண்பட்டதாக இருக்கும். திருமணம் முதலிய சுப காரியங்கள் 10–ஆம் தேதி முதல் அடுத்த 4 மாதக் காலத்திற்குள் சிலருக்கு ஈடேறும். செவ்வாய் – கேது 8–இல் சஞ்சரிப்பதால், மின்னணுச் சாதனங்களைக் கையாள்வதில் கவனம் தேவை. புது முயற்சிகளுக்கு இது ஏற்ற காலமல்ல. வரும் ஆவணி மாதம் தொடங்கலாம்.

## கடகம்



**க**டக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் விரயம், அலைச்சல் உண்டு. பிற்பாதியில் தனம், பொருள் லாபமும், இனிமையாகப் பேசிக் காரியங்களைச் சாதிக்கும் திறமையும் வெளிப்படும். ராசி மீது ராகு – சூரியன் சேர்ந்து சஞ்சரிப்பதால் வயதானவர்களுக்கு நலிவுகள் ஏற்படலாம். மற்றவர்களுக்குச் சிரசு வலி முதலியவை ஏற்படும். பெண்களுக்கு வயிற்று உபாதை ஏற்படக்கூடும். செவ்வாய் 7–இல் வக்கிர கதியில் கேதுவுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால், தொழில் வழியிலோ, குழந்தைகள் வழியிலோ சில எதிர்பாராத சம்பவங்கள் ஏற்பட வாய்ப்புண்டு.

10–ஆம் தேதி முதல் தடைப்பட்ட காரியங்களில் முன்னேற்றம் ஏற்படும். இடமாற்றம் முதலியவை வரும் 4 மாதங்களில் சம்பவிக்க வாய்ப்புண்டு. சனி வக்கிரகதியில் 6–இல் சஞ்சரிப்பதால் மறைமுக எதிரிகள் அல்லது பிற மறைமுக எதிர்ப்புகளால் அற்ப சங்கடங்கள் ஏற்படலாம். மாதத்தின் முற்பாதியில் சுப காரிய முயற்சிகள் வேண்டாம். மாதத்தின் பிற்பாதியில் அரசாங்க நிந்தனை அல்லது உபத்திரவம், கடன் கொடுத்தவர்கள் மூலம் பிரச்சனைகள் வர வாய்ப்புள்ளது. கவனம் வேண்டும். திருமணக் காரியங்கள் வருடத்தின் பிற்பாதியில் கைகூடும்.

## சிம்மம்



**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் நண்பர் உதவி, பொருள் வரவு, தன லாபம் கிடைக்கப்பெறும். மாதத்தின் பிற்பாதியில் பண விரயம், அலைச்சல், பயணம் முதலியவை ஏற்படலாம். ஒரு சிலர் அரசாங்கத் தண்டனை, நிந்தனை, தண்டம் கட்டுதல் முதலிய பலன்களை அனுபவிப்பர். உங்கள் ராசிமீது 4–ஆம் தேதி முதல் சுக்கிரன் சஞ்சரிக்க இருப்பதால் ஆடை, அணிகலன் சேர்க்கையாகும். நல்ல வசீகரமான தோற்றத்தை வெளிப்படுத்துவீர்கள். குரு 3–ஆம் வீட்டில் வக்கிர நிவர்த்தியாகிச் சஞ்சரிப்பதால், பொறாமை குணம் உங்களிடம் வெளிப்படலாம். உணர்ச்சி வசப்பட்டுச் சில நேரங்களில் பெரிய தவறுகளைக்கூடச் செய்ய வாய்ப்புண்டு.

சனி வக்கிரம் பெற்று 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், புத்திரக் கவலை மேலோங்கும். அரசாங்கப்பீடை ஏற்படலாம். திருமணம் முதலிய காரியங்கள் அடுத்த சில மாதங்களுக்கு ஈடேறுவது கடினம். ஜனன ஜாதகத்தை ஆய்வு செய்ய வேண்டியது. புதன் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உங்களிடம் வேலை பார்க்கும் நபர்களிடம் கணக்கு, வரவு செலவுகளில் கவனம் வேண்டும். ஒரு சிலர் தொழில் நிமித்தமாக அடிக்கடி வெளியூர் சென்றுவர நேரலாம். புது முயற்சிகளை மாதத்தின் முற்பாதியில் தொடங்கலாம்.

**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் பொதுவில் சூரியன் நன்மையான பலன்களை ஏற்படுத்த வாய்ப்புள்ளது. மாதத்தின் முற்பாதியில் தொழில் அல்லது உத்தியோகத்தை விட்டு விடலாம் என்ற சிந்தனை ஏற்பட்டாலும் அனுகூலங்களே ஏற்படும். தனலாபம் ஏற்படும். நினைத்த காரியம் நிறைவடையும். மாதத்தின் பிற்பாதியில் நண்பர்கள் உதவி, பொருள் வரவு

## கன்னி



ஏற்பட்டாலும், தெரிந்தே சில நேரங்களில் ஏமாந்துவிட வாய்ப்புண்டு. மாற்றுச் சாதி மதக்காரர்களால் எதிர்பாராத நன்மைகள், உதவிகள் கிட்ட வும் வாய்ப்புண்டு. அரசாங்கக் காரியங்கள், வழக்கு விவகா ரங்களில் அனுகூலம் ஏற்படும்.

12–ஆம் வீட்டில் சுக்கிரன் சஞ்சரிப்பதால் பங்கு வர்த்தகம், சூதுவாதுகளில் பணத்தை இழக்க வாய்ப்புண்டு. குரு 10–ஆம் தேதி முதல் வக்கிர நிவர்த்தியாகிச் சஞ்சரிப்ப தால், பணப் புழக்கம் அதிகரிக்கும். சுபகாரிய முயற்சிகள் சாதகமாகும். சனி 4–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் மனதில் உறுதி கூடும். செவ்வாய் கேதுவுடன் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்ப தால், நிலையான புத்தி இருக்காது. சலனம் ஏற்படும். துர்ப்புத்தி வேலை செய்யும்.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர் களுக்கு, இம்மாதம் முற்பாதி யில் காரியத் தடைகளுக்குப் பின் காரியங்கள் நிறைவேறும். சன்மார்க்க நெறிமுறைகளால் நன்மை அடையலாம். மாதத் தின் பிற்பாதியில் நினைத்த காரியம் நிறைவேறும். தொழில் உத்தியோகத் துறைகளில் அனு கூலம் ஏற்படும். பண வரவு உண்டாகும். சுக்கிரன் 4–ஆம் தேதி முதல் ஆடம்பரப் பொருள் வாங்கும் யோகத்தை ஏற்படுத்தும். அணிமணிகள் சேர்க்கை ஏற்படும். ஒரு சிலருக்குப் பெண்களின் நட்பால் லாபம் ஏற்படும். ஜன்ம ராசியில் சஞ்சரிக் கும் குரு 10–ஆம் தேதி முதல் வக்கிர நிவர்த்தி யாகி நேர்கதியில் சஞ்சரிப்பதால் மீண்டும் ஏதேனும் கட்டுப்பாடான சூழ்நிலைகளில் வாழ வேண்டி வரலாம். உடல் உபாதைகள் ஏற்படக் கூடும்.

சனி 3–ஆம் வீட்டில் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் பணத் தேவைகள் அதிகரிக்கும் வாய்ப்புண்டு. மன தைரியம் குறையும். சகோதர வர்க்கத்தார் மூலம் இடைஞ்சல்கள் ஏற்படலாம். செவ்வாய் வக்கிரம் பெற்றுக் கேதுவுடன் இணைவு பெற்று 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தாய்வழி உறவினர்கள் பாதிக்கப்படுவர். 10–இல் இராகு சஞ்சரிப்பதால் இடமாற்றம், தொழில் மாற்றம் குறித்த சிந்தனைகள் மனதில் தோன்றினாலும், காரியம் கைகூடாது. திருமணம் முதலிய சுப காரியங்கள் தற்சமயம் ஈடேறாது.

## விருச்சிகம்

**வி**ருச்சிக ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதி யில் செலவும், அலைச்சலும், எதிர்பாராத



நிகழ்வுகளும் ஏற்படும் வாய்ப் புண்டு. மாதத்தின் பிற்பாதியில் காரியத் தடைகள் ஏற்படும். ஒன்றுக்கு மேற்பட்ட முயற்சி களால் காரிய சித்தி ஏற்படும். பொறுமை, நிதானத்துடன் செயல் பட வேண்டும். சூரியன் – செவ்வாய் எதிரெதிர் நிலை யில் சஞ்சரிப்பதால் தொழில் உத்தியோகத் துறைகளில் வேண்டாத நடவடிக் கைகளில் இறங்க வேண்டாம். சனி 2–இல் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால் வரவும், செலவும் சரிசமமாக இருக்கும்.

10–ஆம் தேதி முதல் குரு நேர்கதியில் சஞ்சரிப்பதால், சிலருக்கு வருமானக் குறைவும், சுப காரியச் செலவுகளும் ஏற்படும். கேது 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் ஆன்ம பலம் கூடும். 9–இல் இராகு – சூரியன் இணைவு பெற்றுச் சஞ்சரிப்ப தால் நீதிமன்ற நடவடிக்கைகளில் இறங்க வேண் டாம். பெண்கள் – குறிப்பாகக் கருவுற்ற பெண்கள் தகுந்த மருத்துவ ஆலோசனைகளைப் பெற்று, அதன்படி நடந்துகொள்ள வேண்டும். சுக்கிரன் 10–ஆம் வீட்டில் 4–ஆம் தேதி முதல் சஞ்சரிப்ப தால், தொழில் துறையில் தேக்கநிலை உருவாக லாம். பெண்களால் தொழில் தலத்தில் பிரச்சனை கள் ஏற்பட வாய்ப்புண்டு. புதன் 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உபதேசம் கேட்கலாம். உபதேசம் செய்யலாம்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர் களுக்கு, இம்மாதம் 7, 8–ஆம் இடங்களில் சூரியன் சஞ்சரிப் பதால் பிரயாணம், குடும்பத் தில் குழப்பம், எதிர்பாராத சம்ப வங்கள், மருத்துவச் செலவு, தேக அசௌகரியம் ஏற்பட வாய்ப்புண்டு. தண்டச் செலவு சிலருக்கு நேரிடும். சூரியன் – ராகு 8–இல் கூடுவதால் கவ னம் தேவை. போக்கு வரத்துகளிலும், கோர்ட்டு வழக்கு விவகாரங்களிலும், அரசாங்கக் காரியங் களிலும் மிகவும் எச்சரிக்கையாகச் செயல்பட வேண்டும். இல்லையெனில், தண்டம் கட்ட நேரிட லாம். கைக்குக் காப்புப் போட வாய்ப்புண்டு. துன் மார்க்கர்களுக்கு மட்டுமே இப்பலன் பொருந்தும்.

சுக்கிரன் 9–இல் சஞ்சரிப்பதால், காணக் கிடைக்காத அரிய வஸ்து ஒன்று வாங்க வாய்ப் புண்டு. ஜன்ம ராசியில் சனி வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சுபச் செலவு, விரயம் தவிர்க்க இயலாதது. குரு 10–ஆம் தேதி முதல் நேர்கதியில் சஞ்சரிப்பதால் புதிய பொருள்கள் வாங்கலாம். திருமணக் காரியங்களில் ஈடுபாடு கொள்ளலாம். வரும் 4 மாதங்களில் சுபகாரிய முயற்சிகள் யாவும் பலன் கொடுக்கும். புதன் 8–ஆம் வீட்டில் சஞ்

சரிப்பதால் குடும்ப அங்கத்தினர்களுடனும், மாமன், மாமனார் வர்க்கத்தாருடனும் நல்ல உறவைப் பேணுதல் வேண்டும். இம்மாதம் புதிய முயற்சிகள் வேண்டாம். எதையும் தொடங்குதல் ஆகாது.

## மகரம்



**ம**கர ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், மன உறுதியுடன் எக்காரியத்திலும் ஈடுபடலாம். வெற்றி ஏற்படும். மாதத்தின் பிற்பாதியில் வீட்டிலோ, வெளியிலோ எதிர்ப்புகளைச் சந்திக்க நேரலாம். ராசி மீது செவ்வாய் – கேது சஞ்சரிப்பதால், மன உளைச்சல், சஞ்சலம், கோப தாபங்களுக்குக் குறைவிருக்காது. சனி வக்கிரம் பெற்று 12–இல் சஞ்சரிப்பதால் ஒரு சிலர் புதிய முதலீடுகள் செய்ய ஆசைப்படுவர். ஆனால், அவ்வாறான முதலீடுகளால் எந்தவிதமான ஆதாயமும் உடனடியாக ஏற்படாது என்பதை மனதில் கொள்வது நல்லது.

குரு 10–ஆம் தேதி முதல் நேர்கதியில் சஞ்சரிப்பதால், மீண்டும் வேலையை விட்டுவிட எண்ணம் வரலாம். சிலருக்குத் தொழில் சம்பந்தமாக இடப்பெயர்ச்சி ஏற்பட வாய்ப்புண்டு. அரசியல்வாதிகளிடம் அரசு உத்தியோகஸ்தர்களிடம், வழக்கு விவகாரங்களில் மாதத்தின் பிற்பாதியில் கவனமுடன் இருக்க வேண்டும். இல்லற வாழ்வில் பலர் பிரச்சனைகளை அடைய நேரிடும். எல்லாவற்றிலும் பொறுமை காக்க வேண்டும். வயதானவர்களாக இருப்பின் வாழ்க்கைத் துணைவரின் உடல் நலத்தில் அக்கறை செலுத்த வேண்டும். திருமணம் முதலிய சுப காரியங்களுக்கு இன்னும் சில மாதங்கள் செல்ல வேண்டும்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, இம்மாதத்தின் முற்பாதியில் புத்தி தடுமாற்றம் ஏற்படும். குழப்பம் இருந்து வரும். காரியத் தடை கள் உண்டாகும். மாதத்தின் பிற்பாதியில் தொழில் உத்தி யோகத் துறைகளில் ஆதாயம் உண்டு. எதிர்ப்புகள் அகன்று விடும். நோய் நொடிகள் நீங்கிச் சுகம் ஏற்படும். ஒரு சிலருக்கு மட்டும் சுவாசக் கோளாறுகள், வாழ்க்கைத் துணைவரோடு விரோத மனப்பான்மை ஏற்படும். நீர் நிலை களுக்குச் சென்றால் சிறுவர் சிறுமியர்களைக் கவனமுடன் பார்த்துக் கொள்ள வேண்டும். சனி 11–ஆம் வீட்டில் வக்கிரமுடன் செயல்படுவதால், நண்பர்கள், பணியாளர்கள் வழியில் அதிருப்திகள் ஏற்படலாம்.

குரு 10–ஆம் தேதி முதல் நேர்கதியில் சஞ்சரிப்பதால், இதுவரையிலும் தடைப்பட்ட காரியங்கள் யாவும் செயல்பாட்டுக்கு வரும். சுப காரியங்கள் வரும் 4 மாதங்களுக்குள் நிறைவேறக்கூடும், முயற்சிப்பது நல்லது. செவ்வாய் 12–ஆம் வீட்டில் கேதுவுடன் வக்கிரம் பெற்றுச் சஞ்சரிப்பதால், கெட்ட கனவுகள் தோன்றும். ஒரு சிலர் தொழில் துறையில் முடிவெடுப்பதில் குழப்பமடைவர். ஒரு சிலரது சகோதர வர்க்கத்தார் காணாமல் போகக் கூடும். சுக்கிரன் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், பெண்களால் எதிர்ப்புத் தோன்றலாம். புதன் 6–ஆம் வீட்டில் ராகுவுடன் சஞ்சரிப்பதால், வயிற்று உபாதை ஏற்படும். பெரியவர்களுக்கு வாயுத் தொல்லை ஏற்படும்.

## மீனம்



**மீ**ன ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் முற்பாதியில் பெற்றோர் வகையில் எதிர்ப்பும், அதிருப்தியும் இருந்து வரும். வயதானவர்களாக இருப்பின், உடல் சுக வீனம் ஏற்படும். வீண் அலைச்சல் மிகும். மாதத்தின் பிற்பாதியில் காரியங்களில் இடையூறு ஏற்படும். ஒழுங்கற்ற வழியில் நடப்பவர்களுக்கு அரசாங்க விரோதம், புத்திர வர்க்கத்தாரால் அதிருப்தி முதலியவை ஏற்படும். செவ்வாய் லாப ஸ்தானத்தில் கேதுவுடன் சேர்ந்து சஞ்சரிப்பதால் நிலம், பூமி சம்பந்தப்பட்டோ, ரத்த சம்பந்தம் உடைய உறவினர்களாலோ வருத்தம் வரக்கூடும். மாணவ மாணவியர்களாக இருப்பின் போட்டித் தேர்வுகளில் எதிர்பாராத வெற்றியை அடைவர்.

10–இல் சனி சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் மந்த நிலை நிலவும். 10–ஆம் தேதி முதல் குரு நேர்கதியில் வருவதால், சுப காரியங்களில் இறங்குவது பலன் கொடுக்காது. இன்னும் 4 மாதங்கள் வரை தடைகள் இருந்து வரும். பொருள் முடக்கம் ஏற்படும். சுக்கிரன் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், தேவையற்ற உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டுப் பெயரைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம். புதன் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் இந்த மாதம் எந்த விஷயத்திலும் தீர்க்கமான முடிவெடுத்துச் செயல்பட இயலாது. ●

சென்ற இதழ் தொடர்ச்சி

# மெய்கண்டாரின் 'சிவஞானபோதம்' 4

# சம்ஸ்கிருதமா? தமிழா?

82. ஐந்தாம் சூத்திரம் "விதந்த்யக்ஷாணிபும் ஸார்த்தாந் நஸ்வயம் ஸோ பிசம்புநாதத் விகாரீ சிவச்சேந்நகாந் தோயோ வத்ஸதம் நயேத்" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு "புருஷனால் (அறிவிக்கப்பட்ட) பொருள்களை இந்திரியங்கள் அறிகின்றன. ஸ்வயமாக அறிவதில்லை, அவனும் சம்புவினால் அறிகிறான். ஆகையால் சிவன் விகாரி ஆவான் எனில் ஆகான், காந்தக்கல் இரும்பைச் சேஷ்டிப்பது போல அந்த சிவன் அந்த ஆன்மாவை சேஷ்டிப்பிக்கிறான்" என்பது. மெய்கண்டார் திருவாக்கு "விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு அளந்தறியா ஆங்கவை போலத் தாந்தம் உணர் விற்றமியருள் காந்தம் கண்ட பசாசத்தவையே" என்பது. இந்திரியங்கள் உயிரை அறிவதில்லை, உயிர் தன்னையும் தலைவனையும் அறிவதில்லை என்ற கருத்துக்கள் மெய்கண்டார் வாக்கிலுண்டு, வடமொழியிலில்லை.



மெய்கண்டார்

83. சம்புவினால் அறிகிறான் என்பது வடமொழி, சிற்சத்தியால் (தமியருள்) என்பர் மெய்கண்டார்.

84. சிவன் விகாரியாகான் என்று வடமொழி வெளிப்படையாகக் கூறுவதை மெய்கண்டார் நுட்பமாக "அவையே" என்ற சொல்லினுள் உணர வைத்தார்.

85. ஆறாம் சூத்திரம் "அத்ருச்யம் சேதஸத்பாவோத்ருச்யம் சேஜ்ஜடிமாபவேத்சம்போஸ்தத் வ்யதி ரேகேணஜ் ஞேயம் ரூபம் விதுர் புதா:" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு "சம்புவின் ரூபம் காணப்படாததாம் எனின் அசத்தாகும், காணப்படுவதெனின் ஜடமாகும், அவ்விரண்டிற்கும் வேறான ஒன்றால் அறியத்தக்கதென்று அறிஞர் அறிகின்றனர்" என்பது. மெய்கண்டார் திருவாக்கு, "உணருரு அசத்தெனின் உணரா தின்மையின் இருதிறனல்லது சிவசத்தாமென இரண்டு வகையின் இசைக்கு மன்னுலகே" என்பது. காணப்படுவது படாதது என்ற காரணம் காட்டுவது வடமொழி. அறிவினால் அறியப்படும் சுட்டுப் பொருள்களெல்லாம் அசத்தென்பர் மெய்கண்டார்.

86. சத்துக்கும் அசத்துக்கும் உள்ள நுட்பமான வேற்றுமையின் அடிப்படை மெய்கண்டார் வாக்கிலே தான் காணப்படுகிறது.

87. அசித்துப் பொருளைச் சத்தென்றும் அசத்தென்றும் கூறுவதன் உட்கருத்தை மெய்கண்டார் வாக்கிலே தான் காணலாம்.

88. சித்தும் சத்துமாக விளங்குவதே

சிவம் என்பதை வடமொழிச் சூத்திரம் விளக்கவில்லை.

89. சித்துக்கும் அசித்துக்கும் உள்ள வேறுபாட்டை மெய்கண்டார் வாக்கிற் காணலாம். வடமொழிச் சூத்திரத்தில் காண இயலாது.

90. சிவசமவாதம் சிவாத்துவிதம் முதலிய கொள்கைகட்கு வடமொழிச் சூத்திரம் இடந்தரும், மெய்கண்டார் வாக்கு இடம் தராது (85–90 காரணங்களை நன்கு தெளிதற்குப் பாடியம் பக்கம் 389–441 பன்முறை படிக்க வேண்டும்.

91. அறிஞர் அறிகின்றனர் என்பதற்கும் இசைக்கு மன்னுலகே என்பதற்கும் உள்ள வேறுபாடு வெளிப்படை.

92. ஏழாம் சூத்திரம் "நாசிச்சித்ஸந்நிதௌகிந்து நவித்தஸ்தே உபேமித: ப்ரபஞ்ச சிவயோர் வேத்தாயஸ்ஸ ஆத்மாதயோ : ப்ருதக்" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு –"அசித்து சித்தின் சந்நிதியில் இல்லை, ஏனெனில் அந்த இரண்டும் ஒன்றையொன்று அறிவதில்லை, பிரபஞ்சத்தையும் சிவத்தையும் அறிபவன் எவனோ அவன் அவ்விரண்டிற்கும் வேறான ஆன்மாவாம்" என்பது. மெய்கண்டார் திருவாக்கு, "யாவையும் சூனியம் சத்தெதிராகலின் சத்தே அறியாத சத்திலதறியாது இருதிறனறிவுளது இரண்டலா ஆன்மா" என்பது. அசத்து சத்தென்பர் மெய்கண்டார், அசித்து சித்து என்பது வடமொழி.

93. சத்தின் சந்நிதியில் அசத்து இன்மையால், அசத்தை சத்து அறியாதென்பது மெய்கண்டார் கூறுவது. அசித்தும், சித்தும் ஒன்றை ஒன்று அறியாமையால் சித்தின் சந்நிதியில் அசித்து இல்லை என்று காரிய காரண முறையைத் தலை கீழாக மாற்றிக் கூறுவது வடமொழிச் சூத்திரம்.

94. அசித்து சித்தை அறியாமைக்கும், சித்து அசித்தை அறியாமைக்கும் வடமொழிச் சூத்திரம் வெவ்வேறு காரணம் கூறவில்லை. அசத்து சத்தை அறியாமைக்கும், சத்து அசத்தை அறியாமைக்கும் மெய்கண்டார் வெவ்வேறு காரணம் கூறுகிறார்.

95. சிவாத்துவித சைவர் கொள்கையை மறுத்துச் சித்தாந்தம் சாதிப்பது மெய்கண்டார் திருவாக்கு. வடமொழிச் சூத்திரத்தில் இந்தத் தெளிவு இல்லை (பாடியம் 445 – 448).

96. இவ்விரண்டையும் அறிபவன் இவ்விரண்டிற்கும் வேறான ஆன்மா என்றே வடமொழிச் சூத்திரம் கூறுகின்றது. ஆன்மா இவ்விரண்டையும் அதற்குரிய காரணம், பலவாதிகளை மறுக்கும் துறையில் மூன்று வகையாகப் பொருள்படும்படி "இருதிறனறிவுளது" என்று மெய்கண்டாரால் கூறப்படுகிறது. (பாடியம் 452).

97. எட்டாம் சூத்திரம் "ஸ்தித்வாஸஹேந்த்ரியவ் யாதை: த்வாம் நவேத்ஸீதிபோதித: முக்த்வைதாந் குருணா நந்யோதந்ய: ப்ராப்நோதி தத்பதம்" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு "இந்திரிய வேடர்களோடு கூடியிருத்தலால் உனது சொரூபத்தை அறிந்தாயில்லை" என்று குருவினால் தந்யன் போதிக்கப் பெற்றவனாய், இவ்விந்திரியங்களாகிய வேடர்களை விட்டுப் பிரிந்து அந்நியமில்லாதவனாய் அப்பதத்தை அடைகிறான்" என்பது. மெய்கண்டார் திருவாக்கு, "ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத் தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு அன்னியமின்மையின் அரன் கழல் செலுமே" என்பது. வடமொழியில் "வேடர்களோடு கூடியிருத்தலால்" என்றுள்ளது. மெய்கண்டார் வாக்கில் "அயர்ந்தனை வளர்ந்து" என்பது பல நுட்பமான கருத்துக்களை அடக்கியுள்ளது.

98. இறைவனே குருவாக வருகின்றான் என்று மெய்கண்டார் கூறுகிறார், வடமொழிச் சூத்திரம் கூறவில் லை.




99. அவ்வாறு வருவதும் முன்பு செய்த வத்தினால் என்று மெய்கண்டார் கூறுகிறார், வடமொழி கூறவில்லை.

100. குருவின் பதத்தை அடைகிறான் என்பது வடமொழி. அரன் கழல் செலும் என்பது மெய்கண்டார் வாக்கு. (இறைவனே குருவாக வரு வதை வடமொழி கூறவில்லை என்று மேலே 98இல் பார்த்தோம்).

101. ஒன்பதாம் சூத்திரம் "சித்த்ருசா ஆத்மநித்ருஷ்ட்வேசம்த்யக்த்வா ஆவ்ருதிமரீசிகாம் லப்த்வா சிவபதச் சாயாம்த்யாயேத் பஞ்சாக்ஷரீம் ஸுதீ:" என்பது. இதன் நேர் மொழி பெயர்ப்பு, "விவேகி, ஞானதிருஷ்டி யால் ஆன்மாவாகிய தன்னிடத்தில் ஈசனைக் கண்டு, கானல்நீர் போன்ற விருத்தியை விட்டு, சிவபதமாகிய நிழலைப் பெற்று, பஞ்சாக்ஷரத்தைத் தியானம் செய்யக் கடவன்" என் பது. மெய்கண்டார் திருவாக்கு, "ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக்கண்ணினில் சிந்தை நாடி உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத் தண்நிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே" என்பது. மெய்கண்டார் வாக்கிலுள்ள "ஊனக்கண் பாசம் உணராப் பதியை" என்பது வடமொழியி லில்லை.

102. நாடுக என்ற முன்னிலை ஏவல் வட மொழியிலில்லை.

103. உராத்துனைத்தேர் என்பதிலுள்ள வேகக்குறிப்பும் வடமொழியி லில்லை.

104. பாசம் ஒருவ என்பர் மெய்கண் டார். விருத்தியை விட்டு என்னும் வடமொழி.

105. ஒருவுக என்ற முன்னிலை ஏவலும் வடமொழியிலில்லை. சாதன இய லில் இந்த ஏவல்கள் சாதனங்களைக் கூறுவதால் முக்கியமானவை.

106. தண்நிழல் என்பதிலுள்ள தண்மை வடமொழியிலில்லை.

107. பத்தாம் சூத்திரம் "சிவே நைக்கியம் கதஸ் ஸித்த: ததநீந: ஸ்வவ்ருத்திக: மலமாயாத்ய ஸம்ஸ்ப்ருஷ்டோ பவதிஸ்வாநுபூதிமாந்" என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு "சித்தன் சிவத்தோடு ஐக்கியத்தை அடைந்தவனாய் அதன் வயமான தன் விருத்தியை உடையவனாய் மலம் மாயை முதலியவற்றால் பற்றப்படாதவனாய் சுவானு பூதி மானாக ஆகின்றான்" என்பது. மெய்கண்டார் திருவாக்கில் "அவனே தானே ஆகிய அந்நெறி, ஏகனாகி இறைபணி நிற்க, மல மாயை தன்னொடு வல்வினை யின்றே" என்பது. மெய்கண்டார் வாக்கில் சித்தன், சுவானுபூதிமான் என்ற சொற்களில்லை.

108. ஏகனாகி நிற்க, இறைபணி நிற்க என்ற ஏவல்களும், பணி என்ற கருத் தும் வடமொழியிலில்லை.

109. "அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி" என்பதிலுள்ள பல நுட்பங்கள் வடமொழியிலில்லை.

110. "வல்வினை" என்பதன் பொருள் வளம் வடமொழியிலில்லை.

111. பதினோராம் சூத்திரம் "த்ருசோ தர்சயிதே வாத்மாதஸ்யதர்சயி தாசிவ; தஸ்மாத்தஸ்மிந் பாரம் பக் திம் குர்யாதாத்மோபகாரகே" என் பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு

“ஆத்மா கண்களுக்கு அறிவிப்பது போல, அந்த ஆத்மாவிற்கு அறிவிப்பது சிவமாம், ஆதலால் ஆத்மாவிற்கு உபகாரம் செய்கின்ற அச்சிவனிடத்து மேலான பக்தியைச் செய்தல் வேண்டும்” என்பது மெய்கண்டார் திருவாக்கு. “காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அரன் கழல் செலுமே” என்பது. இங்கே இறைவன் புரியும் காணும் உபகாரம் மெய்கண்டார் வாக்கிலுள்ளது, வடமொழியிலில்லை.

112. காட்டும் உளம் போல என்ற உவமையும் வடமொழியிலில்லை.

113. அயரா அன்பு என்பதிலுள்ள ஆழ்ந்த கருத்துக்கள் மேலான பக்தி என்பதிலில்லை.

114. அரன் கழல் செலுமே என்பர் மெய்கண்டார். வடமொழியில் இஃதில்லை.

115. பன்னிரண்டாம் சூத்திரம் “முக்தயைப்ராப்ய ஸதஸ்தோஷம் பஜேத் வேஷம் சிவாலயம் ஏவம் வித்யாச் சிவஜ்ஞாநபோதே சைவார்த்த நிர்ணயம்” என்பது. இதன் நேர் மொழிபெயர்ப்பு “முக்தியின் பொருட்டுச் சத்துக்களை அடைந்து அவர்கள் திருவேடத்தையும் சிவாலயத்தையும் பஜிப்பானாக. இவ்வாறு சிவஞான போதம் என்னும் இந்நூலில் சைவார்த்த நிர்ணயத்தை அறிக” என்பது. மெய்கண்டார் திருவாக்கு, “செம்மலர் நோன்றாள் சேரலொட்டா, அம்மலங்கழீஇ அன்பரொடு மரீஇ, மாலறநேயம் மலிந்தவர் வேடமும், ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே” என்பது. “செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலம் கழீஇ” என்ற பகுதி வடமொழியிலில்லை.

116. “அன்பரொடு மரீஇ” என்பதிலுள்ள நுட்பம் “சத்துக்களை அடைந்து” என்பதிலில்லை.

117. “மாலற நேயம் மலிந்தவர்” என்பதிலுள்ள கருத்துக்கள் வடமொழியிலில்லை.

118. “அரனென” என்ற முக்கியமான சொல் வடமொழியிலில்லை.

119. சீவன் முத்தர்களது அறிவு இச்சை தொழில்கள் வியாபரிக்கும் இடங்கள் இவை என்பதை மெய்கண்டார் நன்கு விளக்குகிறார், வடமொழியில் இவ்விளக்கம் இல்லை.

120. இங்கே ஒரு வினா இயல்பாக இறுதியில் எழும். மெய்கண்டார் திருவாக்கையே மூலமாகக் கொண்டு சிவாக்கிர யோகிகள் மொழிபெயர்த்தார் என்றே வைத்துக் கொண்டால், இவர் ஏன் இத்தனை மாறுபாடுகளைப் புகுத்தினார் என்று ஆராய்வது அவசியமாகும். இதற்குப் பல காரணங்கள் உண்டு. முதன் முதலாக அறிய வேண்டியது சிவாக்கிர யோகிகள் சித்தாந்த சைவர் அல்லரென்பது. அவர் சிவாத்துவித சைவம், சிவசம வாதம் முதலிய சில மாறுபட்ட கொள்கைகளை ஆதரிப்பவர் என்பதை, அவருடைய சிவஞான சித்தியார் உரை, சிவநெறிப் பிரகாசம் முதலியவற்றால் அறியலாம். தமது கொள்கைக்கேற்ப மொழிபெயர்ப்பது இயல்பு. இரண்டாவதாக நாம் எண்ண வேண்டியது முப்பத்திரண்டெழுத்துக்களே உள்ள சூத்திரம் ஒவ்வொன்றில் மெய்கண்டார் நுட்பங்களையெல்லாம் அடக்குவது இயலாது. கூடிய வரையில் பொதுவாக மெய்கண்டார் கருத்தை அறிவிக்கும் வடமொழி சுலோகங்கள் (rough and ready translation) என்ற எண்ணங்கொண்டே மொழிபெயர்த்தார் என்று கொள்ளலாம்.

மேற்கூறிய 120 காரணங்களை முழுமையுமாவது, அவற்றில் முக்கியமான சிலவற்றையாவது ஆராய்வோர், நடுநிலையிலிருந்து சீர்தூக்கிப் பார்த்தால், மெய்கண்டார் திருவாக்காகிய சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே தவிர, மொழிபெயர்ப்பல்ல என்ற முடிவுக்கே வருவார்கள். இம்முடிபைத் தமிழ் மக்களும் சைவ மக்களும் நன்றாகக் கைக்கொள்ளுமாறு, ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற வழிகளில் எல்லாம் தொண்டு புரியுமாறு மெய்கண்டநாதன் புண்டரீகத் தாள் போற்றுவாம்.

(முற்றும்)

நேர்காணல்

# பழமொழிகளைத் திரட்டும் பேக்கரி முதலாளி!

கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் பணியாற்றும் பேராசிரியர்கள், பயிலும் மாணவர்கள் செய்யும் கள ஆய்வுகளில் ஒன்று நாட்டுப்புற வேளாண்மைப் பாடல்கள், ஒப்பாரிப் பாடல்கள், ஏற்றப்பாட்டுக்கள், பழமொழிகளைத் திரட்டுவது.

ஆனால், கல்லூரி, பல்கலைக்கழகத்திற்குத் தொடர்பில்லாத ஒரு பேக்கரி உரிமையாளர், கடந்த 15 ஆண்டுகளாகத் தனது தொழிலில் ஓய்வு கிடைக்கும் நேரங்களிலெல்லாம் பழமொழிகளைத் திரட்டும் பணியைச் செய்து, அவற்றை நூலாக வெளிக்கொணரும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்.

இந்த அரிய பணியைச் செய்து வருபவர் திண்டுக்கல்லைச் சேர்ந்த திரு. கோ. இராமசாமி. அவரது இப்பணியைப் பற்றி அறிய, அவரை நேரில் சந்தித்து உரையாடினோம். அவர் அளித்த பேட்டி...

**கேள்வி : "பேக்கரி உரிமையாளரான உங்களுக்குப் பழமொழிகளைத் திரட்டுவதில் ஆர்வம் வந்தது எப்படி?**

*பதில் : திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள பாலத்து ராசக்காபட்டி என்பது எனது சொந்த ஊர். நான் விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன். எஸ்.எஸ்.எல்.சி. வரை படித்துள்ளேன். தமிழின் மீது எனக்கு மிகுந்த ஈடுபாடு இருந்தது. குடும்பத்தில் ஏற்பட்ட ஒரு வருத்தமான நிகழ்விலிருந்து என்னை மீட்டெடுப்பதற்காகப் பழமொழிகளைத் தேடத் தொடங்கினேன்.*

**கேள்வி : இதுவரை எத்தனை பழமொழிகளைத் திரட்டியுள்ளீர்கள்?**

*பதில் : பழமொழிகளைத் தேடத் தொடங்கியபோது சுமார் ஆயிரம் முதல் 2 ஆயிரம் பழமொழிகள் இருக்கும் என நினைத்தேன். ஆனால், தேடல் தொடர்ந்தபோது, அது பெரும் எண்ணிக்கையில் இருந்தது. 3 லட்சம் பழமொழிகள் இருக்கும் எனப் பேராசிரியர் மாடசாமி என்பவர் கூறியுள்ளார்.*

*நான் இதுவரை 60 ஆயிரம் பழமொழிகளைத் திரட்டியுள்ளேன். அவற்றில் 50 ஆயிரம் பழமொழிகளை அகர வரிசைப்படுத்தியுள்ளேன். இன்னும் காதுகளில் பல பழமொழிகள் விழுந்துகொண்டே இருக்கின்றன. அநேகமாக 1 லட்சம் பழமொழிகளை*



திரு. கோ. இராமசாமி

நான் திரட்டி விடுவேன் என்று எண்ணு கிறேன்.

***கேள்வி : இப்பணியில் உங்களுக்கு வழி காட்டியாக யாரேனும் உதவி செய்தார் களா?***

***பதில்*** : பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் கல்லூரியில் நாட்டுப்புறவியல் துறையில் பணியாற்றி ஓய்வு பெற்ற லூர்து என்ற பேராசிரியர் அறிமுகமானார். அவர், நாட்டுப்புற வியலில் பேராசிரியர் நா. வானமா மலைக்கு அடுத்தவராக விளங்கியவர். அவர்தான் எனக்குப் பழமொழிகள் திரட்டுவதற்கு வழிகாட்டினார். ஒரு லட்சம் பழமொழிகளைச் சேகரிக்கு மாறு அவர் கூறினார்.

முடிந்தவரை பேச்சு வழக்கில் உள்ளது உள்ளவாறே தொகுக்கச் சொன்னார். 'பழமொழிகள் நம் தாத்தா, பாட்டன் சொத்துக்கள். அவற்றில் நீங்கள் எதையும் ஒதுக்க வேண்டாம். படிப்பவர்கள் வேண்டுமென்றால் தேவையில்லாததை ஒதுக்கிக் கொள் ளட்டும்' என்றார். எனவே, பழமொழி களைப் பொறுத்த அளவில் தயவு தாட்சண்யம் எல்லாம் கிடையாது. எதையும் நேராகச் சொல்லி விடுவேன்.

***கேள்வி : பழமொழிகள் திரட்டும் பணி யில் உங்களுக்கு வேறு ஏதேனும் அறியக் கிடைத்தனவா?***

***பதில்*** : பழமொழிகளோடு அந்தந்தச் சமூகத்துக் கலாச்சாரங்களும் அறியக் கிடைக்கின்றன. விவசாயத்தில் உழுவதி லிருந்து, மழை எப்போது வரும் என்பது வரையிலான செய்திகளைப் பழமொழி கள் கூறுகின்றன. 'மாடு அண்ணாந்து பார்த்தால் மழை', 'தட்டான் தாழப் பறந்தால் மழை', 'ஈசல் புற்றிலிருந்து வெளியே வந்தால் மழை', 'எறும்பு சாரை சாரையாய்ப் போனால் மழை'. இன்று பல மாறி விட்டன. விவசாயத் தைப் பற்றியும், பறவைகளைப் பற்றியும் நிறையப் பழமொழிகள் கிடைக்கின்றன.

***கேள்வி : நீங்கள் பழமொழிகளை எப் படித் திரட்டுகிறீர்கள்?***

***பதில்*** : நாட்டுப்புறவியல் துறையில் உள்ள ஆர்வலர்கள் பலர் எனக்குப் பழக்கமாக உள்ளனர். இடதுசாரி எழுத் தாளர்கள் பலர் உள்ளனர். அவர்கள் பாமர மக்களிடம் சென்று அவர் களோடு பழகித்தான் கதைகள் எழுது கின்றனர். அவர்கள் மூலம் பல பழ மொழிகளைப் பெற்றுள்ளேன். அந்தந்த வட்டார மக்களின் பழமொழிகள் அந் தந்தப் பகுதியைச் சேர்ந்த ஆர்வலர் களிடமிருந்து கிடைக்கின்றன. கோவைப் பகுதியில் பேராசிரியர் டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம் அவர் களின் துணைவியார் திருமதி. ஜெயா மீனாட்சிசுந்தரம் அவர்கள், 'A Study of Kongu Proverbs' என்ற நூலை எழுதி யுள்ளார். அவர் நிறையப் பழமொழி களை எனக்குக் கொடுத்துதவினார்.

***கேள்வி : தமிழகத்தில் உங்களுக்கு எங் கெல்லாம் பழமொழிகள் அதிகமாகக் கிடைத்தன?***

***பதில்*** : மதுரை மாவட்டத்தில் அதிகமாக யாரும் பழமொழிகளைப் பதிவு செய்யவில்லை. தஞ்சையில் ஓரள விற்கு உள்ளது. அதைவிட அதிகமாகக் கொங்கு நாட்டில் பழமொழிகள் உள் ளன. அதற்கு அடுத்து, தமிழகத்திலேயே அதிகமாக, திருநெல்வேலி, கன்னியா குமரிப் பகுதியில் பழமொழிகள் அதிகமாகப் புழங்குகின்றன. அங்குதான் அதிகம் பதிவு செய்துள்ளனர். கிறித்தவ மதப் பிரச்சாரகர்கள் அதிகப் பழமொழி களைப் பதிவு செய்து வைத்துள்ளனர்.

பழமொழிகளைத் தேடிப் போகின்ற போது மூன்று பாதிரியார்கள்தான் அதிகம் சேகரித்துள்ளனர். ஜான் லாசரஸ், பெர்சிவல், இன்னொருவர் பெயர் நினைவில் இல்லை. இவர்கள் தான் தொடக்கத்தில் பொதுமக்களிடத் தில் பேசிப் பழகிப் பழமொழிகளைத் திரட்டினர்.

***கேள்வி : பழமொழிகள் பல***

**தொடக்கத்திலிருந்த நிலையிலிருந்து சிதைந்து, இப்போது உருமாறிப் பொருளும் மாறியுள்ளன. அவற்றை நீங்கள் ஆய்வு செய்துள்ளீர்களா?**

**பதில் :** நிறையச் செய்துள்ளேன். எடுத்துக்காட்டாக ஒன்றைக் கூறலாம். "பூசாரி பொய்யும், புலவனார் பொய்யும் ஆசாரி பொய் அரைப்பொய்க்கு ஈடாகாது" என்பர். ஆனால், அதன் உண்மைப் பொருளை விசாரித்ததில், உடுமலைப்பேட்டையைச் சேர்ந்த ஒருவர், "பூசாரி பையும், புலவனார் பையும், ஆசாரி பை அரைப் பைக்கு ஈடாகாது" என்று சொன்னார். அதாவது, பூசாரி பை என்பது பூக்குடலை. அதில் பூக்கள் சில இருக்கும். புலவர் பையில் சில ஏடுகள் இருக்கும். ஆனால், ஆசாரி என்பது இங்கே பொற்கொல்லரை. அவரது பையில் தங்க நகைகளோ அல்லது நகை செய்வதற்குரிய தங்கமோ இருக்கும். எனவே அதன் மதிப்பு மற்ற இருவர் பைகளிலும் உள்ளதைவிட அதிகம். 'பை' என்பதைப் 'பொய்' எனக் கூறித் தவறாகப் பொருள் கொள்கிறார்கள்.

**கேள்வி : கரிசல் காட்டு எழுத்தாளர் கி.ராஜநாராயணன், நாட்டுப்புறவியலில் நிறையப் படைப்புகளைத் தந்தவர். அவரோடு தொடர்பு உண்டா?**

**பதில் :** பேராசிரியர் கி.ரா. எனக்கு மிகவும் நெருக்கமானவர். நாட்டார் வழக்காற்றியல் துறையில் அவர்தான் இன்றைக்கு முன்னணியில் இருக்கிறார். பேராசிரியர் லூர்து அவர்களுக்கு அடுத்தபடியாக அவரைத்தான் சொல்ல வேண்டும். மறைந்த திரு. கழனியூரன், கி.ரா.வுக்கும் எனக்கும் மிகுந்த உதவிகள் செய்துள்ளார்.

**கேள்வி : பழமொழிகள் திரட்டுவதில் நீங்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் என்னென்ன?**



**பதில் :** பழமொழிகளைத் தனியே சொல்ல முடியாது. பேச்சிலேயே இயல்பாக வருபவை. 'தூங்கினால் கனவு வரும், பேசினால் பழமொழி வரும்' என்பதும் ஒரு பழமொழி. எனவே, பழமொழிகளைத் தனியே திரட்டுவது கடினம்.

பழமொழிகளைத் தேடிப்போகும் போது உள்ள மற்றொரு பிரச்சனை என்னவென்றால், கொச்சைப் பழமொழிகள் பல உள்ளன. அவற்றைப் பேசலாமா, கூடாதா? என்ற சர்ச்சை

உள்ளது. எனக்குப் பேராசிரியர் லூர்து அவர்கள், 'பதிப்பிப்பதற்கு வேண்டுமானால் கூச்சப்படலாம். ஆனால், கிராமங்களில் பேச்சு வழக்கில் பேசிக் கொண்டுதான் இருக்கிறார்கள். எனவே, அவற்றையும் நீங்கள் பதிவு செய்து வையுங்கள்' என்று கூறினார். அவரும் அவ்வாறான 136 பழமொழிகளைத் தனியாகப் பதிவு செய்து வைத்திருந்தார்.

**கேள்வி : பழமொழிகளைத் திரட்டி, உள்ளது உள்ளவாறே வெளியிட நினைத்தீர்களா? அல்லது அவற்றிலுள்ள பிழைகளைத் திருத்திச் செப்பம் செய்து வெளியிட எண்ணினீர்களா?**

**பதில் :** எனது நோக்கம், காலப் போக்கில் அழிந்து வரும் பழமொழிகளை அழியாமல் காப்பாற்ற வேண்டும் என்பது. பழமொழிகள் பேச்சு வழக்கில்தான் உள்ளன. எனவே, அவற்றை உள்ளது உள்ளபடி வெளியிட வேண்டும் என்பதுதான் என் விருப்பம்.

**கேள்வி : வேறு மொழிகளிலுள்ள பழமொழிகளோடு தமிழ்ப் பழமொழிகளை ஒப்பிட்டுப் பார்த்துள்ளீர்களா?**

**பதில் :** அவ்வாறு உள்ளன. வங்காளப் பழமொழி ஒன்று 'ஒவ்வொரு கோதுமையிலும் அது யாரிடம் போய்ச் சேர வேண்டும் என எழுதப்பட்டுள்ளது' என்கிறார்கள். இதையே தமிழில் 'இன்னார்க்கு இன்னாரென்று எழுதி வைத்தான் தேவன் அன்று' என நாம் சொல்கிறோம். ஒத்த கருத்துள்ள பழமொழிகள் நிறைய உள்ளன. ஆனால், சிறிது வித்தியாசப்படுகின்றன.

**கேள்வி : நீங்கள் திரட்டிய பழமொழிகள் அனைத்துமே உங்களுக்குப் புரிந்துள்ளனவா? புரியாதவையும் உண்டா?**

**பதில் :** சில பழமொழிகள் எனக்குப் புரியாதவையாக இருந்திருக்கின்றன. காரணம் வட்டார வழக்கு. அவற்றை அந்தந்தப் பகுதியைச் சேர்ந்தவர்களிடம் விசாரித்து அறிந்து கொள்வேன்.

**கேள்வி : பழமொழிக்கு இலக்கணம் ஏதேனும் உண்டா?**

**பதில் :** பழமொழிக்கு இலக்கணமெல்லாம் கிடையாது. வாயில் வந்தவை பழமொழிகளாயின. 'நாசமாய்ப் போவாய்' என ஒருவரைத் திட்டுவது கூடப் நாளடைவில் பழமொழியாகி விடுகிறது.

**கேள்வி : பழமொழிகளின் தோற்றத்தைப் பற்றி ஏதேனும் உங்களுக்குக் கருத்து உள்ளதா?**

**பதில் :** பழமொழிகள், மனிதர்களைச் சுற்றியிருக்கும் சூழ்நிலைகள், நிகழ்வுகளிலிருந்து தோன்றுகின்றன. பேசும் கருத்தை வலியுறுத்திச் சொல்வதற்காக ஒரு பழமொழியை பேச்சின் உள்ளே வைக்கிறார்கள்.

"தாயோடு அறுசுவை போம். தந்தையோடு கல்வி போம். சகோதரனோடு தோள் வலிமை போம். சம்சாரத்தோடு சகலமும் போம்" – இது அனுபவத்தில் சொல்வது மட்டுமல்ல, ஒருவனுக்கு உணர்த்துவதற்காகவும்தான். ஒருவன் மனைவியைக் கொடூரமாக அடித்துத் துன்புறுத்துகிறான் என்றால், அவனுக்கு அறிவுரை கூறும் விதமாக இந்த நீதியைச் சொல்லும் பழமொழியைக் கூறித் திருத்துகிறார்கள். இது நீதிநூல் கருத்துப் போல இருந்தாலும், இதுவும் பழமொழிதான். உவமைகளும் பழமொழிகளாக உள்ளன.

படிக்காதவனிடத்தில் பழமொழிகள் அதிகமாக உள்ளன. அடுத்து, பெண்களிடம் அதிகமாக உள்ளன. புறம் பேசுவதற்குப் பழமொழிகளை அதிகம் பயன்படுத்துவார்கள். காடு கரைகளில் அலுப்புத் தெரியாமல் இருப்பதற்குப் பாடல்கள் போல் பழமொழிகளையும் பேச்சுவாக்கில் பயன்படுத்துகிறார்கள்.

**கேள்வி : பழமொழிகளுக்காகத் தமிழகம் முழுதும் சென்றிருக்கிறீர்களா?**

**பதில் :** சென்றிருக்கிறேன். என்றாலும், நானாகக் கள ஆய்வு செய்தது குறைவு. நாட்டுப்புறவியல் ஆசிரியர்கள்,

மாணவர்கள், ஆய்வாளர்களிடமிருந்து நான் திரட்டியவையே அதிகம்.

**கேள்வி : பழமொழிகளைத் திரட்டுவதில் பிற நூல்களைப் பயன்படுத்திக் கொள்கிறீர்களா?**

**பதில் :** வட்டார வழக்கு நாவல்கள், நூல்கள் இருந்தாலும் அவற்றை வாங்கிக் கொள்வேன். சின்னப்ப பாரதி, சோலை சுந்தரப்பெருமாள் ஆகியோர் நாவல்களில் பழமொழிகள் பல இருக்கும். பேராசிரியர் சுபாஷ் சந்திரபோஸ் என்பவரது எழுத்துக்களில் பழமொழிகள் இருக்கின்றன. காந்தி கிராமப் பல்கலையில் நாட்டுப்புறவியலில் திரு. முத்தையா இருக்கிறார்.

**கேள்வி : 15 ஆண்டுகளாகப் பழமொழிகளைத் தேடித் திரட்டி வருகிறீர்கள். தொடக்கத்தில் இருந்த ஆர்வம் இப்போதும் அப்படியே இருக்கிறதா? அல்லது எப்போதேனும் சலிப்பு ஏற்பட்டுள்ளதா?**

**பதில் :** சலிப்பு ஏற்படாது. கள் குடிப்பவனுக்குச் சலிப்பு ஏற்படாதது போல, எனக்கும் இதுவரை சலிப்பு ஏற்பட்டதில்லை. பழமொழி தேடுவது எனக்கு ஒரு போதையாகி விட்டது.

**கேள்வி : பழமொழிகள் எதுகை, மோனைகளோடு உள்ளன. ஆனால், அவற்றை உருவாக்கிய பாமரனுக்கு இந்த இலக்கணங்கள் எதுவும் தெரியாது. இதைப்பற்றி நீங்கள் ஏதேனும் சிந்தித்திருக்கிறீர்களா?**

**பதில் :** கட்டியம் கூறுபவன், ஒப்பாரிப் பாட்டுப் பாடுகிற பெண்கள் இவர்களெல்லாம் இலக்கணம் படிக்காதவர்கள்தான். ஆனால், அவர்களது படைப்புகள் எதுகை மோனையோடுதான் வருகின்றன. அப்படித்தான் பழமொழிகளைப் படிக்காத பாமரர்கள் உருவாக்கியிருந்தாலும், எதுகை மோனையோடு உருவாக்கியுள்ளனர். பழமொழியைச் சொல்லச் சொன்னால் சொல்ல மாட்டார்கள். ஆனால், பேச்சு வழக்கில் பொருத்தமாக அவ்வாறு கூறி விடுகிறார்கள்.

**கேள்வி : இந்தப் பழமொழிகள் திரட்டும் பணிக்கு உங்கள் வீட்டில் ஆதரவு உள்ளதா?**

**பதில் :** ஆதரவு உள்ளது. என் மனைவி இதற்கு மௌனமான அங்கீகாரம் கொடுத்திருக்கிறார். எதிர்ப்பதில்லை. எனது மூத்த மகன் எங்கேனும் பழமொழிகள் கேள்விப்பட்டால், அவற்றைக் குறித்துக்கொண்டு வந்து என்னிடம் கொடுக்கிறார்.

**கேள்வி : உங்கள் பழமொழிப் பணியைப் பற்றி ஏதேனும் பத்திரிகைகளில் எழுதியுள்ளீர்களா?**

**பதில் :** நாங்கள் நடத்தும் பேக்கரித் தொழில் அமைப்பிலிருந்து 'பேக்கரி' என்ற பத்திரிகை வந்து கொண்டிருக்கிறது. அதில் எழுதியுள்ளேன். ஐந்தாறு கருத்தரங்கங்களில் ஆய்வுக் கட்டுரைகள் படித்துள்ளேன். கவியரங்குகளிலும் அழைப்பின்பேரில் சென்று கலந்து கொண்டிருக்கிறேன்.

**கேள்வி : இதுவரை வெளியான நூல்களில் எத்தனை பழமொழிகள் வெளி வந்திருக்கின்றன?**

**பதில் :** இதுவரை வெளியாகியுள்ள நூல்களில் கி.வா.ஜ. வெளியிட்டவை 22000 பழமொழிகள். பேரா. இளங்குமரனார் வெளியிட்டவை 19276. இன்னும் பலர் இவற்றைவிடக் குறைந்த எண்ணிக்கையில் வெளியிட்டிருக்கிறார்கள். இவற்றைவிட அதிகமாக இருக்க வேண்டும் என்று 50 ஆயிரம் பழமொழிகளைத் திரட்டியுள்ளேன்."

திரு. இராமசாமி அவர்களுக்குப் புதிய பழமொழிகளைத் தெரிவிக்க விரும்பும் வாசகர்கள் அவரை 88076 45331 என்ற எண்ணில் தொடர்பு கொள்ளலாம்.

**பேட்டி :**

**இரா. வேணுகோபாலகிருஷ்ணன்,**

**பேட்டி ஏற்பாடு : கவிஞர் தங்கமகன்**

சிறுகதை

# தாராள மனசு!

"வா! வா! பாகி அக்கா!" என்று உற்சாகமாக வரவேற்றார் ஜெயராமன். புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்தியவளாக நின்றாள் பாகீரதி. ஒரு கையில் பன்னிரண்டு வயது மகனைப் பிடித்திருந்தாள். இன்னொரு கையில் துணிப்பை. முகத்தில் ஏகப்பட்ட கவலைச் சுருக்கங்கள். அளவுகடந்த தயக்கம்!

உள்ளே திரும்பி "காமாட்சி, இங்கே பாரு யாரு வந்திருக்கான்னு!" என்று மனைவியை அழைத்தார் ஜெயராமன்.



உள்ளே இருந்து காமாட்சி ஆர்வமாகத்தான் வந்தாள். பாகீரதியைப் பார்த்தவுடன் முகம் சுருங்கிப் போனது. வரவழைத்துக் கொண்ட உற்சாகத்துடன் "வாங்க அக்கா வாங்க! எப்ப வந்தீங்க?" என்று வரவேற்றாள்.

பாகீரதி அங்கே தங்கியிருந்த இரண்டு மூன்று நாட்களும் காமாட்சி வேண்டும் என்றே சுமாரான சமையலாகச் செய்தாள்.

"என்னக்கா பண்றது? எங்க ஆத்துக்காரர் சம்பாத்தியத்திலேயே இரண்டு பசங்களைப் படிக்க வைக்கணும். இரண்டு பேரும் ஹாஸ்டல்லே படிக்கறாங்க. ஹாஸ்டல் பீஸ், காலேஜ் பீஸ், கைச் செலவுக்குப் பணம் அப்படி இப்படின்னு நிறைய அனுப்ப வேண்டி இருக்கு. நாங்க கட்டு செட்டா பொழைச்சாதானே ஆகும்?" என்று லாவணி பாடினாள்.

பாகீரதிக்கு நன்றாகவே புரிந்தது. உண்மையில் தன் மகனை அங்கே விட்டுச் செல்லலாம் என்ற எண்ணத்தில்தான் பாகீரதி அங்கே வந்திருந்தாள். ஆனால் காமாட்சிக்கு அதிலே விருப்பம் இல்லை என்பதைப் புரிந்து கொண்டாள்.

இருந்தாலும் காமாட்சி கோயிலுக்குப் போயிருந்த நேரத்தில் ஜெயராமன் துருவித் துருவிக் கேட்டதால் சொன்னாள்.

"இல்லே. பழைய வசதியெல்லாம் இப்ப இல்லே. அப்பா சொத்தையெல்லாம் அண்ணன் அழிச்சுட்டான். போயும் சேர்ந்துட்டான். அண்ணியும் பசங்களுமே கஷ்டத்திலே இருக்காங்க. எங்க வீட்டுக்காரருக்கு வியாதியைக் குணமாக்க நானும் எவ்வளவோ செலவு செஞ்சும் காப்பாத்த முடியலை. இருந்த வீடும் போச்சு. ஜெயராமா, உங்கிட்டே சொல்றதுக்கு என்ன? நான் நாலு வீட்ல பத்துப் பாத்திரம் கழுவியாவது என் பொழப்பைப் பார்த்துப்பேன். ஆனா பாஸ்கரனை எப்படியாவது படிக்க வைக்கணும்னு ஆசை. இப்பசத்திக்கு நல்லாப் படிக்கறான். உன்னாலே ஏதாவது உதவி பண்ண முடியுமான்னு கேட்கலாம்னுதான் வந்தேன். பாஸ்கரன்

*"இத பாருங்க! பாகீரதி அக்காவையும் பாஸ்கரனையும் புறப்பட்டு வரச் சொல்லுங்க. நம்ம வீட்லயே வச்சுக்கலாம்!"*

ரொம்ப நல்ல பையன். கைக்காரியம் எல்லாம் நல்லா பண்ணுவான். இடம் தெரிஞ்சு நடந்துப் பான். ஆனா இங்கத்த நிலைமையும் புரியுது. நீயே கஷ்டத்திலே இருக்கே. பரவாயில்லை ஜெய ராமா!'' என்றாள்.

''அக்கா! அவசரப்படாதே! நான் ஏதாவது செய்ய முடியுமான்னு பார்க்கறேன். ஏதோ ஒரு முடிவைப் பண்ணிட்டு நான் நம்ம ஊருக்கே வரேன்!'' என்று சொல்லி அனுப்பி வைத்தார்.

கோயிலுக்குப் போன காமாட்சி திரும்பி வந்தாள்.

''எங்கே அக்கா?'' என்றாள்.

''ஊருக்கு அனுப்பி வச்சுட்டேன்!'' என்றார் ஜெயராமன் கடுப்பாக.

''ஏன்?'' என்றாள்.

''அவளுக்கு ஏதாவது செய்ய வேண்டி வரு மேன்னுதானே தினமும் மோருஞ்சாதம், வத்தக் குழம்பு, சுட்ட அப்பளம்னு சமைச்சே? இன்னைக் காவது நல்ல சோறாக்கு!'' என்று கடுப்பாகச் சொல்லிவிட்டு நகர்ந்தார்.

ஈஸி சேரில் சாய்ந்த ஜெயராமனுக்குத் தனது கடந்த காலம் நினைவுக்கு வந்தது.

பத்துக் குடித்தனங்கள் ஒன்றாக இருந்த அந்த ஒண்டுக் குடித்தனத்தில் முறைச் சோறு சாப்பிட்டுப் படித்துக் கொண்டிருந்தார் ஜெய ராமன். அப்பொழுது பாகீரதியின் குடும்பம் வசதி யாக இருந்தது.

ஒரு சமயம் பட்டணத்தில் இருந்து வந்த பாகீரதியின் தந்தை குமாரசாமி இவர்களின் நிலை மையைப் பார்த்துவிட்டு, ''கமலா, என்னத்துக்கு இங்கே கஷ்டப்படறே. தூரத்து உறவானாலும் நானும் உனக்கு அண்ணன் முறைதான். நம்ம ஊருக்கு வந்துடு. நான் பாத்துக்கறேன்!'' என்று அழைத்துக் கொண்டு வந்து தன் வீட்டிலேயே தங்க வைத்துக் கொண்டார்.

பாகீரதியின் தாய் சற்றே பூஞ்சையாக இருப் பாள். அதனால் சமையல் முதல் கொண்டு செய்து குடும்ப நிர்வாகம் முழுவதையும் கமலமே கவனித்துக் கொண்டாள். ஜெயராமனையும் படிக்க வைத்தார் குமாரசாமி. அவனும் நன்றாகப் படித்து வங்கியில் வேலைக்குச் சேர்ந்தான். இப்பொழுது மேனேஜராக இருந்தான். அங்கேயும் இங்கேயும் மாற்றலாகிப் போனதில் தொடர்பு விட்டுப் போனது.

பாகீரதியை இந்த நிலைமையில் பார்த்து அவரது மனம் நொந்து போனது. அன்று இரவு பொரிந்து தள்ளிவிட்டார்.

''பேங்க் கேஷியராச்சேன்னுதானே உங்க அப்பா பொண்ணு கொடுத்தாரு. ஆனா என் னோட ஆரம்ப காலத்தைப் பத்தி உனக்குத் தெரி யாதில்லே? முறைச் சோறு சாப்பிட்டுக் கஷ்டப்பட்டிருக்க வேண்டியவன்டி. ஆனா என்னை யும் எங்க அம் மாவையும் கூட் டிட்டுப் போய் வேலை கொடுத்து கௌரவமா வாழ வச்சு, என்னைப் படிக்க வச்சாரு குமாரசாமி மாமா! பாகீரதிக் காவோட அப்பா. அவரு இல்லைன்னா இன் னைக்கு இப்படியொரு நல்ல நிலைமை நம்மளுக்கு வந்திருக்குமா? அவங்களுக்குப் போய் ரசம் சோறு, அப்பளம், மோருஞ் சாதம், வத்தக் குழம் புன்னு ஆக்கிப் போடறே? சே!'' என்று நிறுத்தாமல் பேசிவிட்டுக் கொண்டு திரும்பிப் படுத்துக் கொண்டார்.



# ஜெய்சக்தி

காமாட்சி திகைத்துப் போனாள்.

காமாட்சி கொஞ்சம் கவலையோடுதான் சமைத்துக் கொண்டிருந்தாள். 'பாகீரதி அக்கா வந்துவிட்டுப் போய் நாலு நாள் ஆகியும் மனுஷன் எள்ளும் கொள்ளுமா வெடிச்சுகிட்டுருக்காரே' என்று எண்ணிக் கொண்டாள்.

ஹாஸ்டலில் இருந்த பையன்களிடம் போனில் புலம்பினாள். ''அம்மா, பாகீரதி அத்தையைப் பத்தி அப்பா எங்ககிட்டே நிறைய சொல்லியிருக்காரு. அப்பா கண்டிப்பா ஹெல்ப் பண்ணனும்னு நினைப் பாரும்மா. நீ விட்டுக் கொடுத்துரு. எதுவும் சொல்லித் தடுக்காதே!'' என்றார்கள்.

''அம்மா! அம்மா!'' என்று கேட்டுக்கு முன் னால் குரல் கேட்டது.

''குயிலா!'' என்று வேகமாக வெளியே போனாள்.

''அம்மா...!'' என்றாள் அந்தக் குயிலா.

''எங்கம்மா போனே? ஒரு வாரமா ஆளையே காணோம்!'' என்றாள் காமாட்சி.

''அது பெரிய கதைம்மா! அப்புறம் சொல் றேன்!'' என்றாள் குயிலா.

''ஆமாம் போ! இந்த மாமரத்துக்கு கீழே விழற குப்பையை வாரியே எனக்கு இடுப்பு கழண்டு போச்சு. வா! வா! கொல்லைப் பக்கம் சுத்தம் பண்ணு. அதுக்குள்ளே அய்யாவை அனுப் பிச்சுட்டு வரேன்!'' என்று பின்கட்டுக் கதவைச் சாத்திவிட்டுப் போனவள் ஜெயராமனுக்கு உணவுக் கேரியரைக் கட்டி அனுப்பி வைத்து விட்டுப் பின் கட்டுக்குப் போனாள்.

''இந்தா! இந்தக் காபியைக் குடி!'' என்று பெரிய பேப்பர் கப்பில் காபியை நீட்டினாள்.

''அம்மா, நீ ஒண்டிதான் உங்க வீட்லே போடற காப்பியை எனக்குக் குடுக்கறது. மத்த வீட்லே எல்லாம் எனக்குன்னு கஞ்சித் தண்ணியாட்டம் தான் காப்பியே கொடுப் பாங்க!'' என்றாள்.

''அது சரி! அதை விடு. என்னமோ கதைன்னு சொன் னியே? அதைச் சொல்லு!'' என் றாள் தானும் ஒரு தம்ளரில் காபியை எடுத்துக் கொண்டு.

''அதாம்மா! எங்க அண் ணன் ஒருத்தன் இருந்தான்லே, எங்க அண்ணன். அவன் எங் களைக் கண்டுக்கவே மாட் டான்னு சொல்லு வேனே. அவன் ரொம்ப நாளைக்கு முன்னயே ஆந்திராப் பக்கம் போயிட்டான். எங்க அண்ணி அவனுக்கு மேல. ஒட்டவேமாட்டா. என்ன பண்றது? ரெண்டு மாசத்துக்கு முன்னாலே எங்க அண்ணி மண்டையைப் போட்டுட்டா!''

''ஐயய்யோ! அப்புறம்?'' என்றாள் காமாட்சி.

''அப்புறம் என்ன? எங்க அண்ணன் குடி காரன். அவன் வேற எவளையோ சேர்த்துக் கிட்டான். அவனுக்கு மூணு பொண்ணுங்க. ரெண்டு புள்ளைக வயசுக்கு வந்துட்டாளுக. இன் னொருத்திக்கு எட்டு வயசு. எனக்குப் போன் பண்ணி அழுகுதுங்க. என்ன பண்றது? அதான் நானே ஆந்திரா போய்க் கூட்டிட்டு வந்துட்டேன்!'' என்றாள்.

''என்ன சொல்றே நீ? மூணும் பொம்மனாட் டிகள். வளர்த்துக் கல்யாணம் பண்றதெல் லாம் லேசுபட்ட காரியமா? உங்க வூட்டுக்காரனும் குடி காரன் ஆச்சே?'' என்றாள் காமாட்சி.

''இருக்கட்டும்மா. ஆண்டவன் ஏதாவது வழி விடுவான். எப்படியோ ஆளாக்க வேண்டியது தான்!''

''எப்படி? நீயே நாலு வீட்ல பாத்ரூம் டாய்லெட் கழுவிக் காலம் தள்றவ! உன் பொழப்பே தாளம் போடுது!''

''அதென்னமோ நிசந்தாம்மா. அதுக்குன்னு விட்ர முடியுமா? ஏதாவது ஒரு வழி கிடைக்கும்மா. எனக்குப் பொறந்த பசங்க ரெண்டும் என்னைக் கவனிச்சுக்கிட்டா இருக்குதுக? அதையெல்லாம் நான் நினைக்கறதே இல்லை. நாம குடிக்கற கஞ் சியை அதுகளுக்கும் ஊத்துவோம். நம்மளாலே முடிஞ்சது. கால் பவுனோ அரைப் பவுனோ போட்டுக் கரையேத்துவோம். எங்க அம்மாதான் சொல்லும், நாம யாருக்காவது உதவி செஞ்சா அது உதவி இல்லை யாம். அது விதையாம். கண் டிப்பா வேற உருவத்திலே அது விளைஞ்சு வருமாம்.''

அந்த வார்த்தைகள் காமாட்சிக்கு நெற்றிப் பொட்டில் அடித்தாற் போல உறைத்தன. குயிலாவை அனுப்பிவிட்டு முதல் வேலையாகக் கணவ னுக்குப் போன் செய்தாள்.

''இத பாருங்க! பாகீரதி அக்காவையும் பாஸ் கரனையும்

> **நின்ற கோலத்தில் முருகப் பெருமான்!**
>
> *வேலூர் மாவட்டம் படவேடு அருகில் உள்ள குமரன் குன்றில், முருகப் பெருமான் மயில் மீது நின்று காட்சி தருகிறார். மயில் பாம்பைக் கவ்வியபடி இருக்க, பாம்பு தலையைத் தாழ்த்திய நிலையில் காணப்படுகிறது.*
>
> *– கே. பிரபாவதி*




புறப்பட்டு வரச் சொல்லுங்க. நம்ம வீட்லயே வச்சுக் கலாம்!"

"வரச் சொல்லலாம். ஆனா நீ வத்தக் குழம் பும் மோரும் சாதமுமா போட்டுக் கொல்லுவியே?!" என்றார் நக்கலாக.

உடனே குயிலா சொன்ன கதையைப் படபட வென்று கொட்டினாள் காமாட்சி. "நாலு வீட்லே கொல்லைப்புறத்தைச் சுத்தம் செய்து சம் பாதிக் கிற அவளுக்கே இவ்வளவு தாராள மனசு இருக் கறப்ப, நமக்கு இருக்கக் கூடாதா?" என்றாள்.

"சரி, வரச் சொல்றேன்!" என்றார் ஜெய ராமன், மனதுக்குள் குயிலாவுக்கு நன்றி சொல்லி யபடி!

●




கட்டுரை

# நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் 8

## நெதர்லாந்து மற்றும் கனடா நாட்டின் ஈடுபாடு

ஒருமுறை டெல்லியிலுள்ள நெதர்லாந்து நாட்டின் தூதரகத்தில் நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் பற்றிய விளக்கக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. நான் அதில் கலந்து கொண்டு திட்டம் பற்றி விளக்கினேன்.

அதன்பிறகு ஒருமுறை நெதர்லாந்து தூதரகத்தின் அறிவியல் மற்றும் தொழிநுட்ப ஆலோசகர் திரு. தியோ க்ரூதூசியன் அவர்களைச் சந்தித்துப் பேசியபோது, அவர் திட்டத்தின் மீது மிகுந்த ஆர்வம் காட்டினார். அவரது உதவியாளர் இந்தத் திட்டம் வரும் பொழுது இது இந்தியாவிற்குப் புதுமையானதாக இருக்கும் என்றார். ஆனால் அவரோ "இல்லை! இல்லை! நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் போல உலகில் எங்குமில்லை. எனவே உலகிற்கே புதுமையானத் திட்டம்" என்றார்.

வேறொரு தருணத்தில் அவரைச் சந்திக்கையில், நெதர்லாந்து நாட்டிற்கு ஒருமுறை செல்ல வேண்டுமென யதார்த்தமாகக் கூறினேன். உடனே அவர் "என்றைக்குச் செல்ல விரும்புகிறீர்கள்? என மட்டும் கூறுங்கள். நெதர்லாந்து நாட்டின் மிகப்பெரிய நீர் சம்பந்தமான நிறுவனங்களின் கூட்டமைப்பாகிய "நேஷனல் வாட்டர் பார்ட்னெர்ஷிப்" மூலம் அழைப்பு அனுப்பச் செய்கிறேன்" என்றார். எனக்கும் நெதர்லாந்து செல்ல வேண்டுமென்ற எண்ணம் அதிகரித்தது. அதற்கு முக்கிய காரணம், நெதர்லாந்தில் அமைத்துள்ள ஏராளமான நீர்வழிச் சாலைகளே!




நெதர்லாந்து நாட்டில் கிட்டத்தட்ட 600 முதல் 700 ஆண்டுகளுக்குப் பழமையான நீர்வழிச்சாலைகள் உள்ளன. அவற்றில் பெரும்பாலானவை அந்நாட்டு அரசர், அரசிகளால் அல்லது இளவரசர்களால் உருவாக்கப்பட்டவை. தற்போது வரை அவை முறையாகப் பராமரிக்கப்பட்டு வருகின்றன. மேலும் நீர்வழிச்சாலை பற்றிய தொழில்நுட்பத்தில் உலகளவில் நெதர்லாந்து தொடர்ந்து முன்னோடியாக உள்ளது.

2009–ஆம் ஆண்டு ஜூன் மாதம்



ஆர்ம்ஸ்டெர்டாம் பல்கலைக்கழகத்தில் பேராசிரியர் ராபர்ட் மேஜருடன் பொறியாளர் ஏ.சி. காமராஜ், திரு. அருஞ்சுனை.

நெதர்லாந்து செல்லத் திட்டமிட்டேன். உடன் எனது மகன் ஈசனும் வந்தார். திரு. தியோக்ரூதுரசியன் ஏற்கனவே கூறியிருந்தபடி, அந்நாட்டின் "நேஷனல் வாட்டர் பார்ட்னெர்ஷிப்" மூலம் எங்களுக்கு அழைப்பு கிடைக்கும்படி செய்தார். அதன் மூலம் விசா பெற்றோம். மேலும், இதற்கிடையில் திரு. தியோக்ரூதுரசியன் அவர்கள் அந்நாட்டின் முக்கியப் பல்கலைக்கழகப் பேராசிரியர்கள், அரசு அதிகாரிகள், தொழிலதிபர்கள் ஆகியோருடன் சந்திப்பிற்கு ஏற்பாடு செய்திருந்தார்.

ஜூன் 1, 2009 அன்று விமானம் மூலம் சென்னையிலிருந்து துபாய் சென்று, பின் அங்கிருந்து ஜெர்மனியின் பிராங்பேர்ட் வழியாக நெதர்லாந்து நாட்டின் தலைநகரமான ஆர்ம்ஸ்டெர்டாம் சென்றோம். இதற்கிடையில் 'நவாட் டெக்' இயக்குனர்களில் ஒருவரும், லண்டனில் வசிப்பவருமாகிய பொறியாளர். கே. ஜெயச்சந்திரன் அவர்கள் எங்களுடன் கலந்துகொள்ள லண்டனிலிருந்து நெதர்லாந்து வந்தடைந்தார்.



## பொறியாளர் ஏ.சி.காமராஜ்

அடுத்த நாளே அங்குள்ள புகழ்பெற்ற பல்கலைக்கழகமான டெல்ப்ட் (Delft) பல்கலைக்கழகத்தின் ஆராய்ச்சி மையத்தைப் பார்வையிட ஏற்பாடு செய்திருந்தனர். இது ஒரு பிரம்மாண்டமான ஆராய்ச்சி மையம். இதில் தண்ணீரின் ஓட்டம், சுழற்சி, ஆற்றின் கரைகளுக்கு ஏதாவது ஆபத்து என்றால் அதை முன்கூட்டியே அறிவிப்பது, தண்ணீரின் ஓட்டத்தை வெகு தூரத்திலிருந்தே கட்டுப்படுத்துவது முதலிய ஏராளமான ஆய்வுகள் நடக்கின்றன. நமது நவீன நீர்வழிச்சாலைத் திட்டமும் உலகில் இதுவரை இல்லாத ஒரு புதுமையானத் திட்டம் என்பதால், இப்படிப்பட்ட ஆராய்ச்சி மையம் நமக்கும் மிகமிக அவசியம்.

பின்னர், அருகே அமைந்துள்ள டெல்டாரஸ் என்ற ஆராய்ச்சி நிறுவனத்தில் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இதில் டெல்டாரஸ் நிறுவனத் தலைவர், டெல்ப்ட் பல்கலைக்கழக இயக்குனர் இந்தியத் தூதரகத்தின் முக்கிய அதிகாரிகள், நெதர்லாந்து நாட்டின் தொழிலதிபர்கள் கலந்து கொண்டனர். கூட்டத்தில் டெல்டாரஸ் நிறுவனம் பற்றியும் அவர்களது திட்டங்கள் பற்றியும் விளக்கப்பட்டது.

அதன் பிறகு அனைவருக்கும் நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் பற்றி ஒலி – ஒளி படத்துடன் விளக்கினோம். திட்டத்தை அனைவரும் புரிந்துகொண்டு பாராட்டினர். ஆயினும் இத்திட்டம் மிகப்பெரிய



நெதர்லாந்து நீர்வழிச்சாலை

திட்டம் என்ற உணர்வு அவர்களுக்கு இருந்தது. நான் பேசும்போது, "இந்தியா மிகப்பெரிய நாடு என்பதால் மிகப்பெரிய திட்டமாக இது தீட்டப் பட்டது. ஆனால் ஒவ்வொரு மாநிலத்திற்குள்ளும் தனித்தனியாகவும் திட்டம் செயல்படுத்த வசதி யாகக் கொடுக்கப்பட்டுள்ளது" எனக் குறிப்பிட் டேன். அவர்களும் ஏற்றுக் கொண்டனர். திட்டத் தில் எப்பொழுது வேண்டுமானாலும் இணைந்து பணியாற்றத் தயாராக உள்ளோம் என விருப்பம் தெரிவித்தனர். நாமும் அவர்களது முதிர்ந்த அனுபவங்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

அதே நாள் மாலையில், உலகளவில் தூர் வாருவதில் முதன்மையான நிறுவனமாக விளங்கும் வான் ஊர்ட் நிறுவனத்தில் அதன் முக்கிய நிர்வாகிகளுடனும் வல்லுனர்களுடனும் சந்திப்பு நிகழ்ந்தது. வான் ஊர்ட் இந்தியாவில்



திட்டத்தின் செயல்வடிவ மாதிரியை பொறியாளர் விளக்குகிறார். உடன் 'தி சென்னை சில்க்ஸ்' மேனேஜிங் டைரக்டர் திரு. ஆறுமுகம், முன்னாள் எம்.எல்.ஏ. திரு. பாராமலை, பொறியாளர் மணிகண்டன், கடலூர் மாவட்ட விவசாய சங்கத் தலைவர் இளங்கீரன் ஆகியோர்.

கொச்சி துறைமுகம் முதலிய மிகப்பெரிய திட்டங் களில் பணியாற்றிய அனுபவம் உடையவர்கள். அவர்களும் திட்டத்தில் ஈடுபடத் தயாராக உள்ளதாகத் தெரிவித்தனர்.

அடுத்த நாள், நெதர்லாந்து அரசின் பொரு ளாதார விவகாரத்துறை அமைச்சகத்தில் அதன் துணைப் பொது இயக்குனருடன் சந்திப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. திரு. ஸ்டெப் ஸ்மித் என்பவர் எங்களை வரவேற்று துணைப் பொது இயக்குனர் திரு. ஹான்ஸ் டி குரான் அவர்களிடம் அழைத்துச் சென்றார். அவரது துறை புதிய கண்டுபிடிப்புக்களை ஊக்கிவிப்பதற்காக உரு வாக்கப்பட்டது. அவருடன் நீண்ட நேரம் திட்டம் குறித்துக் கலந்துரையாடினோம். திட்டத்தை அவர் வெகுவாகப் பாராட்டினார். மேலும் நெதர்லாந்து அரசு இத்திட்டத்திற்கு உதவத் தயாராக இருப் பதாகவும் தெரிவித்தார்.

அதன் பிறகு சீப்பால் ரயில்வே நிலையம் சென்று ரயில் மூலம் அங்கிருந்து 150 கி.மீ. தொலைவில் வடக்கே அமைந்துள்ள ஐஜிக்லேம்ப் என்கிற நவீன எந்திரங்கள் தயாரிக்கும் தொழிற் சாலைக்குச் சென்றோம். அங்குத் தொழிற்சாலையையும் நவீன எந்திரங்கள் உற்பத்தி செய்யப் படும் முறையையும் பார்த்து விட்டு, அருகாமையில் அமைத் துள்ள அரசு தண்ணீர் விநியோக அலுவலகம் சென்றோம். அங்கு நெதர்லாந்து நாட்டில் தண்ணீர் எவ்வாறு மேலாண்மை செய்யப் படுகிறது மற்றும் விநியோகிக்கப் படுகிறது என்பது பற்றிய விளக் கங்கள் எங்களுக்கு அளிக்கப் பட்டன.

அதனை முடித்துவிட்டு அடுத்தபடியாக, நெதர்லாந்து நாட்டிலுள்ள இந்தியத் தூதர் திரு. மண்பீர் சிங் அவர்களைச் சந்திக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அன்று மாலை திட்டமிட்டபடி திரு. மண்பீர் சிங் அவர் களைச் சந்தித்தோம். அவரது தந்தை இந்தியா வில் தலைமை பொறியாளராகப் பணியாற்றிய தால், நதிகள் இணைப்புத் திட்டம் பற்றி நன்கு அறிந்து வைத்திருந்தார். எனவே நவீன நீர்வழிச் சாலைத் திட்டத்தினை எளிதில் புரிந்துகொண்டு பாராட்டினார்.

அடுத்த நாள் திரு. அருஞ்சுனை அவர்கள் எங்களை நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலுக்கு வந்து ஆர்ம்ஸ்டெர்டாம் பல்கலைக்கழகத்திற்கு அழைத்துச் சென்றார். இவர் விருதுநகர் மாவட் டத்தைச் சேர்ந்தவர். அங்குள்ள டி.என்.ஓ. என்ற நிறுவனத்தில் பணிபுரிகிறார்.

ஆர்ம்ஸ்டெர்டாம் பல்கலைக்கழகத்தில் திரு. ராபர்ட் மேஜர் என்ற மூத்த பேராசிரியருடன் கலந் துரையாடினோம். அப்பொழுது நெதர்லாந்தின் நீர்

மேலாண்மை பற்றியும் நீர்நிலைகள் பாதுகாப்பு பற்றியும் விளக்கினார். குறிப்பாக வெள்ளத்தால் கரை உடையப் போவதை முன்கூட்டியே அறிவிக்கும் தொழில்நுட்பங்கள் பற்றியும் ஒட்டுமொத்த நீர்மேலாண்மையும் ஓர் இடத்தில் கணிப்பொறி மூலம் கண்காணிக்கப்படும் தொழில்நுட்பங்கள் பற்றியும் விளக்கினார்.

திரு. அருஞ்சுனை அவர்கள் எங்களை அவரது வீட்டிற்கு விருந்திற்கு அழைத்தார். நானும் ஈசனும் அங்கு சென்றோம். திரு. ஜெயச்சந்திரன் அவர்கள் முதல் நாளே லண்டன் திரும்ப வேண்டியிருந்ததால், அவரால் திரு. அருஞ்சுனை வீட்டிற்கு வரமுடியவில்லை. திரு. அருஞ்சுனை அவர்களின் வீடு ஒரு கிராமத்தில் இருந்தது. அங்குள்ள வீடுகள் மிக நேர்த்தியாகக் கட்டப்பட்டிருந்தன. வீடுதோறும் தோட்டம் இருந்தது. 24 மணி நேரமும் தண்ணீரும் மின்சாரமும் கிடைக்கின்றன.

மேலும் அவர்கள் தோட்டத்திற்குக்கூட குடிப்பதற்குத் தகுதியான சுத்தமான தண்ணீரையே உபயோகிக்கிறார்கள். அங்குத் தண்ணீருக்கு அரசாங்கம் பணம் வசூலிப்பதில்லை. தண்ணீரைச் சுத்திகரிப்பதற்காக மட்டுமே பணம் வசூலிக்கப்படுகிறது.

இத்தனைக்கும் கடல் மட்டத்திலிருந்து 10 மீட்டர் கீழ் 50% நிலப் பகுதிகளைக் கொண்ட நாடு நெதர்லாந்து. ஆனால் முறையான தண்ணீர் மேலாண்மை மூலம் மிகச் சிறப்புடன் தண்ணீர் விநியோகிக்கப்படுவது மிகுந்த ஆச்சர்யத்தை ஏற்படுத்தியது.

திரு. அருஞ்சுனை அவர்கள் எங்களை அந்நாட்டிலுள்ள முக்கிய நீர்வழிச் சாலைகளைப் பார்வையிட அழைத்துச் சென்றார். ஆர்ம்ஸ்டெர்டாம் நகரில் சாலைகளைவிட நீர்வழிச்சாலைகளே அதிகம். ஆர்ம்ஸ்டெர்டாம் நகரமே சிறுசிறு கால்வாய்களாலும் நீர்வழிச்சாலைகளாலும் மிக அழகாகத் தோற்றமளித்தது. நீர்வழிச்சாலையில் படகு மூலம் நகரை சுற்றிப் பார்த்தோம். ஒவ்வொரு நீர்வழிச்சாலைக்கும் அதனை உருவாக்கிய அரசர் / அரசி பெயரிடப்பட்டுள்ளது.

நீர்வழிச் சாலையின் இரு மருங்கிலும் மரங்களும் அழகான கட்டடங்களும் இருந்தன. பார்ப்பதற்குப் பசுமையாகவும் இனிமையாகவும் இருந்தன. நெதர்லாந்து முழுவதும் சைக்கிளில் செல்வோர் அதிகம் காணப்பட்டனர். அவர்களை ஊக்குவிக்கும் விதமாகச் சாலையில் சைக்கிளுக்கெனத் தனிப் பாதையே கொடுக்கப்பட்டிருந்தது.

பல இடங்களில் மக்கள் சைக்கிளை ஓர் இடத்தில் விட்டுவிட்டு நீர்வழிச்சாலையில் படகு மூலம் செல்ல வேண்டிய இடங்களுக்குச் சென்று விட்டுத் திரும்புகின்றனர். உண்மையில், அந்நாடு சுற்றுச்சூழல் மாசுபாட்டைக் குறைக்க அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகிறது. இந்தியாவிலும் இதுபோல நடைமுறைக்கு வந்தால் நல்லது.

ஒரு நாள் நான் ஹோட்டலில் தங்கியிருந்த பொழுது விடுதிப் பணியாளரிடம், "குடிப்பதற்குத் தண்ணீர் வேண்டும்" என்றேன். அவர் என்னை ஏற இறங்கப் பார்த்தார். நான் "மினெரல் வாட்டர் வேண்டும்" என்றேன். அதற்கு அவர் "குளியலறையில் குழாயில் பிடித்துக் குடியுங்கள்" என்றார்.



நவீன நீர்வழிச்சாலை மற்றும் தகவல் தொழில்நுட்பக் கருத்தரங்கில் கனடா நாட்டுப் பிரதிநிதிகளுடன் பொறியாளர் ஏ.சி. காமராஜ்

உடனே அதிர்ச்சியடைந்தேன். நான் இந்தியர், நெதர்லாந்துக்குப் புதியவர் என்பதைப் புரிந்துகொண்டு அவர் "குளியலறையில் நல்ல தண்ணீர் கிடைக்கும், பிடித்துக் கொள்ளுங்கள்" என்றார். மேலும் "இங்கு அனைத்து இடங்களுக்கும் நல்ல தண்ணீரே விநியோகிக்கப்படுகிறது. இந்தத் தண்ணீர் 99.5% தூய்மையானது. மினெரல் வாட்டரைவிடச் சிறந்தது" என்றார்.

நெதர்லாந்து நாட்டில் இது முடியும் என்றால், ஏன் நம் நாட்டில் 24 மணி நேரமும் அனைத்து வீடுகளுக்கும் சுத்தமான தண்ணீர் விநியோகிக்க முடியாது. நிச்சயம் முடியும் – நவீன நீர்வழிச்சாலைத் திட்டம் செயல்பாட்டுக்கு வரும்பொழுது! நெதர்லாந்து பயணம் எங்களுக்கு மிகுந்த



கனடா நாட்டு அமைச்சர் டாக்டர் எரிக் ஹோஸ்கின்ஸ் அவர்களுடன் பொறியாளர் ஏ.சி. காமராஜ்

அப்துல்கலாம் அவர்களின் அறிவியல் ஆலோசகர் திரு.வி. பொன்ராஜ் அவர்கள் இந்த வருகைக்கு ஏற்பாடு செய்தார்.

செயல்வடிவ மாதிரியை நேரில் கண்டு கனடா நாட்டுப் பிரதிநிதிகள், மாதிரியை வெகுவாகப் பாராட்டியதுடன் மட்டுமல்லாமல், இந்தத் திட்டம் ஒரு புதுமையான திட்டம், இதுபோன்று உலகில் வேறெங்கும் இல்லை எனவும் அதே நேரத்தில் இந்தப் புதிய திட்டக் கருத்துருவை உலகில் எந்த நாட்டிலும் பயன்படுத்திக் கொள்ள முடியும் எனத் தங்களின் ஆச்சர்யத்தை வெளிப்படுத்தினர். செயல்வடிவ மாதிரியை வீடியோ எடுத்துக் கொண்டனர்.

உபயோகமாக இருந்தது.

**திட்டத்தின் செயல்வடிவ மாதிரி** : எந்த ஒரு திட்டத்தின் செயல்பாடுகளும் மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும்படி இருந்தால்தான் இத்திட்டமானது பொதுமக்களைச் சென்றடையும். இது ஒரு புதுமையானத் திட்டம். அதாவது கோதாவரியில் வெள்ளம் ஏற்படும்போது, தண்ணீரைக் காவேரிக்கு அனுப்ப முடியும். அதுபோல காவேரியில் வெள்ளம் வரும்போது, தண்ணீரைக் கோதாவரிக்கு அனுப்ப முடியும். இத்திட்டத்தின் சிறப்பம்சமான தண்ணீர், இருவழிப் பாதையில் செல்லும் என்பதைப் பலரும் எளிமையாகப் புரிந்துகொள்ள இத்திட்டத்தின் செயல்வடிவ மாதிரியானது மதுரையில் அமைக்கப்பட்டுள்ளது. இதனைப் பலரும் நேரில் கண்டு திட்டத்தின் செயல்பாடுகளைப் புரிந்து கொள்கின்றனர்.

**கனடா அழைப்பு** : 2010–ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம், கனடா நாட்டின் மிகப் பிரபலமான டொரோண்டோ நகரில் நடைபெற்ற கனடா இந்தியத் தொழில்நுட்பக் கருத்தரங்கில், மாண்புமிகு முன்னாள் குடியரசுத் தலைவரும், நவீன நீர்வழிச் சாலைத் திட்டத்தின் ஆதரவாளருமான டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல்கலாம் அவர்கள் கலந்து கொண்டார்கள். அக்கருத்தரங்கில் நான் வடிவமைத்த நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தினை விளக்கிக் கூறியதுடன், இத்திட்டத்தில் முதலீடு செய்ய கனடா நாட்டுத் தொழில் அதிபர்களுக்குப் பரிந்துரைத்தார். மேலும் அவர் நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தின் முக்கியவத்துவதைப் பற்றி விரிவாக எடுத்துரைத்தார்.

இந்த மாநாட்டின் தொடர்ச்சியாக, மாநாட்டின் துணைத்தலைவர், டாக்டர் லக்ஷ்மணன் மற்றும் அவரது குழுவினர் இந்தியாவிற்கு வருகை தந்து, மதுரைக்கு அருகில் உள்ள திட்டத்தின் செயல்வடிவ மாதிரியை நேரில் கண்டனர். மாண்புமிகு முன்னாள் குடியரசுத் தலைவர் டாக்டர் ஏ.பி.ஜே.

இந்த நிகழ்வுதான், கனடா நாட்டின் தலைநகரமான "ஒட்டாவா மற்றும் மிகப் பிரபலமான டொரண்டோ நகரில், ஏப்ரல் 2014, 23 – 25 வரை நடைபெற்ற "நவீன நீர்வழிச்சாலை மற்றும் கட்டுமானத் தொழில்நுட்பம்" குறித்த மூன்று நாள் கருத்தரங்கில், தலைமை உரையாற்ற என்னை அழைக்க வைத்தது.

நாட்டின் வளர்ச்சிக்கு மிகவும் பயன்படும் நவீன நீர்வழிச்சாலைத் தொழில்நுட்பங்களைக் குறித்து ஏப்ரல் 24–ஆம் தேதி டொரண்டோவில் நடைபெற்ற கருத்தரங்கில் நான் உரையாற்றினேன். இந்தியாவின் வளர்ச்சிக்கு மிகவும் பயன்படும் வகையில் அமைந்த தங்கநாற்கரச் சாலைத் திட்டத்தைக் குறிப்பிட்டு, அதன்மூலம் நாட்டின் எண்ணெய் செலவில் 20 சதவிகிதம் குறைவதை எடுத்துரைத்தேன்.

திட்டத்தின் சிறப்பம்சங்கள் மற்றும் பலன்களை விளக்கிக் கூறிய பிறகு, ‘‘தமிழக நதிகளை நீர்வழிச்சாலைகள் மூலம் பிணைக்கக் கூடிய தமிழ்நாடு நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தைத் தமிழக அரசு ஏற்கனவே ஏற்று கொண்டபடியால், இதில் தங்களின் முதலீட்டை வழங்குங்கள்’’ என்று கனடா நாட்டுத் தொழிலதிபர்களுக்கு அழைப்பு விடுத்தேன்.

மேலும் சிறிய மற்றும் பெரிய நீர்த்தேக்கம், நீர்வழிச்சாலை, மின்உற்பத்தித் தொகுப்பு முதலியவற்றை உள்ளடக்கிய தமிழ்நாடு நவீன நீர்வழிச்சாலைத் திட்டத்தின் மொத்த மதிப்பு ரூ.50,000 கோடி. ஆனால் இத்திட்டத்தின் மின் உற்பத்தி, நீர்வழிப் போக்குவரத்து, தேசிய நெடுஞ்சாலை, சுற்றுலா மற்றும் குடிநீர் முதலியவற்றின் மூலம் கிடைக்கும் வருமானம் ஆண்டிற்கு சுமார் ரூ. 6,300 கோடியாகும் என்பதனை எடுத்துரைத்தேன். கனடா நாட்டினர் இன்றும் திட்டதில் ஈடுபட ஆவலாய் உள்ளனர். ●




# கொல்கத்தா பாரதி தமிழ்ச்சங்க விழா

*அருட்செல்வருக்கு விருது வழங்கிச் சிறப்பித்த மேனாள் மத்திய கல்வி அமைச்சர் டாக்டர் பிரதாப் சந்திர சந்தர், கொல்கத்தா தமிழ்ச் சங்கத் தலைவர் சி.பி. நாராயணன், ஆலோசகர் டி. ஞானசேகரன், கனரா வங்கி மேலாளர் கவிஞர் அசோகன், அவ்வை நடராசன் முதலியோர்.*

12.12.2006 அன்று கொல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தில் நடைபெற்ற பாரதியார் பிறந்த நாள் விழா ஏற்பாடுகளை, அதன் ஆலோசகர் திரு. டி. ஞானசேகரன் அவர்கள் சிறப்பாகச் செய் திருந்தார்.

அருட்செல்வரின் 84–ஆவது பிறந்த நாளைக் கொண்டாடி, அவருக்குச் 'சாதனைத் தமிழர்' விருதினை மேனாள் மத்திய கல்வி அமைச்சர் டாக்டர் பிரதாப் சந்திர சந்தர் வழங்கிச் சிறப்பித் தார். அருட்செல்வருடன் தமிழறிஞர் அவ்வை நடராசன், 'ஓம் சக்தி' ஆசிரியர் திரு. பெ. சிதம்பர நாதன், திரு. மகேந்திரன் ஆகியோரும் சென் றிருந்தார்கள். கொல்கத்தா பாரதி தமிழ்ச்சங்க எழுத்தாளர்கள் நக்கீரன், மறைந்த கிருஷ்ண மூர்த்தி ஆகியோரும் கலந்து கொண்டார்கள்.

அவ்விழாவில் நடந்த கலை நிகழ்ச்சியில் கொல்கத்தா நகரத்தில் வாழ்கிற குடும்பத்தாரின் குழந்தைகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அவர்கள் பாரதியின் 'ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா' என்ற பாடலை இசைத்தபோது அருட் செல்வர் நெகிழ்ந்து போனார்.

திரு. ஞானசேகரன் அவர்கள் ஒரு தனியார் நிறுவனத்தில் மிகப்பெரிய நிர்வாகியாக உள்ளார். அவருடைய ஓய்வு நேரமே தமிழுக்குத் தொண் டாற்றுவதும், தமிழர்களுக்குச் சேவை செய்வதும் தான்.

அருட்செல்வர் 2006–இல் கொல்கத்தா வந்திருந்தபோது பாரதி தமிழ்ச் சங்கம் ஒரு சிறிய தெருவில் இருந்ததால், அதனைப் பெரிய சாலை யில் யாவரும் பார்க்கும்படியாக உருவாக்க வேண் டும் என்று விரும்பினார். அதற்காக, திரு. ஞான சேகரனிடம் ஒரு நல்ல இடம் விலைக்கு வாங்கும் படி கூறி, முன்தொகையாக ரூ. 25 லட்சம் அனுப்பி வைப்பதாகக் கூறினார்.

அருட்செல்வரின் தமிழ்ப்பற்றையும், தமிழ்மீது கொண்டிருந்த ஆர்வத்தையும் திரு. ஞானசேகரன் அவர்கள் எப்போதுமே மனதில் வைத்துப் போற்று பவர். தற்போது கொல்கத்தாவிலிருந்து அவர் 'சுனில் ஹெல்த் கேர்' என்ற நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாக டெல்லி மாநகரத்தில் பணி புரிந்து வருகிறார்.

டெல்லி வாழ் தமிழர்களுக்குச் சேவை செய் வதும், டெல்லிக்கு வருகை தருகிற தமிழர்களுக் குத் தேவையான உதவிகளைச் செய்வதும் அவரு டைய முதல் கொள்கையாகும். தமிழர்கள் தங்கள் தேவையைத் தெரிவித்தால் உடனடியாக அத னைத் தலைமேற்கொண்டு அப்பணியை முடித்து உதவக்கூடியவர்.

**'ஓம் சக்தி' பத்திரிகைக்கு உரிய ஆவண மான ஆர்.என்.ஐ. சான்றிதழைப் பெற்றுத் தருவ தில் மிகப்பெரிய உதவி செய்தார் என்பதை நன்றி யோடு நினைவு கூர்கிறோம்.** அருட்செல்வரின் பத்திரிகைக்கு இப்படி ஒரு பணி செய் ததை ஒரு பாக்கியமாக அவர் கருதி னார்.

– ந.நி.

*குழந்தைகள் 'ஒளி படைத்த கண்ணினாய் வா வா வா' என்ற பாடலைப் பாடுகிற காட்சி.*






நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கும் 'ஓம் சக்தி' ஆசிரியர் திரு. பெ. சிதம்பரநாதன் அவர்களுக்கு, தலைவர் கே.ஏ. சுப்பிரமணியன் பொன்னாடை அணிவித்துச் சிறப்பிக்கிறார். அருகில் மகேஸ்வரி சற்குரு, திரு. ஞானபாரதி அனந்தகிருஷ்ணன், செயலர் திரு. ஆர். சண்முகசுந்தரம் ஆகியோர் உள்ளனர்.

# மகாபாரதம் அன்றும் இன்றும்

**கோ**வை காந்தியடிகள் கல்வி நிறுவனத்தின் 'காந்தியடிகள் தமிழ்ப் பண்பாட்டு மையம்' "மகாபாரதம் அன்றும் இன்றும்" என்று ஒரு வித்தியாசமான இதிகாச இலக்கிய நிகழ்ச்சியை 2018 மே 19, 20 தேதிகளில் நடத்தியது.

மகாபாரதத்தில் அர்ச்சுனனைப் பற்றி 'இப்படியும் ஒரு மாணவனா?' என்ற தலைப்பில் கவிதாயினி மீ. உமா மகேஸ்வரி பேசினார். கண்ணனைப் பற்றி 'இப்படியும் ஒரு கடவுளா?' என்று முனைவர் சொ.சொ.மீ. சுந்தரம் பேசினார். கவிஞர் மகேஸ்வரி சற்குரு, 'இப்படியும் ஓர் அன்பரா?' என்று விதுரரைப் பற்றிப் பேசினார். திரு. ஞானபாரதி அனந்தகிருஷ்ணன் 'இப்படியும் ஓர் ஆசிரியரா?' என்று துரோணரைப் பற்றிப் பேசினார்.

முதல் நாள் நிகழ்ச்சிக்கு கம்பன் கலைச்செம்மல் திரு. நஞ்சுண்டன் தலைமை தாங்கினார். இரண்டாம் நாள் நிகழ்ச்சிக்கு 'ஓம் சக்தி' ஆசிரியர் திரு. பெ. சிதம்பரநாதன் தலைமை தாங்கினார்.

இந்த அருமையான நிகழ்ச்சியை காந்தியடிகள் கல்வி நிறுவனத்தின் தலைவர் திரு. கே.ஏ. சுப்பிரமணியன் அவர்களும், செயலர் திரு. ஆர். சண்முகசுந்தரம் அவர்களும் ஏற்பாடு செய்திருந்தார்கள். கவிஞர் புவியரசு அவர்கள் இவற்றையெல்லாம் ஒருங்கிணைத்தார்கள்.

மகாபாரதம் இன்றைய இளைஞர்களுக்கு மத்தியில் பரப்பப்பட வேண்டிய ஒரு மகத்தான கதை. அதனுடைய பாத்திரங்கள், அப்பாத்திரங்களின் படைப்புத் திறன், அதனை வகுத்த வியாசப் பெருமானின் விசால ஞானம் இவை அனைத்தும் இளைஞர்கள் கற்றுக்கொண்டு, வளர்கிற பருவத்திலிருந்தே அவற்றை மேலதிகமாகச் சிந்திக்க இந்த நிகழ்ச்சி உதவுகிறது என்பதில் ஐயமில்லை.

ஆண்டுதோறும் இதுபோன்ற பண்டைய இதிகாச, இலக்கியப் பாத்திரங்களைப் புதிய தலைப்புகளில் மெருகிட்டு வழங்குவோமானால், இளைய தலைமுறைக்கு உரிய ஞான உணவாக இவை அமையும்.

**– ந.நி.**



LED, கலர் டி.வி, ரெஃப்ரிஜிரேட்டர், ஏர்கன்டிஷ்னர்,
வாஷிங் மெஷின், மற்றும் அனைத்து தரமான வீட்டு உபயோக
பொருட்களை குறைந்த விலையில் வாங்க சிறந்த இடம்.
Easy Finance Options
BAJAJ Finance
Exchange offer
Gift Coupons Available
*Free gift with every purchase
*Free delivery with in city Limits
Open on Sundays
வந்து பாருங்கள்! வாங்கி மகிழுங்கள்!!
LG
SAMSUNG
SONY
PHILIPS
ONIDA
Godrej
Whirlpool
SIEMENS
IFB
VIDEOCON
Prestige
ELGI ULTRA
Preethi
V-GUARD
BOSCH
micromax
nothing like anything
HAVELLS
VOLTAS LIMITED
Butterfly
TATA Sky
Crompton Greaves
USHA
BPL
EMERGENCY LIGHT
Preethi
INDUCTION COOK TOP
EUREKA FORBES
Your friend for life
CASCADE
VENUS
WATER HEATER
*For purchase above RS.8000/- condition apply
நா. மகாலிங்கம் & கம்பெனி
68, Dr, Nanjappa Road, Near Central Bus Stand
Coimbatore - 641 018.
Ph: 2239834 / 2239841 / 2239803 / 2239811
D by sr printes 9843110277

Registered with Registrar of Newspapers for India No. 42582/83

Date of Publication
28-6-2018

Regd.No.CB/016/2018-20

OM SAKTHI - JULY - 2018